# கல்லிடைக் குறிச்சிக் கலைக் கோயில்கள்



## ச. கிருஷ்ணமூர்த்தி

# கல்லிடைக் குறிச்சிக் கலைக் கோயில்கள்

ச. கிருஷ்ணமூர்த்தி
எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ. (வரலாறு),
பி,எட்., கல்வெட்டியல் பட்டயம்.

வெளியீடு
ஆ. உண்ணாமலை
12/1, புதுப்பேட்டை வடக்குத் தெரு,
சிதம்பரம் 608001.

# Bibliographical Data


| | |
|---|---|
| Title of the book | Kallidaikkurichchi Kalaikoilgal. |
| Author | S. Krishnamoorthy M.A., (Tam) M.A.. (His) B.Ed., Dip Epgy & Arch. |
| Publisher and copy right | A. Unnamalai<br>Unnamalai Pathippagam,<br>12/1, Pudupet north street,<br>Chidambaram 608 001. |
| Language | Tamil |
| Date of Publication | December 1996 |
| Edition | First |
| Paper used | 14 point |
| Size of the book | 1/8 |
| Printing types used | 10 point |
| No. of pages | 248 |
| Composing | K. Santha |
| Printing | S. Annamalai D.P.T. |
| Proof Reading | K. Suresh M.Sc., B.Ed.<br>K. Masilamani |
| Block Making | T.D.M.S. Mayiladuthurai |
| Wrapper | Sekar Offset Chennai-5 |
| Artist | R. Saravanan Bhuvanagiri |
| Printers | P. Saravanan B.Sc.<br>Om Sakthi printers<br>1, Pudupet North Street<br>Chidambaram. |
| Price | Rs. 50/ |
| Subject | Temple Arts, Inscriptions and History. |

# Preface

Kallidaikkurichchi is a village in Ambasamudram taluk of Tirunelveli Kattabomman district. It has a glorious history of one thousand years. According to legends, the great Tamil poet as well as a saint Agasthiar lived in Pothigai mountain, which is very near to kallidaikkurichchi.

During the sangam period, the chieftains of Aay ruled this region. Then the region came under the rule of the Pandiyas. The Erichchavudaiyar temple on the northern bank of the Tambraparani has a grant given by Varaguna Pandiya. This temple is located in Ambasamudram very near to kallidaikkurichchi.

During the Chola period Ilangokkudi was renamed as Rajaraja chaturvedi mangalam. Kallidaikurichi was called kshatriyasikhamanipuram, Rayasikhamanipuram and Maditkurichchi.

Kallidaikkurichchi menas a village in the midst of the hills. Cherakumaran, Nallur, Karanthai, and Govindapadi were the other names of the village in those days.

Kallidaikkurichchi is on the border between the Pandiya country and the Chera country. So either Pandiya or Chera must have controlled this area. Their inscriptions are located here.

Seven ancient temples are inentified by the scholars in kallidaikkurichchi. The author traces the history of the seven temples in the book.

The Lakshmi Varaha Swamy temple is in the centre of the western part of the viilage. It was called Jnanapiran temple in ancient days. An inscription of Rajendra is found

in the temple. Then records of Venad kings are also found in the temple. The Venad king kothai Aditya Varman came to the throne in the 15th century. He was religious minded and patron of arts. Kallidaikkurichchi was one of his sub capitals A record of Kothai Aditya Varman refers to some gifts made to the Jnanapiran temple by one Thiruvengadamudaiyan of Kadavarayanpatti. The second inscription mentions a gift of twenty ma of land for conducting Puja in this temple, known as Veera Keralan Sandhi. The third inscription deals with a gift of paddy made by Kaikkolan kumaran Marthandan for celebrating the karthika Deepam festival in the same temple.

The Manendiappar temple of Talacheri is situated on the north eastern corner of the village. Many beautiful idols made of bronze are found in this temple. The eastern wooden gate was donated by Selvaguru Ambalam in 1725A.D who was the 12th Peedathipathi of Thiruvavaduthurai mutt. Thaligai madam, one of the branches of Thiruvaduthurai mutt, is very close to Manendiappar temple. In those days Junior Maddathipathis (Ilaya pattams) were staying in the Thaligai madam. The Manendiappar temple was under their administration. It is interesting to note that even now Thiruvavaduthurai Adheenam is associated with the temple and it is donating money for Pujas and festivals.

The Nagesvaramudayar temple is located in the Fort Street. The roof of the temple has already caved in and the walls are higly damaged. Two temples, namely Nilaiudaiya Pandeesvara mudaiyar and Nalayira Isvaramudaiyar were very famous during the Later Pandia period. Nilaiudaiya

Pandeeswara mudaiyar temple may be identified with the Nagesvaramudayar temple of the present day. The temple contains beautiful portraits and sculptures. The Nalayira Isvaramudaiyar temple is not at all existing now.

The Kosakkudi Perumal temple is situated on the southern side of the railway gate of the village. It is bigger than the other temples. This is also in ruined condition. There are three epigraphs in this temple. One inscription speaks about Ekaddandi and Triddandi Sanyasis.

The Kulasekharamudaiyar temple is located at the eastern entrance of the village. Unlike the other temples described, this is in a good state of preservation. This temple belongs to the 13th century. One of the Kaikkolas namely Udaiya Kutti was the Sri Pandaran (treasurer) of the temple.

The Pagali Koothar temple is also historically very important one. It has only two epigraphs of the Cheras (Venad kings). Now it is under the maintenance of the Kaikkola community. The same Community is also maintaining the Agasthiyar temple.

Thiru. Natana Kasinathan, Director of Archaeology has given permission and encouragement to finish this research work successfully. I convey my sincere thanks to him.

Thiru Nellai Nedumaran has furnished information about few Nadar inscriptions. Thiru. S. Ramachandran curator of Korkai has sent Valangai and Idangai insercriptions. I am thankful to both of them. I am very greatful to Seervalar Seer Sivaprapkasa Desigar of Thiruvavaduthurai Adheenam for his generous help.

# பிழை திருத்தம்

| பிழை | திருத்தம் | பக்க எண் |
|---|---|---|
| கோழர்— | சோழர் | IV |
| ஆன்மிக— | ஆன்மீக | IX |
| கலவெட்டு— | கல்வெட்டு | 1 |
| கல்லிடைக்குறிச்— | கல்லிடைக்குறிச்சி | 6 |
| இரட்டைக்துரண்கள்— | இரட்டைத்தூண்கள் | 16 |
| கடஹஸ்தம்— | கடகஹஸ்தம் | 21 |
| மானேந்தியப்பர் | கஜசம்ஹர | 24 |
| தோல்களை தமது— | தோல்களைத்தமது | 26 |
| ஆதிவராகநாள்— | ஆதிவராகனான | 30 |
| ஒலை— | ஓலை | 42 |
| கொண்ட— | தூண்கொண்ட | 44 |
| மமூ— | மழு | 48 |
| உதையமார்த்தாண்டன்— | உதயமார்த்தாண்டன் | 53,90, |
| தானந்தை— | தானத்தை | 54 |
| மன்னரி— | மன்னன் | 54 |
| ஈந்தி— | சந்ததி | 60 |
| உள்ளது— | உள்ளன | 72 |
| ஆன்ந்த— | ஆனந்த | 79 |
| புள்ளியின் — | புள்ளின் | 118 |
| உத்திரவு— | உத்தரவு | 122 126 |
| ற்குறி— | தற்குறி | 130 |
| ளிகைமடம்— | தனிகைமடம் | 154 |
| ஆதினக்கிளை — | ஆதீனக்கிளை | 179 |
| விழங்கிய— | வழங்கிய | 187 |
| இருந்திருத்கலாம்— | இருந்திருக்கலாம் | 191 |
| உய்யாரக்கொண்டார்— | உய்யக்கொண்டார் | 197 |

# பொருளடக்கம்

# அணிந்துரை

பல்லடம் மாணிக்கம்,
31, பணிபூண்டார் வீதி,
விருத்தாசலம்.

கலை, இலக்கியம், வரலாறு போன்ற துறைகள்தாம் ஓர் இனத்தின் பெருமைக்கும் தொன்மைக்கும் பண்பட்ட நாகரீகத்திற்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்வன.

இதில் வரலாற்றுத் துறையைப் பொறுத்தமட்டில் தமிழகம் இன்றுவரை குறைபாடு உடையதாகவே இருந்து வருகிறது. தமிழ் இனத்திற்கும், தமிழ் நாட்டிற்கும், தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ்க்கலைகளுக்கும் சரியான – திருத்தமான – விஞ்ஞான பூர்வமான வரலாறு எழுதப்படவில்லை.

இந்தக் குறைபாட்டினால்தான் தமிழகம் சரியான முறையில் – உரியமுறையில்–உலக அரங்கில் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு அரங்கேற முடியாமல் மயங்கி நிற்கிறது.

இளைய தலைமுறை இந்தக் குறை களைய எழுந்து விட்டது என்பதற்குச் சான்றுதான் கல்லிடைக் குறிச்சிக் கலைக்கோயில்கள் என்னும் இந்நூல்.

தாமிரபரணி நதியால் தாலாட்டப்படும் கல்லிடைக் குறிச்சி சங்ககால ஆய்குல மன்னர்களின் ஆட்சியில் இருந்த பகுதி. இது பாண்டியர் ஆட்சியிலும் சோழர்களின் ஆட்சியிலும் சேரர்களான திருவனந்தபுரம் மன்னர்களின் ஆட்சியிலும் நாயக்கமன்னர் ஆட்சியிலும் இறுதியாக ஆங்கிலேயர் ஆட்சியிலும் இருந்து வந்ததை இந்நூல் தெளிவாகச் சொல்கிறது.

கல்லிடைக் குறிச்சியில் உள்ள அனைத்துக் கோயில்களும் விரிவாகவும் தெளிவாகவும் இந்நூலில் பேசப்படுவதை இதன் தலைப்பே சொல்கிறது.

வரலாற்றுக்கு அடித்தளமாக இருப்பது கல்வெட்டுகளாகும். இந்த நூலில் இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு முதன்முதலாக வெளிவருவது நூலாசிரியரின் உழைப்புக்கும் புலமைக்கும் சான்றாக நிற்கிறது.

பல்வேறு புதிய செய்திகளை வரலாற்று வெளிச்சத்துக்குக் கொண்டு வருவது இந்நூலின் சிறப்புத் தன்மை ஆகும்.

இளங்கோய்க்குடி என்ற அழகான தமிழ்ப் பெயர் அம்பா சமுத்திரம் என மாற்றப் பட்டதைப் படிக்கிறோம். மானேந்தியப்பர், அறம் வளர்த்த நாயகி, கரிய மாணிக்கம், நாலாயிர விண்ணகர், மழவராயன், சோறாழ்வி அழகிய நாச்சி ஆகிய நல்ல தமிழ்ப்பெயர்கள் அப்படியே வழங்கப் படுவதை அறிந்து மகிழ்கிறோம்.

சதுர்வேதி மங்கலங்களும் பிரம்மதேசங்களும் உழைப்ப வருடைய நிலம் பறிக்கப்பட்டு, உழைக்காதவர்களுக்கு– உழைப்பையே அறியாதவர்களுக்கு–உழைப்பதைக் கேவலமாக நினைத்தவர்களுக்குத் தானமாக வழங்கப்பட்டுள்ளமை பற்றி கல்வெட்டுகள் மூலமாக இந்நூல் பேசுகிறது.

மானேந்தியப்பர் என்ற அழகான பெயருடைய சிவன் கோயிலும் நாலாயிர விண்ணகர் எம்பெருமான் என்ற வைணவக் கோயிலும் சிறப்பாகவும் விரிவாகவும் சொல்லப் படுகிறது.

பிள்ளைத் தமிழ் நூல்களில் சிறந்த ஒன்றாகக் கருதப் படும் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் எழுதிய பகழிக் கூத்தரைத் தமிழகம் அறியும். அவர் பெயருக்குக் காரணமான பகழிக் கூத்தர் கோயிலும் இவ்வூரில் உள்ளதை அறிகிறோம்.

தமிழோடு தொடர்புபடுத்திப் பேசப்படும் அகத்தியருக்கும் இங்குக் கோயில் உள்ளதைப் பார்க்கிறோம்.

நாட்டியக்கலையைப் பேணிக்காத்த தேவரடியார் மரபைச் சேர்ந்த சோறாழ்வி அழகிய நாச்சி என்பவள் முருகனுக்குச் சிலை அமைத்து எழுந்தருளச் செய்தது ஒரு வித்தியாசமான செய்தி.

ஆத்தாள் என்ற பெண்பாற்சொல்லை, 'ஆத்தாளை எங்கள் அபிராமவல்லியை' என்று பார்த்த நமக்கு, ஆத்தான் என்ற ஆண்பாற்சொல் (அத்தன்–அத்தா–ஆத்தான்) ஒன்று கல்வெட்டு வாயிலாக இங்கே அறிமுகப்பட்டு வியப்பைத் தருகிறது.

இந்நூலில் வரலாறு கட்டடக்கலை, சிற்பக்கலை, தொல் பொருள் ஆய்வு, இலக்கியப் பெயராய்வு, சமூக இயல் என்று பல்வேறு காலெடுத்துப் பாய்கிறது.

இறுதியாக உள்ள இரு பகுதிகளும் நூலுக்கே மணி முடியாகத் திகழ்வதை உணர்ந்து ஆசிரியரைப் பாராட்டு கிறோம்.

சான்றோர் சாணாராக மாற்றப்பட்ட சோகமும் நாடாள்வோர் நாடாராக மாற்றப்பட்ட அவலமும் நம் நெஞ்சை நெருடுகிறது. படைவீரர்களாகவும் ஆடை நெய்வோர்களாகவும் இருந்த கைக்கோளர்களுக்கு நேர்ந்த இன்னல்கள் இந்தச்சமுதாயம் எப்படிச் சின்னாப் பின்னமாக்கப்பட்டது என்பதைக் காட்டுகிறது. உதையன்ன சிவங்கான அய்யன் முதலாக இராமச்சன் ஈறாக உள்ள 23 பேருக்கு ஆதிக்கச் சாதியினரால் அநியாயமாக விதிக்கப்பட்ட மரண தண்டனை பற்றிய கல்வெட்டு செய்தி, பாண்டிய நாட்டில் சம்பந்தரால் சமணர் கழுவேற்றியதை நினைவுபடுத்தி இதயத்தைப் பதைபதைக்கச் செய்கிறது.

வரலாறு என்பது கோயில்களையும் சிற்பங்களையும் அரசர்களோடு பேசுவது என்றில்லாமல் மக்களைப் பற்றியும் அவர்கள் வாழ்வின் இன்பதுன்பங்கள் பற்றியும் பேசுவது இது தான் உண்மையான–சரியான வரலாறு என்று சொல்லச் செய்கிறது.

திருமூலரைத் தமிழுக்கும் தமிழகத்திற்கும் தந்த திருவாவடுதுறை ஆதீனத்தின் கிளையொன்று கல்லிடைக் குறிச்சியில் இருக்கிறது. இதன் விளக்கமான செய்திகள் மனதிற்கு நிறைவைத் தருகின்றது.

இப்படி நூல் நெடுக உழைப்பையும் சிந்தனையையும் செலவிட்ட ஆசிரியர் ச. கிருஷ்ணமூர்த்திக்கு நம் பாராட்டுக் களும் வாழ்த்துக்களும் உரித்தாகட்டும்.

என் அன்பிற்குரிய இனிய மாணவர் ச. கிருஷ்ணமூர்த்தி தொல்பொருள் ஆய்வாளராகவும் வரலாற்று ஆசிரியராகவும் இருப்பதைப் பார்த்து ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தாயாக நான் இருக்கிறேன்.

தென்னிந்திய வரலாற்றை, சோழர் வரலாற்றை, சீரும் சிறப்புமாக எழுதிய கே. ஏ. நிலகண்டசாஸ்திரியார் பிறந்த ஊரான கல்லிடைக்குறிச்சியின் வரலாற்றை சான்றாதாரங் களோடு விளக்கமாக எழுதிய ஆசிரியர் ச. கிருஷ்ணமூர்த்தி யைத் தமிழ்கூறு நல்லுலகமும் பாராட்டி வாழ்த்தட்டும்.

அன்புள்ள

**பல்லடம் மாணிக்கம்**

# முன்னுரை

விக்கிரம சிங்கபுரம் என்ற ஊரின் வரலாற்றையும் கல்லிடைக்குறிச்சியின் வரலாற்றையும் ஆய்வு செய்து, நூலாக வழங்குமாறு திருவாவடுதுறை ஆதீனத்தின் குருமகான் சீர்வளர் சீர் சிவப்பிரகாசர் அருளாணை இட்டிருந்தார்கள். யானும் 'விக்கிரமசிங்கபுர உலா' என்ற பெயரில் விக்கிரம சிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில் திருப்பணிக் குழுவிடம் கையெழுத்துப் பிரதியினை வழங்கியிருந்தேன். என்னுடைய அவப்பேற்றின் காரணமாகச் சிவந்தியப்பர் கோயில் கும்பாபிஷேகத்தன்று (19—8—96) நூல் வெளிவரவில்லை. எனினும் திருவாவடுதுறை ஆதீனக்குருமகான் ஆசியினால் விக்கிரமசிங்கபுர உலா மிகவும் சுருக்கப்பட்டு கல்லிடைக் குறிச்சிக் கலைக்கோயில்கள் என்ற தலைப்பில் தற்போது வெளிவருகிறது. நூல் வெளிவர, பலவகையிலும் உதவிபுரிந்த குருமகானை வணங்குகிறேன்.

திரு. நெல்லை நெடுமாறன், நாடார் தொடர்பாகப் பல விவரங்களைக் கூறியதுடன் ஒல்லும் வகையில் எல்லாம் உதவி புரிந்துள்ளார். அவருக்கு என நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதிகள், ஆண்டறிக்கைகள் இந்நூல் எழுதத்துணை புரிந்தன. இவ்வூரில் கல்வெட்டுத்துறை இன்னும் படியெடுக்காத கல்வெட்டுகளும் உள்ளன. மிகுதி யான கல்வெட்டுகளையும் ஏழு தொன்மையான கோயில் களையும் கொண்ட இவ்வூருக்கென்று தனிநூல் எழுத திருவருளே எனக்குத் துணை நின்றது.

நூலின் தொடக்கத்தில் கல்லிடைக்குறிச்சி அறிமுகம் என்ற தலைப்பில் ஊர்ப்பெயராய்வு, ஊரின் அமைப்பு, ஊரின் சுருங்கிய வர்லாறு ஆகியவற்றை எழுதியுள்ளேன்.

இரண்டாவதாக மானேந்தியர் கோயில் என்ற தலைப்பில் கோயில் கட்டடக்கலை, கற்சிற்பங்கள், மரச்சிற்பங்கள், செப்புத்திருமேனிகள். தலபுராணவரலாறு ஆகியவை ஆய்வு செய்துள்ளேன். பதிப்பிக்கப்படாத கல்வெட்டுகளின் மூலங்

களை இணைத்ததுடன் கல்வெட்டுகளின் அடிப்படையில் வரலாறும் குறிப்பிட்டுள்ளேன். மானேந்தியப்பர் என்ற சொல்லே நல்ல தமிழ்ச் சொல்லன்றோ?

கன்னடியன் கால்வாய்க்கருகே உள்ள சுப்பிரமணியர் மற்றும் விநாயகர் கோயில்களை மூன்றாவதாக ஆய்வு செய்துள்ளேன். சுப்பிரமணியர் கோயிலில் மிகுதியான சிற்பங்களும் செப்புச்சிலைகளும் உள்ளன.

பாண்டிய மன்னன் குலசேகரன் பெயரில் அமைந்த குலசேகரமுடையார் கோயிலை மிகவிரிவாக நான்காவதாக ஆய்ந்துள்ளேன். மேலும் இக்கோயிலில் பதிப்பிக்கப்படாமல் இருக்கும் கல்வெட்டுகளின் மூலங்களையும் தகுந்த குறிப்புகளுடன் எழுதியுள்ளேன்.

கல்வெட்டுகளில் பெரியபிரான் எனக்குறிப்பிடப்பட்ட கோயில் தற்போது கொசக்குடி பெருமாள் கோயில் என வழங்கப்படுகிறது. கம்பீரமான கட்டட அமைப்பைக் கொண்டுள்ள இக்கோயிலை ஐந்தாவதாக எடுத்துக் கொண்டுள்ளேன். இக்கோயிலும் பாண்டியர் கட்டிய கோயிலேயாகும்.

ஆறாவதாகப் பகழிக் கூத்தர் கோயில் என்ற சிவன் கோயிலை விளக்கியுள்ளேன். இக்கோயில் தொடக்கத்தில் அய்யனார் கோயிலாக இருந்துள்ளது. கோயிலில் உள்ள கேரளமன்னர் கல்வெட்டுகளின் மூலங்களை இணைத் துள்ளேன். இக்கோயில் கைக்கோள மரபினர் கோயிலாகும்.

ஏழாவதாகக் கைக்கோளர்களின் அகத்தியர் கோயிலை ஆய்வு செய்துள்ளேன். எட்டாவதாக இலக்குமிவராகர் கோயில் குறித்து விரிவாக விளக்கியுள்ளேன். கல்வெட்டுகளில் இக்கோயில் இறைவன் ஞானபிரான் என்றே வழங்கப் பட்டுள்ளான். இப்பகுதியை எழுத இக்கோயில் கும்பாபிஷேக மலர் துணைபுரிந்தது. எனினும் கோயிலில் உள்ள அச்சில் வராத கல்வெட்டுகளின் மூலங்களை இப்பகுதியில் சேர்த்துள்ளேன். மக்களின் சமூக அமைப்பையும் திருவிதாங்கூர் மன்னர் வரலாற்றினையும் தொட்டுக் காட்டியுள்ளேன். மேலும் கோயிலில் நடைபெறும் விழாக்களையும் ஊர்ப்பெரும்புள்ளி களையும் குறிப்பிட்டுள்ளேன்.

ஒன்பதாவதாக நல்லமர்கோயில் என்றும் நாகேஸ்வர முடையார் கோயில் என்றும் வழங்கப்படும் நிலைய உடைய பாண்டீஸ்வரமுடையார் கோயிலை எழுதியுள்ளேன். இக் கோயிலில்தான் மிகுதியான கல்வெட்டுகள் உள்ளன. அரிய புடைப்புச் சிற்பங்களும் இங்குதான் உள்ளன. எனவே கல்வெட்டுச் சிறப்புச் செய்திகளுடன் சிற்பங்களின் நுட்பங் களையும் விரிவாக ஆய்வு செய்துள்ளேன்.

இங்குள்ள கல்வெட்டுகளின் மூலம், நிலைய உடைய பாண்டீஸ்வரமுடையார் மட்டுமின்றி நாலாயிர ஈஸ்வர முடையார் என்ற கோயிலும் ஆய்வு செய்யப் படுகிறது.

பத்தாவதாக இல்லாத கோயில் ஒன்றின் இனிய வரலாற்றினை எழுதியுள்ளேன். இல்லாத கோயிலின் பெயர் ஶ்ரீகிருஷ்ணர் கோயில் ஆகும். இக்கோயில் கல்வெட்டுகளில் நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில் என வழங்கப் பட்டுள்ளது. கோயிலும் கல்வெட்டுகளும் இன்றில்லை யெனினும் கல்வெட்டுகளின் மூலங்கள் தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதியில் காண்கிறோம்.

பதினொன்றாவதாகத் திருவாவடுதுறையின் கிளை மடமான தளிகை மடத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டேன். இம்மடத்தில் ஐந்து கல்வெட்டுகளைக் கண்டுபிடித்து கல்வெட்டுகளின் மூலங்களை இணைத்துள்ளேன். மடத்தின் வரலாற்றையும் சுருக்கமாக எழுதியுள்ளேன். மடத்தில் உள்ள மரச்சிற்பங்கள் அரிய கலைப் படைப்பாகும். இங்குள்ள அர்த்தனாரி சிற்பத்தை இந்த நூலின் பின்னட்டையில் ஓவியமாக ஓவியர் வரைந்துள்ளார்.

தளிகை மடம் அருகில் வீரசைவ மடமொன்று இருப் பினும் வரலாற்றுக் குறிப்பு இல்லாததால் அதனை ஆய்வு செய்யவில்லை. மதுரை திருஞான சம்பந்தர் மடம் குறித்த கல்வெட்டு ஒன்று இருப்பதால் அம்மடத்தைப் பன்னிரண்டாவதாக மிகவும் சுருக்கமாக எழுதியுள்ளேன். தற்போதும் மதுரையில் திருஞான சம்பந்தர் மடம் சிறப்பாக இயங்கி வருவதைப் பலரும் அறிவர்.

சென்னை ஆழ்வார்ப் பேட்டை மாநகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் நான் கல்வி கற்றபோது 1966 இல் தமிழாசிரியராக இருந்து தமிழுணர்வு ஊட்டியவர் பல்லடம் மாணிக்கம் ஆவார். 30 ஆண்டுகள் கழித்து என்னுடைய ஆசிரியரைக் காணும் பேறு பெற்றேன். அப்பெருமகனார் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார். நூல் எழுத வித்திட்டவர் மனித நேயம் மிக்க துறசை ஆதீனக் குருமகான் சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிகர். அணிந்துரை வழங்கியவர் தமிழ்ப் பற்றோடு பகுத்தறிவில் ஈடுபாடுள்ள பல்லடம் மாணிக்கம். இதுவும் இறைவன் திருவருளே போலும்.

கல்வெட்டில் எனக்கு ஈடுபாடு உண்டாக்கிய கலைமாமணி டாக்டர் இரா.நாகசாமியை நினைந்து வணங்குகிறேன்.

என்னுடைய உழைப்பையும் கண்டு பிடிப்புகளையும் மனந்திறந்து பாராட்டும் என்னுடைய ஆசிரியரும் இயக்கு நருமான நடன. காசிநாதன் அவர்கள் இந்நூல் எழுத அனுமதி தந்துள்ளார்கள். அதற்காக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

மைசூரில் உள்ள மத்திய அரசு கல்வெட்டுத்துறைக்கும் எம் துறை நண்பர்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்வுக்கு உதவியாகப் பிழை திருத்தம் செய்வதிலும் சொல்லடைவு தயாரிப்பதிலும் துணை புரிந்த என் மகன் கி. மாசிலாமணியைப் பாராட்டுகிறேன்.

கையெழுத்துப் பிரதியை நகல் செய்து தந்த இரா. கோபுவை வாழ்த்துகிறேன்.

சிறப்பான முறையில் அச்சிட்டுத் தந்த ஓம் சக்தி நிறுவனத்தாருக்கும் நன்முறையில் நூலைப் பதிப்பித்த பதிப்பகத்தாருக்கும் என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'தெய்வம் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்' என்ற இளங்கோவடிகளின் கருத்திற்கேற்ப எல்லாம் வல்ல இறைவன் ஆடலரசனை வணங்கி, திருவாவடுதுறை ஆதீனக் குருமகான் சீர்வளர் சீர் சிவப்பிரகாச தேசிகருக்கு இந்நூலைக் காணிக்கை யாக்குகிறேன்.

# பதிப்புரை

திருவாவடுதுறை ஆதீனக் குருமகான் சீர்வளர் சீர் சிவப்பிரகாச தேசிகர் தலைமையில் நடைபெற்ற விக்கிரம சிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில் குடமுழுக்கு விழாவில் கலந்து கொள்ளும் பேறு எனக்கும் கிட்டியது. விழாவில் கலந்து கொண்டபின், பாபநாசம் மற்றும் கல்லிடைக் குறிச்சி ஊர்களுக்குச் சென்று கோயில்களை வழிபட்டேன். கல்லிடைக் குறிச்சியில் உள்ள தளிகை மடம் என்னை மிகவும் கவர்ந்தது. இவ்வூரில் சிதைந்த நிலையில் உள்ள கோயில்களைப் பார்த்த போது மனம் வேதனை அடைந்தது. புதிது புதிதாகக் கோயில்களைக் கட்டுவதற்குச் செலவிடும் பணத்தை, ஏன் புராதனமான கோயில்களைச் செப்பனிடுவதற்குப் பயன் படுத்தக் கூடாது? ஆன்மிக வாதிகள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

'கல்லிடைக்குறிச்சிக் கலைக்கோயில்கள்' பாமர மக்களுக்காக எழுதப்பட்ட ஆன்மிக நூல். அதே நேரத்தில் தொல் பொருள் ஆய்வில் ஈடுபடுபவர்களுக்காகக் கல்வெட்டு களின் மூலங்களும் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளது. உடல் நலம் குன்றியிருந்த போதும், இந்நூல் ஆய்வுக்காகப் பலமுறை கல்லிடைக் குறிச்சிக்கு ஆசிரியர் சென்று வந்துள்ளார்.

ஆசிரியரின் தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும், திருவோத்தூர் வரலாறு, வரலாற்றில் வல்லம், போன்ற நூல்களை வெள்ளையாம்பட்டு சுந்தரம் பதிப்பித்து வழி காட்டினார். அவருடைய வழியில் நின்று இச்சிறு நூல் பதிப்பிக்கப் படுகிறது. வரலாற்று நாயகராக உள்ள வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலைச் சிறப்பாக அச்சிட்டு தந்த ஓம் சக்தி அச்சகத்திற்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். அழகாக ஓவியம் வரைந்து தந்த புவனகிரி ஓவியர் திரு. சரவணனைப் பாராட்டுகிறோம். நூல் உருவாவதற்கு உதவி புரிந்த நன்னெஞ்சங்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆ. உண்ணாமலை



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை
ஆதீனத்து இருபத்து மூன்றாவது குருமகாசந்நிதானம்
சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிகர் அவர்கள்



ஆடலரசன் (பெரியது) பக்கம் 18



ஆடலரசன் (சிறியது) பக்கம் 19

குலசேகர முடையார் கோயில்



அறம் வளர்த்த நாயகி அம்மன் பக்கம் 50



விமானத்தோற்றம் பக்கம் 50

காசி விஸ்வநாதர், பிரியா விடைநாயகி



பக்கம் 36

சுப்பிரமணிய சுவாமி கோயில்



வள்ளி, ஆறுமுகம், தெய்வயானை
செப்புத்திருமேனிகள்
பக்கம் 40



நாயன்மார் நால்வர் செப்புச்சிலைகள்
பக்கம் 18, 21



காரைக்கால் அம்மையார் கற்சிலை
பக்கம் 17

நாகேஸ்வரமுடையார் கோயில்



கருவறை வடக்குத் தோற்றம் பக்கம் 116

கொசக்குடிப் பெருமாள் கோயில்



விமானத்தோற்றம் பக்கம் 65

[illegible]



இளைய பட்டங்களில் ஒருவர் பக்கம் 156



தம்பிரான்களில் ஒருவர் பக்கம் 155

மானேந்தியப்பர் கோயில்



கண்ணப்ப நாயனார் பக்கம் 13

பாபநாச சுவாமி கோயிலில் உள்ள
பின்னம்பட்ட நந்தி கற்சிற்பம்



இது போன்ற நந்தி நாகேஸ்வரமுடையார்
கோயிலில் உள்ளது.
பக்கம் 116

# கல்லிடைக்குறிச்சி அறிமுகம்

**அமைவிடம்:**

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தின் தென் மேற்குத் திசையில் நெல்லை - அம்பாசமுத்திரம் இடையே கல்லிடைக்குறிச்சி அமைந்துள்ளது 8°-41 வடக்கு அட்சரேகை; 77°-27, கிழக்கு தீர்க்க ரேகையில் ஊர் அமைந்துள்ளது. நெல்லையில் இருந்து சரியாக 38 கி.மீ. தூரத்தில் இவ்வூர் உள்ளது. கல்லிடைக் குறிச்சிக்குத் தென்புறம் வீரவ நல்லூர் என்ற வீரைமா நகரும் வடக்கில் அம்பா சமுத்திரமும் உள்ளன. தண்பொருநையாற்றின் தென்புறம், கல்லிடைக் குறிச்சியும் வடக்கில் அம்பா சமுத்திரமும் அமைந்துள்ளன.

**பிடாகை:**

அம்பாசமுத்திரம் என்ற ஊர் முதலில் இளங்கோய்க்குடி என வழங்கப்பட்டது. பின் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் ஒரு பகுதியாக மாறியது. சோழர் காலத்தில் இளங்கோய்க்குடி, பிரம்மதேசம், பன்னார்கோயில், இடைக்கால் (தென் திருவாரூர்), கல்லிடைக் குறிச்சி ஆகியன இணைந்து இராஜராஜ சதுர்வேதி மங்கலம் என வழங்கப்பட்டது. இந்த இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் பிடாகையாகக் (சிற்றூராகக்) கல்லிடைக் குறிச்சி விளங்கியது. இளங்கோய்க் குடி பின்னர், அம்பா சமுத்திரமாக மாறியது, எனவே அம்பாசமுத்திரத்தின் பிடாகையாகக் கல்லிடைக் குறிச்சி விளங்கியது. இன்றும் அம்பா சமுத்திரம் வட்டத்தில் ஓர் ஊராட்சியாகக் கல்லிடைக் குறிச்சி விளங்கி வருகிறது.

**பலதளிகள்:**

அம்பா சமுத்திரத்தில் பல கோயில்கள் இருப்பது போல் கல்லிடைக் குறிச்சியிலும் உள்ளன. இங்குள்ள தொன்மையான கோயில்களையும் கல்வெட்டுகளையும் ஆய்வு செய்வோம். கல்லிடைக் குறிச்சி, பல பகுதிகளை உடையது. வெள்ளாங்குழி என்ற பகுதி கி.பி. 1598 இல் வீரரூப சமுத்திரமாக மாறியது இங்கும் சில கல்வெட்டுகள் உள்ளன.

**நெடுஞ்சாலை:**

பெரும்பாலான ஊர்கள் நெடுஞ்சாலைக்குத் தள்ளியே இருக்கும். சில ஊர்கள் நெடுஞ்சாலையின் ஒதுக்குப் புறமாக, வலப்புறம் அல்லது இடப்புறம் அமைந்திருக்கும். கல்லிடைக் குறிச்சி போன்ற சில ஊர்களே நெடுஞ்சாலையின் இருபுறமும் மக்கள் வாழிடங்களைக் கொண்டிருக்கின்றன. இதனால் மக்கள் போக்குவரத்திற்குச் சிரமப்பட வேண்டியதில்லை. இவ்வூரில் பேருந்து நிலையம் மையத்தில் அமையாதது குறையேயாகும்.

**கன்னடியன் கால்:**

கல்லிடைக் குறிச்சி நீர்வளமுள்ள ஊராகும். கன்னடியன் கால் என்ற கால்வாயும் தண்பொருநை நதியும் மணிமுத்தாறு நதியும் இவ்வூரில் பாய்கின்றன. 'புனலான கல்லிடைக் குறிச்சி' எனச் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

**சிலசாலிபுரம்:**

வடமொழியில் உள்ள மத்சய புராணத்தில் சிலசாலிபுரம் எனக் கல்லிடைக் குறிச்சி குறிக்கப்பட்டுள்ளது. சிலா என்பது கல் என்று பொருள்படும். குறிச்சியே புரமாக மாறியுள்ளது. மறைக்காடு வேதாரண்யம் ஆனது. கல்லிடைக்குறிச்சியானது சிலசாலிபுரமாயிற்று. விழுப்புரம் இராமசாமி படையாட்சியார் மாவட்டத்தில் கள்ளக்குறிச்சி ஒரு வட்டத்தின் பெயராக உள்ளது. இவ்வூர் தொடக்கத்தில் கல்லைக் குறிச்சி என வழங்கப்பட்டதைக் கல்வெட்டு மூலம் அறிகிறோம். கல்லடைக் குறிச்சி என்ற பெயரே கல்லிடைக் குறிச்சியாக இன்று வழங்கப்படுகிறது. போஜநாடி என்ற நூலில் மத்ஸய ஹரிஸ்யம் என்று கல்லிடைக் குறிச்சி வழங்கப்பட்டுள்ளது.

**நல்லூர்:**

மானேந்தியப்பர் கோயில் கல்வெட்டொன்று இவ்வூரை நல்லூர் என்று குறிப்பிடுகிறது.

**கரந்தை:**

செய்யாறு வட்டத்தில் கரந்தை என்ற பெயரில் ஓர் ஊர் உள்ளது. இது சமணப்பதியாகும். தஞ்சாவூர் நகரிலும்

கரந்தை அல்லது கருந்தட்டாங்குடி என்ற ஊர் உள்ளது. ஆதியில் இவ்வூரும் சமணப்பதியாக இருந்துள்ளது. கல்லிடைக் குறிச்சியும் கரந்தை என வழங்கப்பட்டுள்ளதால் முன்னர் சமணர் இங்கு வாழ்ந்திருக்க வேண்டும். வருக்கக் கோவை என்ற நூல் கரந்தை என்ற பெயரைக் குறிப்பிடுகிறது.

**மகிழக்குறிச்சி?**

கல்லிடைக் குறிச்சி, மகிழக்குறிச்சி என வழங்கப் பட்டுள்ளதைக் கல்வெட்டின் மூலம் அறிகிறோம். முதல் இராசேந்திரன் காலத்தில் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்து தென் பிடாகை மகிழக் குறிச்சி (கல்லிடைக் குறிச்சி) என்ற ஊரைச் சேர்ந்த வெள்ளாளன் குருந்தன் என்பவன், தன் மாமன் கூற்றன் நக்கவீரானைச் சார்த்தி, இருபத்தைந்து ஆடுகளை அம்பாசமுத்திரம் திருமூலஸ்தானமுடையார் கோயிலுக்கு அளித்துள்ளான். மற்றொருவன் வியாபாரி நீலன் பண்டாரி. அரை விளக்கு வைக்க 12-1/2 பசுக்களை நன் கொடையாக இவன் அளித்துள்ளான். தினமும் திரு மூலஸ்தானமுடையார் கோயிலுக்கு ஆழாக்கு நெய் வழங்க குற்றாலன் கூத்தன் சம்மதிக்கிறான். இக்குற்றாலன் கூத்தனுக்குப் பிணையாகச் 'செந்தில் குமாரன்' இருந்தான். காலம் கி.பி.1020–21 ஆகும். மகிழக் குறிச்சி என்ற பெயருடன் மதிட் குறிச்சி என்ற பெயரும் மதுக்குறிச்சி என்ற பெயரும் இவ்வூருக்கு இருந்ததைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**இராயசிகாமணி:**

சுந்தர சோழ பாண்டியன் என்ற சோழ பாண்டிய பிரதிநிதியின் மூலம், சோழர் ஆட்சி நடந்த போது, இராஜராஜ சதுர்வேதி மங்கலத்துப் பிடாகை இராய சிகாமணி என்ற ஊரில் இருக்கும் வெள்ளாளன் புவனி பெருவழியான் என்பவன், விளக்கு வைக்க முதலீடு செய்கிறான். இங்குச் சுட்டப்படும் இராய சிகாமணி, கல்லிடைக் குறிச்சியாகும். சத்ரிய சிகாமணி என்ற சொல்லே இராய சிகாமணியாயிற்று போலும். மற்றொரு கல்வெட்டில் இராஜராஜ பாண்டிய நாட்டு முடிகொண்ட சோழ வளநாட்டு பிரம்மதேயம்

ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து திருச்சாலைத் துறை ஸ்ரீ மூலஸ்தான ஆழ்வார் தேவற்கு சத்திரிய சிகாமணி புரத்தில் இருக்கும் வியாபாரி இரு கையன் என்பவன், முதுகண்ணாக இருக்க 'சேந்தன் நம்பி நங்கை' என்ற பெண் விளக்கு வைத்துள்ளார். சத்திரிய சிகாமணிபுரம் என்பது கல்லிடைக் குறிச்சியேயாகும்.

**சதுர்வேதி மங்கலம்**

இராஜராஜ பாண்டிய நாட்டு முடிகொண்ட சோழ வளநாட்டு முள்ளி நாட்டு இராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் பிரம்மதேயமாக இருந்துள்ளது. முள்ளூர் மலை இம்மாவட்டத்தில் உள்ளது. இதையொட்டி முள்ளிநாடு என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. முள்ளூர் மலையும் முள்ளூர் கானமும் திருக்கோவலூரையொட்டியும் உள்ளன. சங்க காலத்தில் மலையமான் திருமுடிக்காரி இங்கிருந்து நாடாண்டுள்ளான், பிற்காலத்திலும் இப்பெயர் தொடர்ந்தது. இன்றும் முள்ளூர் மலை உள்ளது. இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் தென் புறம் இளங்கோக்குடி வேளாக் குறிச்சி இருந்தது. இதற்கும் தென்புறம் கல்லிடைக் குறிச்சி அமைந்திருந்தது. கிழக்கில் அட்டா நல்லூர், சொக்கங்குளம், வழுதியூர் அமைந்திருந்தன. வடகிழக்கில் இடைக்கால் (வட தலைக்குளம்) அமைந்திருந்தது. வடமேற்கில் காடேறு என்ற ஆழ்வார்க் குறிச்சி அமைந் திருந்தது. பிரம்மதேசம் என்ற ஊர், இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் நடுவில் அமைந்திருந்தது. இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் பன்னிரண்டு பகுதிகள் இருந்தன.
அவை வருமாறு:

1) இராஜகேசரி (2) மும்முடி சோழசேரி (3) அருள்மொழி தேவசேரி (4) நித்ய வினோத சேரி (5) சோழேந்திர சிங்கசேரி (6) சுந்தர சோழசேரி (7) வானவன் மாதேவிசேரி (8) உத்தம சோழசேரி (9) செம்பியன் மாதேவிசேரி (10) குந்தவை சேரி (11) பஞ்சவன் மாதேவிசேரி (12) லோக மாதேவிசேரி

இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் 10 சேரிகளும் ஜனநாத சதுர்வேதி மங்கலத்தில் 11 சேரிகளும் இருந்துள்ளதை முதலாம் இராசேந்திரன் வெளியிட்ட எசாலம் செப்பேட்டின்

மூலம் அறிகிறோம். எண்ணாயிரம், தில்லை போன்ற ஊர்கள் தனியூர் பிரம்மதேயங்களாக விளங்க, அம்பா சமுத்திரத்தில் இருந்த இராஜராஜ சதுர்வேதி மங்கலம் தனியூராக இல்லை. எசாலம் செப்பேட்டில் வரும் இரண்டு சதுர்வேதி மங்கலங்களிலும் உள்ள சேரிகளின் பெயர்கள் சோழ மன்னர் குடும்பத்தாருடைய பெயர்களாகவே உள்ளன. அம்பாசமுத்திர சதுர்வேதி மங்கலத்தில் வரும் சேரிகளின் பெயர்களும் சோழ மன்னர் குடும்பப் பெயர்களாகவே உள்ளன.

**பாண்டியர் ஆட்சி:**

வரகுண மகராசன் என்ற பாண்டிய மன்னன், அம்பா சமுத்திரம் என்ற இளங்கோய்க் குடியில் கல்வெட்டு ஒன்றை வெட்டி வைத்துள்ளான். இவனுடைய மகன் மாறன் சடையனுடைய கல்வெட்டும் இவ்வூரில் உள்ளது. இளங்கோய்க்குடி அருகில் கல்விடைக் குறிச்சி உள்ளதால் முற்காலப் பாண்டியர் காலத்தில் பாண்டியர்களால் கல்லிடைக் குறிச்சி ஆளப்பட்டது எனலாம். சங்க காலத்தில் ஆய் மரபினர் என்ற சிற்றரசர் பாண்டியரின் கீழ் இருந்து பொதிய மலையைச் சுற்றி நாடாண்டனர் போலும். பாண்டியநாட்டைக் களப்பிரர் ஆண்ட போது, இப்பகுதியும் அவர்கள் ஆட்சியில் இருந்திருக்க வேண்டும்.

**சோழர் ஆட்சி:**

முதலாம் பராந்தகனும் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழனும் பாண்டிய நாட்டைவென்றாலும் முதலாம் இராசராசன் காலத்தில் தான் சோழரின் கீழ்ப் பாண்டிய நாடு ஆளப்பட்டது எனலாம். முதலாம் இராசேந்திரனின் மகன் மதுரையில் இருந்து சோழ பாண்டிய பிரதிநிதியாக நாட்டை ஆள முற்பட்டான். முதலாம் இராசேந்திரன் மற்றும் அவனுடைய பிள்ளைகளின் கல்வெட்டுகள் இளங்கோய்க் குடியை அடுத்த மன்னார்கோயிலில் உள்ளன. சுற்றிலும் பல ஊர்களிலும் உள்ளன. கி.பி. 11 ஆம் நூற்றாண்டில் இளங்கோய்க்குடி பெயர் மறைந்து இராசராச சதுர்வேதி மங்கலமாக மாறியது. கல்லிடைக்குறிச்சி என்ற ஊர் க்ஷத்திரிய சிகாமணிபுரமாக மாறிற்று. இராசராசனின் பட்டப் பெயர்

களில் சத்திரிய சிகாமணியும் ஒன்றாகும். அம்பா சமுத்திரம் சிவன் கோயிலில் உள்ள சில கல்வெட்டுகள் சத்திரிய சிகா மணிபுரமாகிய கல்லிடைக் குறிச்சியைக் குறிப்பிட்டுள்ளன. முற்காலப் பாண்டியர் காலத்திலும் சோழ பாண்டிய பிரதி நிதிகள் ஆட்சியின் போதும் அம்பாசமுத்திரம், பிரம்ம தேசம், மன்னார் கோயில், போன்ற ஊர்கள் பெற்றச் சிறப்பினைக் கல்லிடைக் குறிச்சி பெறவில்லை. எனினும் இராசராச சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பிடாகையாகக் கல்லிடைக் குறிச்சி இருந்துள்ளது.

**பிற்காலப் பாண்டியர்கள்:**

சோழ பாண்டிய பிரதிநிதிகளை விரட்டிய பின் பாண்டிய நாடு மீண்டும் பாண்டியர்களால் ஆளப்பட்டது. இக்காலத்தில் கல்லிடைக் குறிச்சியில் பல கோயில்கள் எழுப்பப்பட்டன. அம்பா சமுத்திரத்தின் அளவுக்கு இவ்வூரும் புகழ் பெற்றது. நாலாயிர விண்ணகர்பெருமான் கோயில், நாலாயிர ஈஸ்வர முடையார் கோயில், நிலைய உடைய பாண்டீஸ்வரமுடையார் கோயில், பெரியபிரான் கோயில், குலசேகரமுடையார் கோயில், மானேந்தியப்பர் கோயில், விநாயகர் கோயில் போன்ற கோயில்கள் உருவாயின. ஞானபிரான் என்ற இலட்சுமி நரசிம்ம பெருமான் கோயில் திருப்பணி நிகழ்த்தப் பெற்றது.

**சேர மன்னர்கள்:**

பிற்காலப் பாண்டியர் காலத்தில் புகழ் பெற்ற ஊராக இருந்த கல்லிடைக் குறிச்சி திருவிதாங்கூர் சேர மரபினர் காலத்தில் மிகவும் புகழ் பெற்ற ஊராக மாறியது. சேர மன்னர்களுக்குரிய கோட்டைகளுள் ஒன்று; இவ்வூரில் ஏற் பட்டது. ரவிவர்மன் தொடங்கி மார்த்தாண்டவர்மன் வரை உள்ள சேர மன்னர் (1729-1758 வரை ஆண்டவர்) காலங் களில் இவ்வூர் சேரர் பிடியில் பொதுவாக இருந்துள்ளது.

**நாயக்கர்கள்:**

விஜய நகரப் பேரரசின் கீழ் இவ்வூர் வந்த போது மதுரை நாயக்கர்களால் ஆளப்பட்டது. கல்லிடைக்குறிச்

மட்டுமின்றி அம்பா சமுத்திரம் வட்டத்தில் பல இடங்களில் நாயக்கர் கல்வெட்டுகளையும் உருவத் திருமேனிகளையும் காணலாம். நாயக்கர் காலத்தில் பல்வேறு மண்டபங்கள் கட்டப்பட்டன. திருவாவடுதுறை கிளை மடங்கள், ஈசான மடங்கள் ஏற்படப் பெரும் பொருள் வழங்கியவர்கள் மதுரை நாயக்கர்கள் என்றால் மிகையில்லை. மானேந்தியப்பர் கோயிலில் 1596 ஆம் ஆண்டைச்சேர்ந்த வீரப்பநாயக்கர் கல்வெட்டு உள்ளது.

**பழைய கோயில்:**

கல்லிடைக் குறிச்சியில் வணிகரும் வேளாளர்களும் வாழ்ந்த பகுதிகள் முறையே சிகாமணிபுரம் என்றும் வேளாக் குறிச்சி என்றும் வழங்கப்பட்டுள்ளன. பார்ப்பார் மிகுதியாக வாழ்ந்த ஒரு பகுதி பார்ப்பார்க் குறிச்சி என அழைக்கப் பட்டுள்ளது. இலக்குமி நரசிம்மர் கோயிலில் உள்ள முதலாம் இராசேந்திரனுடைய துண்டு கல்வெட்டு நீங்கலாக, சோழர் கல்வெட்டு ஒன்று கூட கல்லிடைக் குறிச்சியில் இல்லை. அவ்வாறெனில் சோழர் காலத்தில் கோயில் எதுவும் கல்லிடைக் குறிச்சியில் எழுப்பப்படவில்லை எனலாம். ஆயின் கி.பி. 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விநாயகர் கல் சிற்பம் ஒன்றும் 11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தட்சிணாமூர்த்தி கல் சிற்பம் ஒன்றும் இன்றும் கல்லிடைக் குறிச்சியில் இருப்பதால் சோழர் காலத்திற்கு முன் பாண்டியர் காலத்தில் சிறிய சிவன் கோயில் இருந்திருக்க வேண்டும் என்று நாம் கருதலாம். கால வெள்ளத்தில் அக்கோயில் அழிந்திருக்க வேண்டும். அக்கோயி லில் இருந்த சிற்பங்களே இவைகள் எனலாம்.

**குறிச்சி;**

கல்லிடைக் குறிச்சி என்ற ஊர் மலை சூழ்ந்த பகுதிகளுக்கு இடையில் உள்ளது. கல் என்பதற்கு மலை அல்லது குன்று என்று பெயர். கபிலர் குன்று ஒன்று திருக்கோவலூரில் உள்ளது. இதனைக் கபிலக்கல் எனவும் அழைப்பர். பெரும் பரப்பில் மலைகள் சூழ இடையில் இருக்கும் ஓரிடம் கல்லிடைக் குறிச்சி என வழங்கப்பட்டது எனலாம். இனிக் கல்வெட்டுகளில் கல்லடைக் குறிச்சி என்ற சொல்லும்

உள்ளது. புறவடை என்பது போன்றது கல்லடை என்ற சொல்லாட்சி. குறிஞ்சி நில ஊர்ப் பெயர் குறிச்சியாம். நெல்லை மாவட்டத்தில் குறிச்சி என்று முடியும் ஊர்கள் பல இன்றுமுள்ளன. மதில் குறிச்சி என்ற பெயரும் இவ்வூருக்கு இருந்ததை முன்பு கண்டோம். பாதுகாவல் உடைய (மதில் சூழ்ந்த) ஊர் என்று பொருளாகும். மேற்கு மலைத் தொடரின் கடைசி பாகத்தில் கிழக்குச் சரிவில் கல்லிடைக் குறிச்சி உள்ளது. பாண்டிய நாட்டுக்கும் சேர நாட்டுக்கும் இடையில் இருந்த கல்லிடைக் குறிச்சி, சேரர் பிடியில் இருந்தது வியப் பன்று. எனினும் நீண்ட காலம் பாண்டியரின் பிடியிலேயே இவ்வூர் இருந்துள்ளது. சேரமானார் என்ற பெயரும் இவ் வூருக்கு இருந்துள்ளது.

**வேத விற்பன்னர்கள்:**

சிவன் கோயில்கள் மிகுதியாக உள்ள கல்லிடைக் குறிச்சிக் கிழக்குப் பகுதியைக் காட்டிலும் இலக்குமி வராகா கோயில் உள்ள மேற்குக் கல்லிடைக் குறிச்சியில் பிராமணர்கள் மிகுதியாக வாழ்கின்றனர் பல தலைமுறைகளாகப் புகழ் பெற்ற வேத விற்பன்னர்கள் தோன்றி யக்ஞங்களைச்செய்தும் வேதங்களை முறையாகச் சொல்லியும் வந்துள்ளார்கள். வேதாந்த தீக்ஷிதர், சக்தி தீக்ஷிதர், யக்ஞராமதீக்ஷிதர், ஐயா சுவாமிகள் அவர்களுள் சிலர் எனலாம். சோழ வரலாறு எழுதிப் புகழ் பெற்ற நீலகண்ட சாஸ்திரியார் பிறந்த ஊரும் கல்லிடைக் குறிச்சியேயாகும். என்பீல்ட் குடும்பப் பெரியவர் கே.ஆர். சுந்தர அய்யர், இந்தியா சிமெண்ட் அதிபர் கே. என். சங்கரலிங்கம் அய்யர், ஆர்.எல்.ஏ. சங்கர அய்யர் மற்றும் பலர் கோயில் திருப்பணிகளில் பொருளுதவி செய்து வருகின்றனர். இவர்கள் பிறந்த ஊரும் கல்லிடைக் குறிச்சி யேயாகும். திருவாவடுதுறை பதினேழாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்கள் கல்லிடைக் குறிச்சி வித்துவான் ஸ்ரீ முத்து சாஸ்திரிகளிடம் வடமொழி பயின்றார் என்று ஆதீனத்தின் வெளியீடான குருபரம்பரை என்ற நூல் (பக் 199) குறிப்பிடுகிறது. இனி இவ்வூரில் உள்ள கோயில்களைக் காண்போம்.

# மானேந்தியப்பர் கோயில்

**தளிச்சேரி**

கல்லிடைக் குறிச்சியின் நடுவில் விஷ்ணு கோயிலும் இக்கோயிலுக்கு வடகிழக்கே மானேந்தியப்பர் என்ற சிவன் கோயிலும் அமைந்துள்ளன. சிவன் கோயில் அமைந்துள்ள இடம் தலைச்சேரி என முன்பு இருந்திருக்கலாம். பின்னர் தளிச்சேரி என்ற பெயர் பெற்றது. இயற்கை எழில் கொஞ்சும் வண்ணம் கோயிலின் இருபுறமும் தென்னை, மா முதலிய மரங்களைக் கொண்ட தோப்பும், அலரி, பாரிஜாதம் முதலிய மலர்ச் செடிகளைக் கொண்ட நந்தவனமும் தளிர்சேரியில் காண்கிறோம்.

**கோயில் அமைப்பு**

கோயில் சந்நிதியின் மத்தியபாகம் பெரிய பந்தல் போடுவதற்கேற்ற நீளமும் அகலமும் கொண்டு உயர்ந்த கற்றூண்களை இரு வரிசையிலும் பெற்றுத் திகழ்கின்றது. திருவிழாக்காலங்களில் இங்கு பெரிய அளவில் கொட்டகை போட்டு, கோயிலை அலங்கரிப்பது வழக்கமாகும். இவ்விடத்தைத் தாண்டி சிறிது தூரம் கிழக்கே வந்தால் சந்நிதியின் இருபுறமும் பக்கத்திற்கொன்றாக இரு தேர் மண்டபங்களைக் காணலாம். இங்கு தேர்கள் உள்ளன. கோயிலின் தென்புறம் திருவாவடுதுறையின் கிளை மடமும் ஏனைய மூன்று பக்கங்களிலும் தெருக்களும் அமைந்துள்ளன. தெருக்களுக்கு அப்பால் பச்சைப்பசேல் என்ற வயல்கள் உள்ளன. திருவாவடுதுறை மடத்திற்கு மேற்கில் சாலையில், நினைத்ததை முடிக்கும் விநாயகர் கோயில் உள்ளது. மானேந்தியப்பர் கோயில் மேற்கிலும் கிழக்கிலும் வாயில்களைக் கொண்டுள்ளன. கோயில் 277 அடி நீளமும், 130 அடி அகலமும் கொண்டது. 12 அடிக்கு மேல் உயரமுடைய திருமதில் நீள சதுர் வடிவில் உள்ளது. கீழ்த்திசையில் உள்ள வாயில் பெரிதாகவும் மேற்றிசையில் கூடிய வாயில் குறுகியும் அமைந்துள்ளன. கீழ்ப்புற வாயிலின் முன் ஓர் அழகிய மண்டபம் தன் இருபுறங்களிலும் உயர்ந்த திண்ணைப் போன்ற அமைப்புடன் காட்சி

தருகின்றது மக்கள் இத்திண்ணையைத் திரண மண்டபம் என்கின்றனர். கோயிலில் கோபுரம் இல்லை என்பதைக் குறிப்பிட வேண்டும்.

**சிற்பங்கள்:**

திண்ணையை நான்கு தூண்கள் தாங்குகின்றன. இரட்டைத் தூண்கள், சதுர 16 பட்டை தூண்களாக உள்ளன. தூண்களில் கொடிப்பெண்கள், துவாரபாலகர், லிங்கம், மயில், அடியார் போன்ற சிற்பங்கள் உள்ளன. கோயில் நிலையின் உயரே கஜலட்சுமி காட்சி அளிக்கிறார். வாயிலின் நிலை 15 அடி உயரமும் 8–1/2 அடி அகலமும் உடையதாகும். இருபுறமும் விதானத்தின் கீழ் நாட்டிய மகளிர், மத்தளம், தாளம் தட்டும் அடியார், மண்டபத்தின் விதானத்தில் மாவுக் கல்லின் மத்தியில் இரட்டைக் கயல்கள், கும்பிடும் நிலையில் அடியார் போன்ற உருவங்களைக் காண்கிறோம். வாயிலில் உள்ள இரு மரக்கதவுகள் சிற்பங்களுடன் காட்சிதருகின்றன. தம்முள் அளவொத்த பல தட்டுகளைப்பெற்று விளங்குகிறது. வாயிலின் வடக்கிலும் தெற்கிலும் உள்ள இரு கதவுகளிலும் தலா 33 மரச்சிற்பங்கள் உள்ளன. நெல்லை மாவட்டம் மரச் சிற்பங்களுக்குப் பெயர் போனது. இங்குள்ள சிற்பங்களை முழுமையாக அறிந்து கொண்டால் பிற இடங்களில் உள்ள சிற்பங்களைக் கண்டு சுவைக்க இயலும்.

**1) காமச்சிற்பம்:** ஆண், பெண் உருவங்கள். பெண் குனிந்தபடி இருக்க இடக்கை தூண் மீதும் வலக்கை ஏதோ பற்றிய படியும் விளங்க ஆடவன் மறை உறுப்பின் மீது கை வைத்தபடி பெண்ணை நோக்க பெண்ணும் ஆடவனை நோக்குகிறாள்.

**2) இரட்டையடுக்குக் கட்டில்:** கட்டில் கீழே ஒருவன் படுத்துள்ளான். கீழே கால்கள் தாங்கி போல உள்ளன. மேலே இரண்டாவது கட்டில். இவன் இடது புறத்தில் திண்டின் மீது படுத்துள்ளான். தென்புறம் கீழ்க்கட்டிலில் இருக்கும் ஆடவன் கைகள் மேலே படுத்திருப்பவன் தலையருகே உள்ளது. படுத்திருப்பவர் இருவர் கால்களுக்கும் தனித்தனியாக தலையணைகள் உள்ளன.

3) ஆண், பெண் காம லீலை: ஆண் ஒரு பெண்ணிடம் காம லீலையில் ஈடுபட மற்றோர் பெண் நாணங் கொண்ட நிலையில் தோனுகிறாள். திரிபங்க நிலை, முதல் பெண் மார்பின்மீது ஆடவன் கைகள். அவள் கீழே குனிந்தபடி தரையில் கை ஒன்றை ஊன்றியபடி உள்ளாள்.

4) கலவி: ஆடவன் கட்டிலில் அமர்ந்திருக்க பெண் நின்றபடி ஆடவனுடன் கலவி. ஆடவன் கைகள் பெண்ணின் மார்பின் மீது உள்ளது. எதிரில் விளக்கு உள்ளது.

5) புலியுடன் வீரன்: வில், பிச்சுவா ஏந்திய ஆண் சிற்பம் – தலையில் தொப்பி உள்ளது. புலியைப் பார்க்கிறான். புலி அவன் மீது பாயத்தயாராகிறது. வேறொரு ஆடவன் கத்தி கேடயத்துடன் உள்ளான்.

6) கண்ணனும் கோபியரும்: கோபியர் ஆடைகளுடன் கண்ணன் மரத்தில் இருக்கிறான். மூன்று பெண்கள் ஆடைக் கேட்டு வெட்கத்துடன் கெஞ்ச ஒருத்தி மரத்தின் மீது ஏறுகிறாள். இவளுக்கு நீண்ட தலைமுடி உள்ளது. பலகைகளுக்கு நடுவில் அன்னம், யாளி, பூக்கள் உள்ளன.

மூன்றாவது சட்டத்தில் இரு பலகைகளில் சிற்பங்கள் இல்லை. கதவு பூட்டுவதற்கான அமைப்பு இருபுறமும் உள்ளது. தலையில் தலைப் பாகையுடன் தம்பிரான் உருவம் உள்ளது.

கொல்லம் தொள்ளாயிர மேற்குஸ...
பாத்தி லகையில் தினத்தி
ல் பிடச ... செல்வ குரு அம்
... வரின்னிற் ... பல வாண ... கலத்தி
லுக்கு ...... குணவாச
கதிந்தான கொத்து

மரக் கதவில் கூடிய கல்வெட்டு, பொரிந்துள்ளதால் சரியாகப் படிக்க இயலவில்லை. கொல்லம் 900 என்பதால்

கி.பி. 1725 ஆம் வருடத்தில் இக்கதவினை தானம் தந்தவர் வழங்கியுள்ளார் எனலாம். அக்காலத்தில் துறசை ஆதீனத்தில் கி.பி. 1725 இல் பின் வேலப்ப தேசிகர் குருபட்டத்திலும் திருச்சிற்றம்பல தேசிகர் சின்னபட்டத்திலும் இருந்துள்ளனர் தம்பிரான்கள் பலர் இருந்துள்ளனர். செல்வகுரு அம்பலம் என்பவர் திருச்சிற்றம்பல தேசிகர் போலும்.

வழிபடும் சிவனடியார் தோளில் பூக்குடை கொண்ட சிற்பமும் உள்ளது. மூன்று சைவ அடியார்கள் (தம்பிரான்கள்) தலையில் தலைப்பாகையுடன் உள்ளனர்.

12) **ஆடவன் உருவம்:** சூலம் ஏந்திய ஆண் உருவத்துடன் இடுப்பில் கூடை ஏந்திய பெண் அமர்ந்தபடி உள்ளாள்.

13) **சிவலிங்கம்:** நான்கு கரங்களுடன் அம்மன் சிவலிங்கத்தைப் பூக்களைக் கொண்டு பூசிக்கிறார்.

14) **விநாயகர்** பாசம், அங்குசம், எழுத்தாணி, மோதகம், என நான்கு முத்திரைகளுடன் கூடிய விநாயகர் வாகனத்துடன் காட்சி தருகிறார்

15) **அம்மன்:** சிவலிங்கத்துடன் இரு கரங்களுடன் அம்மன் காட்சி தருகிறார். இடப்புறம் அம்மன் உள்ளார்.

16) சிவலிங்கம் யானை – இருபுறமும் பிரம்மா, விஷ்ணு உள்ளனர்.

17) சிவலிங்கம் – வலப்புறம் அம்மன் உள்ளார். மரத்தில் குரங்கு உள்ளது.

18) ஏகபாத மூர்த்தம் - அருகில் பிரம்மாவும் விஷ்ணுவும் உள்ளனர்.

19) ரிஷிபவாகனர் சிற்பம்

20) காமதேனு லிங்கத்திற்குப் பால் பொழியும் சிற்பம்,

21) அம்மையுடன் கூடிய சிவன் ரிஷபத்தில் அமர்ந்துள்ளார்.

22) சிவலிங்கம் – இராமர், இலக்குமணர், வில்அம்புடன் வழிபடுகின்றனர்.

23) சாய்ந்த நிலையில் சிவலிங்கம் – இரு கரங்களுடன் அம்மன் வலப்புறம் உள்ளார்.

24) பீடத்தின் மீது விஷ்ணு எதிரில் கருடன் வணங்குகிறான்.

25) ரிஷபத்தின் மீது அம்மை அப்பன்.

26) கண்ணப்பர் – வில் அம்புடன் உள்ளார். ஒரு காலைத் தலைக்கு மேல் இருந்து கண்ணைத் தோண்ட, இடது காலைச் சிவலிங்கத்தின் மீது வைத்த படி உள்ளார். எதிரில் விளக்குத் தூண் உள்ளது.

27) கல் யானைக்குக் கரும்பு ஊட்டும் சிவன்.

28) நாயுடன் கால பைரவர் சிற்பம்.

29) பலியிட்டுக் கொள்ளும் ஆடவன் – இடக்கை தொடை மீது உள்ளது.

30) காலனைக் கொல்லும் மூர்த்தம்.

31) சிவன் நான்கு கரங்களுடன் உள்ளார்.

32) தேவியுடன் கூடிய நடராசர் உருவம்.

33) சுப்பிரமணியர் உருவம் ஆகிய சிற்பங்கள் வடக்கில் உள்ளன. தென்புறமுள்ள வாயிலில் கீழ்க்கண்ட சிற்பங்கள் உள்ளன.

1) பிளிறும் நிலையில் யானை கீழே முதலை. இது கஜேந்திர மோட்சத்தைக் குறிக்கும் சிற்பமாகும்.

2) பறை அடிக்கும் ஆடவன். திரிபங்க நிலையில் பெண்ணை நோக்க அவள் வலக்கரத்தில் மலர் உள்ளது. மற்றொரு கை தொடை மீது உள்ளது.

3) பெண்ணைத் தலை கீழாகத் தூக்கி நிறுத்தியபடி ஆடவன் கலவி. வியப்புடன் வேறொரு ஆடவன் வாயில் கை வைத்தபடி அருகே நிற்கிறான்.

4) மானுடன் போர், இரண்டு கொம்புகள் உள்ளன. மானேந்தியப்பர்?

5) மராட்டிய ஆடையுடன் இரு பெண்கள் கைகோர்த்துச் செல்லுதல்.

6) ஆடை அவிழ்ந்த நிலையில் மூக்கின் மீது விரல் வைத்த படி ஒரு பெண். அவளுடைய காலில் உள்ள முள்ளை ஒருவன் எடுக்கிறான். இரு ஆடவர் தலைக்கு மேல் வணங்குகின்றனர்.

7) ஆறுகரங்களுடன் அம்மன் - பாசம், அங்குசம், கத்தி, கேடயம், சூலம், ஆகூயம் என்ற ஆறு கரங்களுடன் திரிபங்க நிலையில் மார்பில் கச்சுடன் கூடிய அம்மன் சாளி சிற்பம் போலும்.

8) அறியமுடியாத சிற்பம், கெண்டி, கத்தி, தராசு ஏந்தியுள்ளார்.

9) யானைக்கு அருள் பாலிக்கும் அம்மன்.

10) ஆணும் பெண்ணும் தொட்டிலை ஆட்டும் சிற்பம்

11) சுகாசன நிலையில் ஆடவன் அமர்ந்திருக்க மற்றோர் ஆடவன் வணங்குகிறான். அமர்ந்த ஆடவன் கையில் சுவடி உள்ளது.

12) ராதா அருகில் நிற்க கிருஷ்ணர்.

13) இலிங்கத்தைத்தழுவும் அடியார். எதிரில் சதுர் புஜ திருமால்.

14) தம்பிரான்கள் இருவர், சிவலிங்கத்தின் மீது பூச் சொரிகின்றனர்.

15) கருடன் மீது விஷ்ணு எதிரில் அடியார் சிற்பம்.

16) யோக பட்டத்துடன் சாஸ்தா எதிரில் வழிபடும் அடியார்.

17) சிவலிங்கத்தை வழிபடும் ஆடவர் உருவம். எதிரில் இரு கரங்களுடன் அம்மை.

18) சைவ அடியார் (திருவாவடுதுறை குருமகான்?) எதிரில் தம்பிரான்கள் இருவர் வணங்குகின்றனர்.

19) ஆடவன், பெண், பெரியபாம்பு.

20) சிவனை வழிபடும் கிளி – அருகில் அரசன் அரசி உருவம்.

21) மான், மழு, பின் கரங்கள் கை மீது கையுள்ள சிவன். வழிபடும் ஆடவன்.

22) நாற்கரமுடைய காளி.

23) தலைக்குமேல் கால் தூக்கும் நடராசர் ஊர்த்வ தாண்டவர் ஒருகால் முயலகன் தலை மீது உள்ளது. அம்மை இதைக் கண்டு வியந்தபடி உள்ளார்.

24) மார்கண்டேயன் சிவலிங்கத்தைத் தழுவ எதிரில் இமயன், இலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட 8 கைகளையுடைய சிவன்; கோலினால் இயமனைக் குத்துதல்.

25) கட்டில் மீது அமர்ந்த ஆடவன். குழந்தையுடன் ஓர் ஆடவன். குழந்தையின் தலை மீது கை வைத்து ஆசிர்வதித்தல்.

26) கைலாயமூர்த்தி–கைலாசமலை நந்தி, விஷ்ணு, அருகில் உள்ளனர். அம்மனும் இறைவனுடன் அமர்ந்துள்ளார்.

27) வள்ளி தெய்வயானையுடன் சுப்பிரமண்யர்.

28) சிவலிங்கத்தை வழிபடும் தம்பிரான் சிற்பம்.

29) இலிங்கத்தைத்தழுவும் ஆடவன்.

30) உமையுடன் சிவன். எதிரில் வழிபடும் ஆடவன்.

31) வாகனத்தின் மீது அமர்ந்துள்ள விநாயகர்.

32) மலை மீதுள்ளபெண். அருகில் ஆடவன் காதோடு பேசுதல்.

33) பல்லக்கில் அமர்ந்த சிலை. எதிரில் இரு கரங்களுடன் பெண் ஒருத்தி உள்ளாள்.

வாயிலில் கல்வெட்டு உள்ளது.

வாயிலின் இருபுறமும் யானை நீர்த்தெளிக்க லட்சுமி. விதானத்தில் இரு மீன்களும் நடுவில் ராசிகளும் காண்கிறோம். நெல்லைப் பாண்டியர் திருப்பணி என்பதைச் சொல்லாமல் சொல்லுகின்றது இச்சிற்பம். எனினும் பிற்காலத்தில் திருப்பணி நடைபெற்றுள்ளது. கருங்கல் தூண்கள் சில யாளியும் சிங்கமும் சேர்ந்த நிலையில் உள்ளன. ஒரு சிங்கம் மட்டும் உள்ள தூண்களும் உள்ளன. கொடுங்கைகள் வாழைப்பூ வடிவில் அமைந்துள்ளன.

**காலிங்க நர்த்தனம்:**

நுழை வாயிலை யடுத்துள்ள மண்டபத்தில் உள்ள தூண்களில் பல்வேறு சிற்பங்கள் உள்ளன. ஒரு தூணில் அநுமன், மான், காலிங்க நர்த்தனம் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

**தூணின் அமைப்பு:**

மார்க்கண்டேயர் உருவம் ஒரு தூணில் காண்கிறோம். இரட்டைக் தூண்கள், சதுர்ம், நீள் சதுரம், பட்டை முத்துத் தோரணம், கண்டம். கவிழ்ந்த தாமரை போதிகை, கொடுங்கை உத்தரம், சிம்மம், வாழைப்பூ, என அங்கங்களைக் கொண்டுள்ளன. வரிசைக்கு ஒன்பது தூண்கள் வீதம் மூன்று வரிசைகளில் தூண்கள் உள்ளன.

**கொடிமரம்:**

இம்மண்டபத்தில் பலி பீடம், நந்தி, கொடிமரம் ஆகியவை காண்கிறோம். கொடிமரம் சதுரமான பீடம், மலர்ந்த கண்டம், முப்பட்டைக்குமுதம், மீண்டும் இதே அமைப்பு பின் நந்தி உள்ளது.

**திருச்சுற்று:**

திருச்சுற்றாலயத்தின் தொடக்கத்தில் சூரியன், சந்திரன், நந்திகேஸ்வரர், மீனாட்சிசுந்தரேஸ்வரர், ஆகியவை காண்கிறோம். இங்குள்ள கால பைரவர் சிற்பம் கவினுடன் உள்ளது. பள்ளியறை நாச்சியார் சிற்பம் பின் காணலாம்.

**மடைப்பள்ளி:**

திருச்சுற்று மாளிகையின் முன்புறம் மடைப்பள்ளி உள்ளது. பின் நால்வர் சிலைகளும், அகஸ்தியர், புலஸ்தியர், வேறோர் முனிவர், 63 நாயன்மார் சிலைகளும் வரிசையாக உள்ளன. காரைக்கால் அம்மை சிலைக்கு நேர் எதிரில் உள்ள தூணில் அடியார் சிற்பம் உள்ளது.

**கருவறை:**

கோயில் கருவறையின் அதிட்டானத்தில் முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டி, ஆகியவை காண்கிறோம். பின், கால் எனப்படும் சுவரில் அரைத் தூண்கள் காண்கிறோம். தூண்களில் முத்து மாலை, கும்பம், பட்டி, கவிழ்ந்த நிலையில் குமுதம், போதிகை, உத்தரம், கொடுங்கை, போன்ற உறுப்புகளைக் காண்கிறோம்,

**முருகர்:**

கோஷ்டங்களில் சுவாமி சிலைகள் உள்ளன. மேற்கே கருவறை கோஷ்டத்திற்கு எதிரில் சப்த மாதர் சிலைகள் உள்ளன. இதையடுத்து முருகர் சிலை உள்ளது. சதுரமான பீடத்தின் மீது முருகரும் இருபுறமும் வள்ளி தெய்வயானையும் உள்ளனர். நான்கு கரங்கள் முருகனுக்குள்ளன. சண்டிகேஸ்வரர் உரிய இடத்தில் வீற்றிருக்கிறார்.

**செப்புத் திருமேனிகள்:** இக்கோயிலில் உள்ள செப்புத் திருமேனிகள் பாதுகாப்பாக உள்ளன.

1. **நடராசர்:** பிரபையுடன் கூடியது. இருபுறமும் தீச்சுடர்கள். மேலே பிரபையில் யாளி. கீழேயும் யாளி. நடராஜர் ஜடாமகுடம்; நாற்கரங்கள், பின்புறம் சிரச்சக்கர முள்ளது. காதுகளைப் பத்ர குண்டலமும், மகர குண்டலமும் அலங்கரிக்கின்றன. வலது முன் கையில் பாம்பு. பிரபையில் படமெடுத்தாடும் பாம்பு. தொடைவரை ஆடை. காலில் பாதச் சங்கிலியும் கழலும் உள்ளன. தோளில் தோளணி, கையில் கடகம். இறைவன் மிதித்துள்ள முயலகன் கையில் ஒரு பாம்பு. சதுரமான பீடத்தின் மீது இறைவன் நாட்டியக் கோலத்தில் உள்ளார்.

2. **சிவகாமி:** கரண்ட மகுடம். தொள்ளைக் காதுகள். வலக்கை மலர் ஏந்தியுள்ளது. இடக்கை தொங்கியபடி உள்ளது. கழுத்தில் கண்டசரம். பிரிந்து செல்லும் புரிநூல், தோள்வளை உள்ளது. கால் வரை ஆடை. கைகளில் வளையல். பத்ர பீடத்தில் உள்ள பத்ம பீடத்தில் நின்றபடி உள்ளார். மார்பில் கச்சில்லை.

3. **மாணிக்கவாசகர்:** தலையில் உள்ளது உருத்திராட்ச மாலை. பட்டையான பூணூல். தொடைவரை ஆடை. சின் முத்திரை. ஓலைச்சுவடி கையில் உள்ளது. வடிந்து வீழ் காதுகள். 'மாணிக்க வாசக மூர்த்தி' என எழுதப்பட்டுள்ளது. மாணிக்க வாசகர் கையில் ஏந்திய ஓலைச்சுவடியில் சிவஞான போதம் என எழுதப்பட்டுள்ளது. பத்ர பீடத்தின் மீதுள்ள தாமரைப் பீடத்தில் நின்றபடி இவர் உள்ளார்.

4. **சந்திர சேகரன்:** நின்ற நிலையில் ஜடாமகுடத்துடன் மான், மழு, அபயம், வரதம் என்ற முத்திரைகளை வெளிப் படுத்தியபடி பீடத்தின் மேல் பத்ம பீடத்தில் உள்ளார். மேற் கண்ட நான்கு ஐம்பொற் சிலைகளும் திருவாவடுதுறை மடம் வழங்கிய சிலைகள் ஆகும்.

5. **நடராசர்:** செவ்வகமான பீடத்தின் மீதுள்ள தாமரைப் பீடத்தின் மீது இடக்காலை ஊன்றி, வலக் காலைத் தூக்கியபடி நடனம் புரியும் நடராசர் சிலை அழகாக அமைந்துள்ளது. முயலகன் மீது சிவனுடைய கால் பதிந்துள்ளது. இறைவனுடைய ஆடையின் ஒரு பகுதி வலப்புறம் முயலகன் தலையிலும் மற்றொரு பகுதி வாலிலும் படும்படி தத்ரூபமாகச் சிலை செய்யப்பட்டுள்ளது. இறைவனுக்கு ஜடாமகுடம். ஜடா பாரமில்லை. பிரபையில் 16 தீச்சுவாலை. பிரபையில் யாளி, கீழே பூ வேலைப்பாடு. இறைவன் தலையில் நிலா, கங்கை உள்ளன. இடப் புறக்காதில் பத்ரகுண்டலமும் வலப்புறக் காதில் மகர குண்டலமும் காண்கிறோம். வழக்கமான கழுத்தணி; தோளணி, கையணிகளை இவரிடம் காண்கிறோம். பின்புறம் சிரச்சக்கரமுண்டு. பாண்டியர் கலைத் திறமைக்கு இது உதாரணமாகும்.

6. **சிவகாமி:** கரண்ட மகுடம், காதுகளில் அணிகலன்கள் இல்லை. தோளில் தோளணி. வலக்கரம் பூ ஏந்த, இடக்கரம் லோலஹஸ்தம். கைகளில் தலா பத்து வளையல் காண்கிறோம். பத்ம பீடம் மட்டும் காண்கிறோம்.

7. **விநாயகர்:** கரண்ட மகுடம். நான்கு கரங்கள் வழக்கமான அணிகலன்கள், முத்திரைகள். நின்ற நிலையில் இவர் உள்ளார்.

8. **முருகர்:** கரண்ட மகுடம். சக்தி, வஜ்ரம், அபையம், வரதம் கைகளில் காண்கிறோம். இரு காதுகளும் மகர குண்டலங்களைக் கொண்டுள்ளன. மார்பில் பூணூல். வழக்கமான அணிகலன்கள் உள்ளன.

9. **வள்ளி:** பத்ர பீடத்தின் மீது இடக்கரம் மலர் ஏந்த கரண்ட மகுடத்துடன் மார்பில் கச்சு விளங்க, வள்ளி நின்ற நிலையில் உள்ளார். கழுத்தில் மூன்று அணிகலன்கள் வளையல்கள் உள்ளன.

10 **தெய்வயானை:** வலக்கை மலர் ஏந்த, இடக்கை லோலஹஸ்தத்தில் வழக்கமான அணிகலன்களுடன் உள்ளார். மார்பில் கச்சில்லை.

**11. பிட்சாடன மூர்த்தம்:** செல்வகப் பீடத்தின் நடுவில் சதுர பீடம் அமைத்து அதன் மீது பிட்சாடனரை நிறுத்தி யுள்ளனர். வலக்கை மானுக்குத் தளிர் தருகிறது. மான் தலையைத் தூக்கியபடி இறைவனைக் காண்கிறது. இடப்புற முள்ள குள்ள பூதம் தலையில் கூடையுடன் நிற்கிறது. கூடை அழகிய கின்னமாகச் செம்பில் உள்ளது. பூதத்தின் இரு கைகளும் அதைப் பிடித்துக் கொண்டுள்ளன. இறைவனுக்கு நான்கு கரங்கள். பின் இடக்கை சூலம். முன் இடக்கை மண்டை ஓடு பின் வலக்கையில் உடுக்கை. முன் வலக்கையில் உடுக்கையை அடிக்க குச்சி உள்ளன. தலை ஜடாபாரம். கழுத்தில் முத்து மாலை, பதக்க மாலை, மார்பில் பூணுல் உள்ளது. இடையில் கச்சு. உதரபந்தம்அழகாகக் காட்டப்பட்டுள்ளது. காலில் கடகம். பாதத்தில் மிதியடி காட்டப்பட்டுள்ளது.

**12. சூலத்தேவர்** – வழக்கமான உருவ அமைப்புடன் சூலத்தேவர் உள்ளார்.

**13. நடராசர்:** பிரபையுடன் கூடிய நடராசர் பிரபை உடைந்துள்ளது. வழக்கமான உருவ அமைதி. இடையில் உள்ள ஆடை வெளியில் கொசுவமாகக் காட்டப்பட்டுள்ளது.

**14. தனி அம்மன்;** இக்கோவிலில் உள்ள தனி அம்மன் மிகவும் பிற்காலத்தில் செய்யப்பட்டது. மார்பில் கச்சில்லை. வழக்கமான அணிகலன்கள். உற்சவ அம்மன் என்றும் இவ் வம்மனைக் குறிப்பிடுவர்.

**15. சந்திரசேகர் என்ற மானேந்தியப்பர்:** சந்திரசேகர் செப்புத்திருமேனி மானேந்தியப்பர் என இங்கு வழங்கப் படுகிறது. மான், மழு, அபையம், வரதம் என நாற்கரங்களில் காண்கிறோம். இடக்காது மகர குண்டலம். வலக்காது பத்ர குண்டலம். மார்பில் புரிநூல், கழுத்தில் மூன்று அணிகலன்கள் உள்ளன. இவர் உற்சவ மூர்த்தியாவார். மானேந்தியப்பர் உற்சவர் கோயில், விநாயகர் கோயிலை யடுத்து வடதிசையில் கிழக்கு முகமாய் அமைந்துள்ளது.

**16. வடிவாம்பிகை:** சந்திரசேகர அம்மன் இங்கு வடிவாம்பிகை என வழங்கப்படுகிறது. கரண்ட மகுடம்.

வலக்கரம் கடஹஸ்தம், இடதுகரம் கீழே விரிந்த நிலை. கைகளில் திருகு வளையல்கள். காதுகளில் மகர குண்டலங்கள். மார்பில் கச்சில்லை. இடையில் உள்ள ஆடை கால் வரை உள்ளது.

17. **சுப்பிரமணியர்:** நாற்கரங்களுடன் தனி நிலையில் கூடிய சுப்பிரமணியர் செப்புச் சிலை வழக்கமான உருவ அமைப்புடன் உள்ளது.

18. **சண்டேசுரர்:** ஜடா பாரம், கழுத்தில் உருத்திராட்ச மாலை. இரு கரங்கள் வணங்கும் நிலையில் உள்ளது.

19. **அப்பர்:** உழவாரப்படையுடன்கழுத்தில் உருத்திராட்ச மாலை. தலையிலும் உருத்திராட்ச மாலை உள்ளது. வழக்கமான உருவ அமைப்பு.

20. **திருஞானசம்பந்தர்:** கைகளில் தாளம் ஏந்தியபடி மேலே பார்க்கும் தோற்றம். உருத்திராட்ச மாலை கையிலும், தலையிலும் காண்கிறோம். பத்ர பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் நின்றபடி உள்ளார்.

21. **சுந்தரர்:** கிரீட மகுடத்துடன் வழக்கமான உருவ அமைப்புடன் காட்சியளிக்கிறார்.

22. **சோமாஸ்கந்தர்:** சுகாசன நிலையில் ஜடாமகுடத்துடன் மான், மழு, அபயம், சிம்மகர்ண உறஸ்தம். வலக்கால் தொங்கியபடி உள்ளது. மூன்று கழுத்தணி, மார்பில் புரிநூல், இடையில் கச்சு.

23. **அம்மன்:** சோமாஸ்கந்த அம்மன், கரண்ட மகுடம். இவர் வழக்கமான முத்திரைகளுடன் இறைவனை நோக்கும் படி காட்டப்பட்டுள்ளார்.

24. மனோன்மணி **அம்மன்** என்ற **அம்மன்** செப்புச் சிலையும் இக்கோயிலில் உள்ளது. வலக்கரம் மலர் ஏந்த இடது கரம் தொங்கியபடி உள்ளது. கால்வரை ஆடை. சதுரமான பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் திரி பங்க நிலையில்

உள்ளார். மார்பில் கச்சில்லை. வழக்கமான அணிகள் உள்ளன.

25. **மானேந்தியப்பர்:** நடுவில் முருகன் நின்ற நிலையில் மலர்களை ஏந்தியபடி இருக்க அம்மையும் அப்பனும் ஒரே பீடத்தின் மீது மூன்று சிலைகளும் உள்ளன. இது மானேந்தியப்பர். அம்மன் கரண்ட மகுடம், கால்வரை ஆடை. இனிக் கற் சிற்பங்களைக் காண்போம்.

1. **சூரத் தேவர்:** மூன்று முகங்கொண்ட சூரத்தேவர் சிற்பம் இக்கோயிலில் உள்ளது. சூலம், மழு, முன் கரங்களிலும் பூ, மணி பின் கரங்களிலும் உள்ளன. கருங்கல்லில் கூடிய உதிரிச்சிற்பம் இதுவாகும். இனிவரும் சிற்பங்களும் கற்சிற்பங்கள் ஆகும்.

2. **பிராம்மி:** நான்கு முகத்துடன் நாற்கரங்களுடன் கூடிய பிராம்மி கரண்ட மகுடத்துடன் உள்ளார். இடது கால் தொங்க, வலக்கால் மடித்து விட்டபடி உள்ளார். சூலம், சக்தி, அபையம், வரதம் நாற்கரங்களில் காண்கிறோம்.

3. **மாகேஸ்வரி:** மான், மழு, அபையம், வரதம் என்ற நிலையில் சிவனுக்குரிய முத்திரைகளுடன் அமர்ந்தபடி உள்ளார். வலக்கால் தொங்க இடக்கால் மடித்தபடி உள்ளார்.

4. **இந்திராணி:** கிரீட மகுடம், சக்தி, வஜ்ஜிரம், அபையம் வரதம் என நான்கு கரங்கள் விளங்க இடக்கால் மடித்து வலக்கால் தொங்க விட்டபடி உள்ளார்.

5. **வைஷ்ணவி:** கிரீட மகுடம். சங்கு, சக்கரம், அபையம், வரதம் கைகளில் உள்ளன. மார்பில் கச்சில்லை. பிற தாய் மாரைக் காட்டிலும் சற்று பெரிதாகும்.

6. **வாராகி:** பன்றி முகத்துடன், கலப்பை, சூலம், அபையம், வரதம், என்ற ஹஸ்தங்களுடன் உள்ளார்.

7. **கௌமாரி:** சக்தி, சூலம், அபையம், வரதத்துடன் உள்ளார். மார்பில் கச்சுண்டு.

8. பிடாரி: விரிந்த சடை, பத்ர குண்டலமும் பிரேத குண்டலமும் காதுகளை அலங்கரிக்க, மார்பில் கச்சுடன் உள்ளார். கழுத்தில் மண்டை ஓட்டு மாலை. சூலம், உடுக்கை, அபயம், வரதம் கைகளில் காண்கிறோம்.

9. துர்க்கை: – நான்கு கரங்களுடன் நின்ற நிலையில் உள்ளார்.

10. விநாயகர்: இக்கோயிலில் கி.பி. 10 ஆம் நூற்றாண்டு கலை அமைப்பைக் கொண்டுள்ள விநாயகர். பின்னிரு கரங்கள் தெளிவாகத் தெரியவில்லை. ஆயின் முன்புறக் கரங்கள் மோதகம், எழுத்தாணியாகத் தோன்றுகின்றன. கரண்ட மகுடம். முற்காலப் பாண்டியர் கலைக்கு எடுத்துக்காட்டாக இவ்விநாயகரைக் குறிப்பிடலாம்.

வாகனங்கள்: சுவாமிக்கும் அம்பாளுக்கும் தனித்தனியாக வெள்ளி வாகனங்கள் உள்ளன. வெள்ளிச் சப்பரமும் உள்ளது.

பூதவாகனம், மயில் வாகனம், இந்திர (யானை) வாகனம், கோரதம், மகாரதம், சூரன் வாகனம், கமல வாகனம், காமதேனு வாகனம், பெரிய சப்பரம். போன்ற மரவாகனங்களும் கோயிலில் உள்ளன. தங்கம் வெள்ளியில் கூடிய அணிகலன்களும் கோயிலில் உள்ளன.

சண்டிகேஸ்வரர்: கோயில் பிரகாரத்தின் வலப்புறத்தில் சண்டேசர் கோயிலும் இடப்புற மண்டபத்தில் சனியீசுவரரும் காணலாம்.

பள்ளிஅறை: சபா மண்டபத்திற்கு வரும் போது, வடபுறம் உள்ள பள்ளிஅறை நிரம்பவும் அழகாகவும் சலவைக் கற்கள் பதித்தும் வண்ண வேலைப்பாடுகளுடன் காட்சியளிக்கிறது. சிவலிங்கமும், பைரவர் சிலையும் அடுத்துக் காண்கிறோம்.

**வடிவாம்பாள் கோயில் :** மணிமண்டபத்தில் தெற்குத் திசையைப் பார்த்தபடி வடிவாம்பாள் சந்நிதி அமைந்துள்ளது. இம்மண்டபத்தைத் தாண்டி உள்ளே சென்றால் பல்வேறு செப்புத் திருமேனிகளைக் காணலாம். இவ்வர்த்த மண்டபத்தின் இடையில் நந்தியும் அதன் முன் இடப்புறமாக விநாயகரும் வலப்புறமாகக் கோயில்நகைகள் வைக்கப் படுகின்ற சுரங்க அறையும் உள்ளன. பின் அந்தராளமும் கருவறையும் காணலாம். கருவறையில் உள்ள சிவலிங்கம் 3 அடி உயரமுடையது.

**மண்டபங்கள்:** கோயிலில் பல மண்டபங்கள் உள்ளன. வெளிப்பிரகாரத்தின் தென் புறமுள்ள ஊஞ்சல் மண்டபம் நீள வாக்கில் உயரமாக உள்ளது. இங்கு நவராத்திரி விழா, கல்யாணக் காட்சி போன்றவை கொண்டாடப்படுகின்றன.

**மீன் சிறபங்கள்** கொடி மரத்தையடுத்துள்ள மகா மண்டபத்தில் உற்சவ காலங்களில் சுவாமி எழுந்தருள்விப்பும் உபன்யாசமும் நடைபெறும். கொடி மண்டபத்தின் தென்புறம் பாவுக்கல்லின் மேல் உள்ள கயல் இணைகள் (இரு மீன்கள்) ஒரு பாண்டிய மன்னன் ஆட்சியில் அவனால் கோயில் கட்டப் பட்டதை நினைக்க வைக்கிறது.

**மானேந்தியப்பர் பெயர்க் காரணம்:** தாருகா வனத்தில் இருந்த முனிவர்கள் தாங்களே தவத்தில் சிறந்தவர் என்றும் தம் தேவியரே கற்பில் உயர்ந்தவர் என்றும் எண்ணிக் கர்வம் அடைந்தனர். அவர்களுடைய கருவத்தை அடக்கி ஆட் கொள்ள வேண்டி இறைவன் பிட்சாடன் வடிவம் கொண்டார். திருமால் மோகினி வடிவம் கொண்டார். அவ் விருவர் உருவங்களைக் கண்டு ரிஷிகளும் ரிஷி பத்தினியரும் மோகித்து வெட்கினர். கடவுளர் இருவரும் மறைந்தனர். இதை அறிந்து முனிவர்கள் கோபம் கொண்டனர். ஹரனை அழிக்க எண்ணினர். கஜத்தை அனுப்பினர். இறைவன் கஜ சம்ஹார மூர்த்தியாக மாறினார்.

**தளிச்சேரி:** மானேந்தியப்பர் கோயில் உள்ள பகுதி தளிச்சேரி என வழங்கப்படுகிறது. இங்குள்ள திருவாவடு

துறையின் கிளை மடமும் தளிச்சேரி மடம் என வழங்கப் படுகிறது. தளி என்பதற்குக் கோயில் என்ற பொருளுண்டு. கோயில் உள்ள சேரி தளிச்சேரியாயிற்று. பல கோயில்கள் இருப்பின் பல தளி என வழங்கப்படும். தளிச்சேரி என்பதற்கு நடன மாதர் தெரு என்றும் பொருள் கூறலாம். தளச்சேரி என்று எடுத்துக் கொண்டால் மேடான இடம் எனலாம். இனித் தலச்சேரி என்றால் க்ஷேத்திரம் என்ற பொருள் இருப்பதை நாம் அறிவோம். தலச்சேரி, தளச்சேரி, தளிச்சேரி என்ற மூவகை வழக்கும் மக்களால் இங்கு வழங்கப் படுகின்றன.

**கோயிலின் உள்தோற்றம்:** மானேந்தியப்பர் கோயிலில் நுழைந்ததும் இடப்புறம் நோக்கினால் குளம் ஒன்று படிக்கட்டுடன் இருப்பதைக் காணலாம். கன்னடியன் காலி லிருந்து ஒரு மடையின் வழியாகத் தண்ணீர் வருகிறது. குளத்திற்கு எதிரில் வலதுபுறம் வாகன மண்டபம் உள்ளது. இவ்விடத்திலிருந்து சிறிது தூரத்தில் நவக்கிரகங்கள் வைக்கப் பெற்றிருக்கின்றன. கொடிமரம், பலி பீடத்திற்குத் தென் பக்கம் கோயில் நிருவாக கட்டிடம் உள்ளது. இங்கே தூணில் மாடன் தம்பிரான் உருவச் சிலை ஒன்று உள்ளது. பூசையும் நடைபெறுகிறது. வெளிப் பிரகாரத்தைச் சுற்றி வந்தால் தென் பிரகாரத்தின் மத்தியில் நடைபாதையும் இருபுறமும் பூந்தோப்பும் இருப்பதைக் காணலாம். இங்கே ஊஞ்சல் மண்டபம் அமைந்துள்ளது. மேல் பிரகாரத்திற்கு வரும் போது இடதுபுறம் நந்தவனமும் மத்தியில் ஒரு வாயிலும் இருப்பதைக் காணலாம். வடக்குப் பிரகாரத்திலும் இடது புறமே நந்தவனம் அமைந்துள்ளது.

**கோயில் உட்பிரகாரம்:** உட்பிரகாரம் வலம் வரும் போது தென்புறம் மடைப்பள்ளி முதலில் எதிர்ப்படுகிறது. நால்வர் கோயில், 63 நாயன்மார் உள்ள மண்டபம் அடுத்துக் காணலாம். தென் பிரகாரத்தின் வலப்புறம் தட்சிணாமூர்த்தி சந்நிதி காணலாம். இப்பிரகாரத்தின் முடிவில் கணபதி கோயிலும் அதையடுத்து உற்சவ மூர்த்தியாகிய மானேந் தியப்பர் கோயிலும் உள்ளன. மேற்குப் பிரகாரத்தில் வலம்

வரும்போது அய்யனாரும் பின் முருகன் கோயிலும் காணலாம்.

**முனிவர்களும் சிவனும்**

சிவனை அழிக்க முனிவர்கள் 'ஆபிசாரஹோமம்' என்ற யாகத்தை நடத்தினர். அந்த ஹோமத்தில் இருந்து புலி, யானை, பாம்பு, முயலகன் என்னும் அசுரன் முதலியன தோன்றின. முனிவர்கள் அவைகளைச் சிவன் மீது ஏவினர். எதிர்த்து வந்த யானையையும் புலியையும் கொன்று அவற்றின் தோல்களை தமது வெற்றிக்கு அடையாளமாகத் தரித்த இறைவன், பாம்பை ஆபரணமாகச் சூடிக் கொண்டான். முயலகனைத்தம் திருவடியால் மிதித்து ஆட்கொண்டான் மானை அடக்கி இடக்கரத்தில் ஏந்தி காதருகில் வைத்துக் கொண்டான் மானை இடம் ஏந்திய சிவன் மானேந்தியப்பராகக் காட்சி தருகிறார்.

கண்வமகிரிஷி வழிபட்டதால் கண்வசங்கரர் எனவும், சிவன் வழங்கப்பட்டார்.

**வடிவாம்பாள் பெயர்க் காரணம்:** சிவன், மானேந்தியப் பராகக் காட்சியளிப்பது போல் திருமால் தாம் எடுத்த மோகினி வடிவோடு வடிவாம்பாள் என்னும் அம்பிகையாகத் திகழ்கிறாள். இவ்வம்மனுக்கு ''காந்தி மதி அம்மை'' என்ற பெயருண்டு. காந்தி என்ற சொல்லிற்கும் ஒளி, அழகு என்ற பொருள்கள் இருப்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

**தீர்த்தம்:** மானேந்தியப்பர் கோயிலுக்குரிய தீர்த்தம் கண்வ தீர்த்தம். இது கோயிலின் வட திசையில் தாமிரபரணி நதியின் கட்டமாகும். இத்தீர்த்தத்திற்குப் போகும் வழியில் செவ்வாய்க்கிழமை மடம் என்ற மடம் உண்டு. செவ்வாய் தோறும் 16 ஏழைகட்கு உணவிடுகின்றனர். நெல்லையில் ஒரு கார்காத்த வேளாளர் வயிற்று வலி, கண்வ தீர்த்தத்தில் மூழ்கிக் கோயில் பிரசாதம் உண்டதால் நீங்கியதாம். இதனால்

இவரே இத்தானத்திற்கு ஏற்பாடு செய்துள்ளார். இத்தீர்த்தத்தின் அருகே பாலைறயில் விநாயகர், முனிவர். சிவலிங்கம் போன்ற உருவங்கள் உள்ளன. சிவராத்திரி யன்று பக்தர்கள் இங்கு மூழ்கிப் புனித தீர்த்தத்தைக் குடத்தில் பய பக்தியுடன் எடுத்துக் கொண்டு மானேந்தியப்பர் கோயிலினுட் புகுந்து கொடி மரத்தின் அருகில் உள்ள நந்தி தேவர்க்கு மந்திர பூர்வமாக அபிஷேகம் செய்வர்.

**கல்வெட்டுகள்:** மானேந்தியப்பர் கோயிலில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. முதல் கல்வெட்டு கொல்லம் 773 இல் அதாவது 11-12-1596 இல் பொறிக்கப்பட்டது. மத்திய அரசு 1916 இல் இதன் சுருக்கத்தை 318/1916 எண்ணில் குறிப்பிட்டுள்ளது. மானேந்தியப்பர் திருநாள் நடக்கும் படிக்கு வீரப்ப நாயக்கரய்யன் தன்மமாக தீத்தயப் பிள்ளைக் காரியத்துக்குக் கர்த்தரான நல்ல பெருமாள் பிள்ளையின் புண்ணியார்த்தமாக முதலி நயினார் என்பவரும் கல்லிடைக் குறிச்சி நாட்டவரும் கூடி ஏற்பாடு செய்த தானம் இதில் காண்கிறோம். மேலைத் தெரு வீதியில் வடக்குத் தெரு அம்பலத்தாடும் தம்பிரான் மடத்துக்கு தென் எல்லை பெருவழி அம்பலத்தாடும் தம்பிரான் மடத்துக்கு தென் எல்லை, பெருவழி போன்ற விவரங்கள் உள்ளன. தறி ஒன்றுக்குப் பத்துப் பணம் வரியும் ஊரில் ஆட்கூலிக்கு 1/2 பணமும் நிர்ணயிக்கப் படுகிறது. இத்தொகை சுவாமி திருநாள் செலவுக்குப் பயன் படுத்தப் படுகிறது. வரி விளாச்சேரியில் வசூலிக்கப்பட்டது. வேளாச்சேரியே விளாச்சேரி போலும். இத்தன்மம் காத்தவர் அசுவமேத யாகம் செய்த பலனை அடைவர். உத்தரவில் முதலி நயினான் செப்புந்தி நாதப் பிள்ளை, ஆதிவராகனான பிள்ளை, கடைக்கட்டுப் பிரம்மராய பிள்ளை, எல்லார்க்கு நயினான் பிள்ளை, சம்புநிதி, ஆரிய நயினாப்பிள்ளை, தியாகப்ப முதலி மகாமு...முதலியார், சடையப்ப முதலியார், கோனைய பிள்ளை, இரையன் மார்த்தாண்ட பிள்ளை, மற்றும் பலர் ஒப்பமிட்டுள்ளனர்.

**அம்பலத்தாடும் மடம்:** கல்வெட்டில் வரும் அம்பலத்தாடும் மடம் திருவாவடுதுறையின் கிளை மடமான

தளிச்சேரி மடமாகும். தென் தமிழ் நாட்டில் திருவாவடுதுறையின் கிளைகள் உருத்திரகோடிதேசிகர் காலத்தில் உண்டானவை என்பது மடத்தின் வரலாறு தரும் செய்தியாகும். ஸ்ரீ மடத்திற்கும் மானேந்தியப்பர் கோயிலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. மடத்தின் சிலைகள் கோயிலில் உள்ளன. மடத்தின் கட்டளையுமுண்டு. மடத்தின் அருகில் இக்கோயில் உள்ளது. இவ்வூரில் பண்டாரச் சந்நிதியவர்களால் பரீக்ஷிக்கப்பெற்று அபிஷேகம் செய்து வைக்கப் பெற்ற பல ஓதுவார்கள் இம்மானேந்தியப்பர் விடுதியில் இருந்து வந்ததாகப் பெரியோர் தெரிவிக்கின்றனர். மடத்தின் சார்பில் இன்றும் விளா பூசைக்கட்டளை இக்கோயிலில் நடைபெறுகிறது.

**திருமடவிளாகம் :** மற்றொரு கல்வெட்டு 319/1916 கோயில் நிலங்களுக்கு வரிவிலக்கு அளித்ததைக் குறிப்பிடுகிறது. மன்னன் பெயர், ஆட்சியாண்டு போன்ற விவரம் இதில் இல்லை. எனினும் வீரப்ப நாயக்கன் காலத்திலோ அவனுக்குப் பின்னரோ இக்கல்வெட்டு வெட்டப் பட்டிருக்க வேண்டும். எழுத்தமைதியும் 16-17 ஆம் நூற்றாண்டாகவே உள்ளது. மானேந்தீஸ்வர முடைய நாயனார் கோயில் என்று கோயில் குறிக்கப்படுகிறது. கல்லிடைக்குறிச்சி, நல்லூர் என அழைக்கப்படுகிறது. பழந் தேவதானம், காராண்மை, இறையிலி, அனுபோகப்படி, நல்லூர் வரி வாய்க்காலுக்கு மேற்கு முதற்கண்ணாறு தொடங்கி பல்வேறு இடங்களில் நிலங்கள் வரி நீக்கப்பட்டமை காண்கிறோம். கணவதித் தெற்கு என விநாயகர் கோயிலுக்குரிய இடம், இடம் பெறுகிறது. திரு நந்தவனம், திருமட விளாகம், தளிச்சேரி ஆகியவை பார்க்கிறோம். முதற் செய் நிலம், இரண்டாம் செய் நிலம் என நிலங்கள் வகைப்படுத்தப் பட்டுள்ளன. முதற் கண்ணாறு தொடங்கி, பன்னிரண்டாம் கண்ணாறு வரை பல கண்ணாறுகள் இடம் பெறுகின்றன. நந்தவனம் என்பது கோயிலுக்குரிய பூந்தோட்டமாகும். திருமட விளாகம் தளிகைச்சேரி மடத்திற்குரிய நிலமாகும். தளிச்சேரி வரி நீக்கிய ஊராகும். இன்றும் கல்லிடைக்குறிச்சி

யில் தளிகை மடத்திற்கு மிகுதியான நிலங்களும் தோட்டமும் மனையும் இருப்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். இங்குள்ள இரண்டு கல்வெட்டுகளின் மூலங்களைக் காண் போம்.

**மானேந்தியப்பர் கோயில் முன் மண்டபச் சுவரின் கிழக்குத் திசையில் கூடிய கல்வெட்டு.**

*1) கொல்லம் 773 மார்கழி மீ 11 பூறுவபக்கிஷத்து தசமியுஞ் சனி வாரமும் சிவயோகமும் சிவகரண*

*2) மும் பெற்ற உத்திரத்துனாடத் தேவர் உதகபூர் வதானப் பிரமாணமாவது சுவாமி மானேந்தியப்பந் திருனாள் நடக்கு*

*3) ம் படிக்கு ஸ்ரீமது வீரப்பனாயக்கரய்யன் தன்மமாக தித்தயப் பிள்ளை காரியத்துக்கு கர்த்தரான நல்ல*

*4) பெருமாள் பிள்ளை அவர்கள் புண்ணியமாக முதலி நயினாருள் கல்லிடைக்குறிச்சி நாட்டவரும் மோம்பலபட்டடை*

*5) யாரவரும் உதக பூறுவ தன்மதானப் பிரமாணம் எளுதிக் குடுத்தபடி இன்னாயினார் திருநாட் செலவு நட*

*6) க்கும் படி விட்டதளிச் சேரியில் இன்னாயனார் மேலைத் தெரு வீதியில் மேலைத் தெருவுக்கு எல்கையாவது கிழ*

*7) க்கே மேற்படி நயினார் நந்தவனத்துக்கு வடக்கு மேல் எல்லை...ங் காலுக்கு*

*8) க் கிழக்கு வடவெல்லை...தேவதானத்துக்குத் தெற்க்கு இன்னாங் கெல்லைக்கு உள்ளிட்ட எல்லையும் வ*

*9) டக்குத் தெரு வ...யாவது கீழ் எல்லை அம்பலத்தாடும் தம்பிரான் மடத்துக்குந் தென் எல்லை...தெரு*

10) வுக்கு...வட எல்லை வயல் இன்னாங் கெல்லைக்கு எல்லையாவது

11) கீள் எல்லை...டத்துக்கு தென் எல்லை. தெருவுக்கு வடக்கு மேல் எல்லை பெருவழிக்

12) கு வட எல்லை ஆக இன்னான் கெல்லை உள்ளிட்ட எல்லையில்

13) கைக் கொள்ளுவார்க்கு குடியேற்று விச்சு கொள்ளு வார்க்கு பண்டும் கூலி ஆள் அரைப்பணமும் உள்பட ஸ்ரீமது

14) வீரப்ப நாயக்கரய்யன் தன்மமாக...னாவே இன்ன யினார் திருநாட் செலவும்

15) நடத்திக் கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கையாண்டு கொள்வாராகவும் கையாளுமிடத்தில் இந்

16) த தன்மத்துக்கு அகிதம் விசாரித்த பேர்கள் கங்கை கரையிலே காராம் பசுவையும் பிராமணனையும் கொன்ற

17) தோஷம் அனுபவிக்கக் கடவாராகவும் இந்த தன்மம் நடத்தின பேர்கள் அசு.

18) வ மேத யாகம் செய்த பலனை அடையக் கடவாரா கவும் முதலிய நயினான் செப்புந்தினாத பிள்ளைக் கடைக் கட்டு ஆதிவராக நாள் பிள்ளை எழுத்து கோநேரி

19) க் கடைக்கூட்டு பிரம...பிள்ளை எழுத்து எல்லார்க்கு நயினா பிள்ளை சம்புநிதி ஆரிய நயினா பிள்ளை எளுத்து தியாகப் பமு

20) தலியார் சம்பு நிதி மகா மு...முதலியார் எளுத்து சடையப்ப முதலியார் எழுத்து நயினா பிள்ளை எளுத்து கோணைய பிள்ளை எளுத்து செ...மு

21) றுகரி எளுத்து இரையமன் மார்த்தாண்ட பிள்ளை எழுத்து

22) பலபட்டடை மெக்கும் ஸ்ரீ... க யர் எழுத்து மூ... நயினான் முதலி எளுத்து மலுக்க அடவியான் எளுத்து.

23) மானேந்திய முதலியார் உள்ளிட்டாரையும் அய்யகு... யும் உள்ளிட்டாரையும் நடத்திக் கொள்ளவும்

**மேற்கண்ட கல்வெட்டுக்கருகில் உள்ள மற்றோர் கல்வெட்டு.**

1) ஸ்வஸ்திஸ்ரீ முள்ளி நாட்டு நல்லூர் மானேந்தீஸ்வர முடைய நாயனார் கோயில் ஊர் நீங்கல்

2) மாடை பிறிவு இன்னாயினார்க்குப் பழந் தேவதானங் காராண்மை இறையிலி அனுபோகப்ப

3) டி நல்லூர் புரவரி வாய்க்காலுக்கு மேற்கு முதற் கண்ணாறு ஸ்ரீ கணவதிக்குத் தெற்கு முதற் செய் நில

4) ம் அரை மா முந்திரிகை இரண்டாம் செய்யி...லங் கீழரை மூன்றாஞ் செய் நிலம் ஒரு மாத்திரு நந்தலனம் சாண

5) மாவ கண்ணாறு தெற்கு முதற் செய் நிலம் இரண்டாஞ் செந்நிலம் அரைக்காணி முந்திரிகை மூன்றாங்

6) கண்ணாறு ரதற்கு முதற் செய் நிலம் ஒரு மா...இ ஞ் செய் நிலம் ஒருமா மூன்றாஞ் செய் நாலாஞ் செ...ம் நிலம்

7) காணி அரைக்காணி மேற்கு நாலாங் கண்ணாறு தெற்கு முதற்செய்நிலம் அரை மா இரண்டாஞ் செய்நிலம் அரைமா

8) அரைக்காணி மூன்றாஞ் செய் நிலம் அரை மா முந்திரி கைக் கீழரை மேற்கு ஐஞ்ஞால் கண்ணாறு தெற்கு மூன்றாஞ் செய்

9) நிலங் காணி முந்திரிகை கீழரை மேற்கு ஆறாங் கண்ணாறு தெற்கு இரண்டாஞ் செய் நிலங்காணி முந்திரிகைக் கீழ

10) ரை மூன்றாஞ் செய்நிலம் அரைமா முந்திரிகை கீழரை மேற்கு ஏழாங் கண்ணாற்றுத் தெற்கு இரண்டாஞ் செய்யு

11) ம் மூன்றாஞ் செய்யும் நிலம் மகாகாணி அரைக்காணி மேற்கு ஒன்பதாங் கண்ணாற்றுத் தெற்கு முதற் செய் நிலம் அ

12) ரை மாவரைக் காணி முந்திரிகை மேற்குப் பத்தாங் கண்ணாற்றுத் தெற்கு முதற் செய்யும் இரண்டாஞ் செய்யும் நில

13) ங் காணி நாற்றடியுந் திடலும் நில அரை மாவரைக் காணி திரு நந்த வனமுஞ் செங்கழு நீர்க்குழியும் நா

14) ற்றடியுந் திருமட விளாகமும் தேர் மண்டபமும் உட்பட நிலம் ஆறுமாக் காணி முந்திரிகை கீழரை ஆகநிலம்

15) எழுமாக் காணி முந்திரிகை கீழரை நீக்கி நிலம் முக்காலே அரைமா முந்திரிகை கீழரை நல்லூர்ப் புறக்கா

16) ல் நிலம் எழுமா வரை ஆக நிலம் ஒன்றே மூன்று மா முந்திரிகை கீழரை

17) ஒரு மா வரைக் காணியரைக் கீஎ் கால் மேறகு ஐஞ்சாங் கண்ணாறு வடக்கு இரண்டாஞ் செய்யும் மூன்றாஞ் செய்யும் நிலம் அரை

18) மா வரைக் காணி திருநந்தவனந் தோட்டம் மேற்கு ஆறாங் கண்ணாறு வடக்கு இரண்டாஞ் செய் நிலம் காணி முந்திரிகை திருந

19) ந்தவனம் தளிச்சேரி சென்னாகனுக்கு மேற்கு ஒன்பதாங் கண்ணாறு நி...டாங்களுக்கு வடக்கு ஏழாஞ் செய்யும் எட்டா

20) ஞ் செய்யும் நிலம் ஒரு மா வரையின் கீழரை இது திருநந்தவனமும் தோட்டமும் மேற்குப்பத்தாங்|கண்ணாறு வ

21) டக்கு ஏழாஞ் செய்யும் நிலம் இரண்டு மாக்காணி அரைக்காணி முந்திரிகை

22) இது திரு நந்தவனமுஞ் செங்கழு நீர்க்குழியுந் திருமட விளாகமும் பத்தாஞ் செய் நிலமும் திரிகை ஆக நிலம் ஒன்றே

23) இரண்டு மா முக்காணி அரைக்காணி முந்திரிகை இதில்...ல் முக்காணியினால் மடக்கி நிலம் காணி அரையு

24) ம் ஒருமா வரைக்காணி முந்திரிகை கீழரை...செய் நிலம் ஒருமா வரைக் காணி முந்திரிகைக் கீழரை இத்துலா நாற்ற

25) டி நிலம் அரை மா முந்திரிகை மேற்குப் பதினொ றாங் கண்ணாறு தெற்கு முதற் செய்யும் இரண்டாஞ் செய்யும் நிலம் முக்கா

26) ணி அரைக்காணி முந்திரிகை இச்செய்யும் மூன்றாம் செய்யும் நிலம் அரை மாவரைக் காணி முந்திரிகை துலாப

27) ன்னிரண்டாங் கண்ணாறு தெற்கு முதற் செய்யும் இரண்டாம் செய்யும் நிலம்அரை மா வரைக்காணி மேற்கு இரண்டா

28) ங் கண்ணாற்றுச் சீ கணவதிக்கு வடக்கு முதற் செய் நிலம் அரைக்காணி மூன்றாங் கண்ணாற்று வடக்கு முதற் செய்யும் இர

29) ண்டாஞ் செய்யும் நிலம் ஒரு மா முக்காணி அரைக் காணி முந்திரிகையின் கீள் கால் இச்செய்யும் மூன்றாம் செய்யும் நில

30) ல மாகாணி அரைக்காணி திருநந்தவனமும் நாலாங் கண்ணாறு வடக்கு முதற் செய்யும் இரண்டாம் செய்யும் நிலம்.

# சுப்பிரமணியர் கோயில்

**இரட்டைக் கோயில்கள்:**

கல்லிடைக் குறிச்சி கன்னடியன் வாய்க்காலுக்கு இரு புறமும் மானேந்தியப்பர் கோயிலும் சுப்பிரமணியர் கோயிலும் உள்ளன. சுப்பிரமணியர் கோயில் மிகப் பெரிய கோயில் ஆகும். இக்கோயிலில் விநாயகர் கோயிலும் சேர்ந்துள்ளது. குலசேகரமுடையார் கோயிலுக்குரிய ஐம்பொன் சிலைகளும் பாதுகாப்புக் கருதி இங்கு வைக்கப்பட்டுள்ளன, கோயில் கிழக்குப் பார்த்தபடி இருப்பினும் மேற்கிலும் வாயில் உண்டு. அல்பமண்டபம் என்ற அலங்கார மண்டபம் நாற்புறமும் திறந்த வெளியாகவுள்ள இடத்தில் உள்ளது. நடுவில் கூடிய தூண்கள், இரட்டைத் தூண்கள், ஒற்றைத் தூண்கள், சதுரம், வட்டம், சதுரம் என்ற நிலையில் உள்ளன. தூண்களில் அனுமார், நாட்டியப் பெண், மத்தளம்அடிப்பவர், பாம்புகள் அன்னப்பறவை போன்ற சிற்பங்கள் உள்ளன.

**கட்டிட அமைப்பு:**

இரட்டைத் தூண்களில் உள்ள பெண்டிர் நாட்டியக் காட்சிகள் அழகாக உள்ளன. முத்துத் தோரணம், குடம், போதிகை, உத்தரம், இரட்டைச் சிம்மம், வாழைப்பூ, கொடுங்கை, தாங்குதளம் என்ற நிலையில் தூண்கள் உள்ளன. $3 \times 6 = 18$ தூண்கள் உள்ளன. பல்வேறு ஆசனங் களில் மகளிர் உருவங்கள் உள்ளன. விரக நிலையில் உள்ள பெண்டிர் உருவங்களும் உள்ளன. வீணை வாசிக்கும் சிற்பமும் உள்ளது. தேள், வில், தராசு, சிம்மம், குடம், மீன், ஆடு, ரிஷபம் என்ற ராசிகளும் சிற்பங்களாக உள்ளன.

**சிற்பங்கள்:**

சிவலிங்கத்திற்குப் பால் பொழியும் காமதேனு, சிவலிங் கத்தை வழிபடும் இரட்டைக்கிளிகள், மயிலுடன் கூடிய முருகன், தவம் செய்யும் முனிவன் ஆகிய சிற்பங்கள் கண்ணிற்கு விருந்தாகும். கிளியைக் கையில் வைத்துள்ள பெண் ஒருத்தி. கிளிக்குப் பழம் தருகிறாள். கிளி உண்கிறது.

இவளுடைய இடதுகை தொடை மீது கிளி அமர்ந்துள்ளது. இடப்புறம் கொண்டை அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. சடையுடன் குண்டோதரன், காலிங்க நர்த்தனம், வணங்கும் ஓர் அடியார், அனுமார், சிவலிங்கம், மழுவுடன் கூடிய ஆடவர், கத்தி கேடயத்துடன் கூடிய ஆடவர், வாள் ஏந்திய ஆடவர், மத்தளம் அடிக்கும் ஆடவர் எனப் பல நிலைகளில் ஆடவர் உருவங்கள் காணப்படுகின்றன.

ஆடை நெகிழும் நிலையில் பெண்கள் உருவங்களும் விரக தாபத்துடன் கையெடுத்துக் கும்பிடும் ஆடவர் உருவங்களும், அடுத்து உள்ளன. ஐந்தலை நாகலிங்கம், பாசுபத மூர்த்தம், பிரபையுடன் கூடிய சதுர்புஜ விஷ்ணு, அய்யனார், ஒற்றைக் காலில் தவம் செய்யும் அர்ச்சுனன், பாம்பைப் பிடித்த மயில், பூக்கள், தாளம் தட்டும் ஆடவன் என இம்மண்டபம் சிற்பங் களின் கருவூலமாகத் திகழ்கின்றது. பிற்காலமாக இருப்பினும் அம் மண்டபம் கலையை நேசிப்பவருக்கு உன்னத மண்டபம் எனலாம்.

### தூண்களும் சிற்பங்களும்

கோயில் நுழைவாயிலின் இருபுறமும் திண்ணை போன்ற அமைப்பு உள்ளது. வட்டமான நான்கு தூண்கள், தூண்களில் ஆடவர் உருவங்கள் உள்ளன. வாயிலைக் கடந்தால் உள்ளே பலிபீடம், விநாயகர் வாகனம் அடுத்து உள்ளது இதன் முதுகில் அமர பட்டாடை காட்டப்பட்டுள்ளது. இதையடுத் துக் கொடிமரம் உள்ளது. கோயில் திருப்பணியில் பங்கு கொண்ட இரு ஆடவர் சிற்பங்கள் வணங்கும் நிலையில் உள்ளன. நீண்ட குழைகள். காதுகளை அலங்கரிக்கின்றன. மார்பில் பட்டையான பதக்கமாலை உள்ளது. கால் வரை ஆடை உள்ளது. இங்குள்ள தூண்களில் குழலூதும் ஆடவன் மயில் சிங்கம், பூக்கள் போன்ற சிற்பங்கள் உள்ளன. வணங்கும் நிலையில் ஆடவன், இலிங்கத்தை வழிபடும் இரட்டைப் பாம்புகள், கிளி, அனுமார் சஞ்சீவி மலையை தூக்கிச்செல்லும் காட்சி, இடப்புறம் கொண்டையுள்ள ஆடவர் உருவம், போன்றவை பின் காண்கிறோம். மச்சத்தின் மீது அமர்ந்த நிலையில் யோக பட்டர் விரிந்த சடையுடன்

உள்ளார். இவர் 64 திருவிளையாடலில் வரும் சிவபெருமான் எனலாம். பாம்பின் எதிரில் மகுடி ஏந்தி ஊதும் பாம்பாட்டி போன்ற பல சிற்பங்கள் உள்ளன.

**வலம்புரி விநாயகர்:**

தென் பிரகாரத்தில் (திருச்சுற்று மாளிகையின் தென்புறம்) வழிபடும் பெண் உருவம், ஆடவன் உருவம், சண்டிகேஸ்வரர் உருவம், இரட்டைக் கலசம் ஏந்திய மனித உருவம், துறவியர் உருவம், போன்றவை கண்டு மகிழலாம். தவிர வலம்புரி விநாயகர் சிற்பம், அமர்ந்த நிலையில் கரண்ட மகுடமாய் உள்ளது. காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு. இரு கைகள் வலக்கை அங்குசம் இடக்கை மோதகம். துதிக்கையில் மோதகம். சதுரமான பீடத்தில் இரு கால்களும் மடங்கியபடி விநாயகர் அமர்ந்துள்ளார். இக்கோயிலின் வாயில்புறம் தேவியுடன் லீலைகள் புரியும் உச்சிஷ்ட கணபதி சிற்பம் உள்ளது. தேவியை அணைத்தபடி நாற்கரங்களில் பின் கைகள் பாசம், அங்குசம் உள்ளன. விநாயகர் தொடையில் தேவி. தேவிக்கு மார்பில் கச்சில்லை. இடக்கரம் மலர் ஏந்தியுள்ளார். கரண்ட மகுடம். இத்தகு கணபதி வடிவம் சிதம்பரம் திருமூலட்டா னத்து அர்த்த மண்டபத் தென்புற கோஷ்டத்தில் நாம் காணலாம். இத்தகு வடிவம் அரிய வடிவமாகும்.

**உமாமகேஸ்வரன்:**

சிவனுடைய தலையை ஜடாமகுடம் அலங்கரிக்க, கைகளில் மான், மழு, அபையம், ஆகூயம் காண்கிறோம். கழுத்தில் இரண்டு கழுத்தணிகள் உள்ளன. தோளில் தோளணி; கைகளில் காப்பு; மார்பில் முப்புரி நூல். காலில் தடித்த காப்பு; தொடை வரை ஆடை. எனச்சிவன் காட்சியளிக்கிறான். பின்புறம் சிரச்சக்கரம் உள்ளது. உமா, கரண்ட மகுடம். மார்பில் கச்சில்லை. கால்வரை ஆடை, இடக்கால் தொங்கவிட்டு வலக்கால் மடித்த நிலை. நீள் செவ்வக பத்திரத்தில் இரண்டு பத்ம பீடங்களில் சிவனும் அம்மையும் அமர்ந்த கோலத்தில் காட்சி அளிக்கின்றனர். அம்மனுக்குக் காதுகளில் அணிகலன்கள் ஏதும் இல்லை.

**விசாலாட்சி எனப்படும் அம்மன்:**

விசாலாட்சி அம்மன் பத்ம பீடத்தில் நின்றுள்ளார். அவர் வலக்கரம் மலர் ஏந்த இடக்கை லோலஉறஸ்தம். காதுகளில் மகர குண்டலங்கள். கழுத்தில் கண்டசரமும் பொன்வடமும் அழகாக உள்ளன, முப்புரி நூல் மார்பில் உள்ளது. தோள் களில் தோள் வளைகளும் கைகளில் வளையல்களும் உள்ளன. அம்மன் கரண்ட மகுடத்துடன் காட்சி தருகிறார்.

**ஐம்பொன் சிலைகள்.** கோயிலில் உள்ள ஐம்பொன் சிலைகள் வருமாறு

**ஸ்ரீபலி விநாயகர்:** வழக்கமாக உள்ள நான்கு கரங்கள்; பிரபையுடன் இவர் காட்சி அளிக்கிறார்.

**சூலத் தேவர்:** சதுரமான பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் சூலத்தேவர் நின்றபடி உள்ளார். ஹஸ்திர தேவர் எனவும் இவர் வழங்கப்படுவார்.

**சண்டேசர்:** மழுவேந்தியபடி வணங்கும் நிலையில் கூடிய சண்டேசர் உருத்திராட்சமாலையுடன் உள்ளார். பட்டையான வடமும் கழுத்தில் உள்ளது. சதுரமான பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் நின்றபடி இவர் அருள்பாலிக்கிறார்.

**அப்பர்:** சைவத் துறவியருக்குரிய மொட்டையடித்த தலை. தலையில் உருத்திராட்ச மாலை. கழுத்தில் பட்டையான வடம். இடைவரை ஆடை காட்டப்பட்டுள்ளது. செவிகளைப் பத்ர குண்டலங்கள் அலங்கரிக்கின்றன,

**ஞானசம்பந்தர்:** வலக்கை மேல் நோக்கிய நிலையில் இருக்க, இடக்கையில் பொற்கிண்ணம் ஏந்தியபடி உள்ளார். இடையில் அரைஞாண் அழகு செய்கிறது. கழுத்தில் பதக்க மாலை. காதுகளில் அணிகலன்கள் இல்லை. மார்பில் பூணூல் உள்ளது.

**சுந்தரர்:** சுந்தரர் இரு கைகளும் ஏதோ ஏந்திய நிலை (வீணை ஏந்திய நிலை?) யில் உள்ளது. கிரீட மகுடம். கழுத்தில்

நீண்ட மாலை. வயிற்றில் உதரபந்தம், சிம்மமுகக் கச்சு கைகளில் கடகங்கள். இவர் எழிலுடன் காட்சி அளிக்கிறார்.

**சுப்பிரமணியர்:** கரண்ட மகுடம், சக்தி, வஜ்ஜிரம், அபையம், வரதம் என நான்கு கைகளிலும் நான்கு முத்திரை கள் காண்கிறோம். கழுத்தணிகளுடன் காதுகளில் மகர குண்டலங்களும் உள்ளன. இடையில் சிம்மமுகச் கச்சு காலில் கடகத்துடன் பாதச் சங்கிலியும் காட்டப்பட்டுள்ளன.

**வள்ளி:** கரண்ட மகுடம், பத்ர குண்டலங்கள் காதுகளை அலங்கரிக்க மூன்று வித கழுத்தணிகள் கழுத்தை அலங்கரிக்க தோள்களில் தோளணிகள் உள்ளன. கைகளில் திருகு வளையல், கள். கடகம் காட்டப்பட்டுள்ளது. மார்பில் கச்சுண்டு. இடையில் கச்சுடன் கூடிய ஆடை. ஆடை கால் வரை நீண்டு காணப்படுகிறது.

**தெய்வயானை:** தெய்வயானை அழகிய மகுடத்துடன் காதுகளில் மகர குண்டலங்கள் தொங்க காட்சி அளிக்கிறார். மார்பில் கச்சில்லை. வலக்கை மலர் ஏந்த, இடக்கை லோல ஹஸ்தமாக உள்ளது. இதற்கு நேர் மாறாக வள்ளியின் கைகள் உள்ளன. இங்குள்ள முருகனைக் கார்த்தி நாதர் என வழங்குகின்றனர். கார்த்திகை விழாவில் மட்டும் இவர் வெளி யில் உற்சவ மூர்த்தியாகச் செல்வார்.

**உற்சவ விநாயகர்:** கரண்ட மகுடம். அகன்ற யானையின் காதுகள். கழுத்தில் நான்கு அணிகலன்கள் உள்ளன. வயிற்றில் உதரபந்தம் அழகுடன் உள்ளது. இடையில் அழகிய கச்சு. இடது கையில் உள்ள மோதகத்தைக் கைக்கொள்ளும் துதிக்கை. வலக்கையில் உடைந்த யானைத் தந்தம். பின்புறக் கைகளில் பாசம் அங்குசம் உள்ளன. இச்சிலையை வெளியில் தூக்கிச் செல்ல வசதியாக இருபுறமும் பித்தளைத் தண்டுகள் பொருத்தி உள்ளனர். இவர் உற்சவ விநாயகர் ஆவார்.

**உற்சவ சுப்பிரமணியர்:** வீதி உலாவிற்காக உள்ள சுப்பிரமணியர் கரண்ட மகுடத்துடன் உள்ளார். தொள்ளைக் காதுகள், சக்தி, வஜ்ரம், அபையம், வரதம் எனக் கைகளில்

முத்திரைகள் உள்ளன. இடையில் கச்சு உள்ளது. மார்பில் பூணூல். வயிற்றின் இடையில உதரபந்தம். கைகளில் கங்கனங்கள் மற்றும் கால்களில் பாதச் சங்கிலிகள் உள்ளன. பத்ர பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் இவர் வீற்றிருக்கிறார்.

**வள்ளி:** வள்ளியின் வலக்கை லோலஹஸ்தம். இடக்கை மலர் ஏந்திய நிலையில் உள்ளது. மார்பில் கச்சு உள்ளது. வயிற்றில் உதர பந்தம். கழுத்தில் கழுத்தணி. கால் வரை ஆடை. காதுகளில் பத்ர குண்டலங்கள் உள்ளன.

**தெய்வயானை:** தெய்வயானை வலக்கை மலர் ஏந்த இடக்கை தொங்கும் நிலையாக உள்ளது. மகர குண்டலங்கள். வழக்கமான உருவ அமைப்புடன் தெய்வயானை உள்ளார்.

**நடராசர்:**

ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்
ஆனந்தம் மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே – என்று

நடராசப் பெருமானைத் திருமூலர் போற்றுவார். இக்கோயிலில் உள்ள ஆடவல்லப் பெருமானின் தலை ஜடாபாரத்துடன் பிறையும் கங்கையும் சடையில் இருக்க, நெற்றியில் பட்டமும் செவிகளில் இடதுபுறம் பத்ர குண்டலமும் வலப்புறம் நாக குண்டலமும் அழகு செய்யவலது மேல் கரத்தில் உடுக்கை உள்ளது. இடது மேல் கை அனல் ஏந்தியுள்ளது. முன்புறக் கைகள் அபையமாகவும் தொங்கும் நிலையிலும் உள்ளன. வழக்கமான அணிகலன்களுடன் உருத்திராட்ச மாலையும் உள்ளது. பாம்பேந்திய முயலகனாகிய அறியாமை, இறைவனை நோக்க பத்ர பீடத்தில் உள்ள பத்ம பீடத்தில் பெருமான் நடன நிலையில் உள்ளார். அருகே சிவகாமி, காரைக்கால் அம்மை, மணிவாசகர் ஆகியோரும் உள்ளனர்.

**காரைக்கால் அம்மையார்:** பேய் வடிவில் உள்ள காரைக்கால் அம்மையார் புன்னகை தவழும் முகத்துடன் உள்ளார்.

மழுங்கிய தலையுடன், எலும்பும் தோலுமாக உள்ளார். இடக்காலை மடித்துள்ளார். வலக்கால் முட்டி மீது வலக்கை படிய இரு கைகளும் தாளம் தட்டும் நிலையில் காட்டப் பட்டுள்ளார். இவர் பத்ர பீடத்தில் உள்ளார். பத்ம பீடம் இல்லை. கால் வரை ஆடை உள்ளது. இச்சிலையைக் காணும் போது,

> இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு
> கின்றார்
> பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல்
> உன்னை என்றும்
> மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான்
> மகிழ்ந்துபாடி
> அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க
> என்றார் – என்ற

பெரிய புராணப் பாடல் நினைவிற்கு வந்தே தீரும்.

**மணிவாசகர்:** பத்ர பீடத்தின் மீதுள்ள சின் முத்திரையும் புத்தகமும் ஏந்திய கைகளுடன் உருத்திராட்ச மாலையுடன் உள்ள மணிவாசகர் நின்ற நிலையில் உள்ளார். மார்பில் பூணூல் காட்டப்படவில்லை. சித்தமலம் அறுவித்துச் சிவப்பழமாக மணிவாசகர் காட்சி தருகிறார்.

**அறுமுக செவ்வேள்:** பன்னிரண்டு கரங்களுடன் வழக்க மாக உடைய ஆறுதிரு முகங்களுடன் கூடிய ஆறுமுகன் கரண்ட மகுடமும் இரு காதுகளிலும் குண்டலங்களும் கழுத்தில் முத்துமாலை, முத்து வடம், தங்க வடம் போன்ற கழுத்தணிகளுடன் காட்சி தருகிறார்.

**வள்ளி:** இடக்கை மலர் ஏந்த வலக்கை லோலஹஸ்தத்தில் மார்பில் கச்சும் இடையில் உள்ள ஆடை கால் வரை தொங்க பத்ர குண்டல செவிகளுடன் உள்ளார்.

**தெய்வயானை:** காதுகளில் மகர குண்டலங்கள், கிரீட மகுடம். வலக்கை மலர் ஏந்த இடக்கை தொங்கியபடி

உள்ளது. பூணூல், தோளணி, கைகளில் கடகம் போன்ற அணிலகன்கள் வழக்கமாக உள்ளன.

இக்கோயிலில் காசி விஸ்வநாதர் கோயிலும் விசாலாட்சி அம்பாள் சந்நிதியும் தனித்தனியாக உள்ளன.

## விநாயகர் கோயில்

**மூலக்கோயில்:** கோயில் எளிய அமைப்புடன் உள்ளது. ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டி, மகா பட்டி ஆகிய உறுப்புகளை அதிட்டானத்தில் காண்கிறோம் கால் எனப்படும் சுவர், சுவரில் தூண், தூண்களில் முத்துச்சரம், என்று தொடர்ச்சியாகக் கட்டிட உறுப்புகளைச் சுவரில் காண்கிறோம். கருவறை கோஷ்டங்களில் இறை உருவங்கள் இல்லை. இது பாண்டியர் கால கலை அமைப்பு எனலாம். விநாயகர் கோயில் தென்புறக் கோஷ்டத்தில் புடைப்புச் சிற்பமாக மகர தோரணத்தில் தட்சிணாமூர்த்தி நாற்கரங் களுடன் உத்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ளார். கீரிவத்தில் தட்சிணாமூர்த்தி சிற்பம், மான், மழு சின் முத்திரை, கீழே தொங்கும் கை என நாற்கரங்களுடன் உள்ளது. ஆல மரம் காட்டப்படவில்லை. தலையை ஜடாபரம் அலங்கரிக்க, காதுகளை பத்ர குண்டலமும் நாக குண்டலமும் அணி செய்கின்றன. முயலகன் மீது இடக்காலை மிதித்தபடி பெருமான் வீற்றிருக்கிறார். முயலகன் பிடித்துள்ள பாம்பு படமெடுத்தபடி உள்ளது. கருவறை மேற்கிலும் கிழக்கிலும் கல்வெட்டு உள்ளது, உண்மையில் விநாயகர் கோயிலே தொன்மை வாய்ந்தது என்பது இங்குள்ள கல்வெட்டால் அறிய முடிகிறது. எனவே இதுவே பிரதான கோயில் எனலாம்.

**தூண்கள்:** திருச்சுற்று மாளிகையில் மாணிக்க வாசகர், அய்யனார் ஆகியோர் உள்ளனர். இக்கோயில் மகா மண்டபத்தில் 16 இரட்டைத் தூண்களும் 8 ஒற்றைத் தூண் களும் தூண்களில் சிம்மங்களும் உள்ளன. இம்மண்டபம் ஒரு கலை மண்டபம் என்று கூறலாம்.

**சபா நாயகர் மண்டபம்:** கல்லில் வடித்தெடுத்த சபாநாயகர், ஜடாபாரத்துடன் விளங்குகிறார். கல்லில் கூடிய பிரபையும் உள்ளது. பத்ர குண்டலமும் நாக குண்டலமும் செவிகளில் உள்ளன. கழுத்தில் பல்வேறு அணிகள் உள்ளன. வழக்கமான நான்கு கரங்கள் உள்ளன. சிவகாமி அம்மனும், தாளம் ஏந்தும் ஆடவரும் அருகில் நிற்கின்றனர். சபாபதி மண்டபத்தில் உள்ள தூண்களில் பல சிற்பங்கள் உள்ளன. ஐம்பொன்னில் கூடிய சபாநாயகர் சிலை சபாநாயகர் மண்டபத்தில் பொதுகாக இருக்கும். கருவறை விமானத்தில் அல்லது சுவரில் கல்லில் நடராசர் அமைக்கப்படும். ஆயின் நெல்லை மாவட்டத்தில் சபாநாயகர் மண்டபத்தில் கருங்கல்லில் ஆடலரசு உதிரிச் சிற்பம் இருப்பது சர்வ சாதாரணமாகும்.

விநாயகர் கோயில் கருவறையில் உள்ள கல்வெட்டை மத்திய அரசு, மூலமாகப் பதிப்பித்துள்ளது. கல்வெட்டின் செய்தி வருமாறு. ஸ்ரீராஜராஜ சதுர் வேதிமங்கலத்து மகா சபையார் ஓலையைக் கல்லிடைக் குறிச்சியில் உள்ள பிள்ளையார் புரவு வரி விக்ந வினாயகர் கோயில் சிவப்பிராமணன் கண்டு, நடவடிக்கை மேற்கொள்ளுகின்றான். முன்பு ஊராய்க் கொடுத்து வரி நீங்கலாக அனுபவித்து வருகிற நிலம், மீண்டும் மன்னன் 15 ஆவது எதிராமாண்டு புரட்டாசி மாதத்தில் வரி நீக்கி வழங்கப்படுகிறது. நான்கெல்லையிலும் சூலக்கல் நாட்டப்படுகிறது. நிலத்தில் இருந்து வரும் வருவாய் கொண்டு அமுதுபடி, சாத்துப்படி, உள்ளிட்டவை மேற் கொள்ள வேண்டும். உத்தரவில் கீழ்க்கண்ட அதிகாரிகள் ஒப்பமிட்டுள்ளார்கள்.

1) வலவூர் ஸ்ரீரங்கநாதன் (2) தேவவதி உமைபெருமாள் 3) பிறாந்தூர் மாதவன் (4) ஆதனூர் திருவாய் குல தேவன் 5) பேரிங்கூர் பிள்ளை ஆழ்வான் (6) கோரோவி ஆளவந்தான் 7) இடைக்காடன் குமரன் வாமனன் (8) இடைத்துறை சோமாசி (9) கொறுத்தலை பேராயிரமுடையான் (10) இளவி மங்கலத்து மற்றொருவன். மேற்கொண்டு கல்வெட்டு தொடர வில்லை. திருப்பணி காரணமாகக் கல்வெட்டு முழுதும் வெள்ளையடிக்கப்பட்டுள்ளது. விநாயகர் கோயிலும் முருகர்

கோயிலும் சம அளவில் கட்டப் பெற்ற கோயில்களாகப் பார்க்கிறோம். எனினும் இன்று சுப்பிரமணியர் கோயில் என்று வழங்கும் வழக்கமே மக்களிடையே உள்ளது. மானேந்தியப்பர் கோயிலில் நடைபெறும் விழாக்கள் யாவும் இங்கு நடைபெறுகின்றன. நாள்தோறும் நடைபெறும் பூசைகளும் குறைவில்லாமல் நடைபெறுகின்றன. மானேந்தியப்பர் கோயில் கல்வெட்டில் இடம்பெறும் கணபதி கோயில் இக்கோயிலாகவே இருக்கவேண்டும். இக்கோயில் கும்பாபிடேகம் குறித்தக் கல்வெட்டு வருமாறு.

*11 00ம் ஸு ஆனி மீ 25ம்*

*தேதி புதன்கிழமை திருவோண*

*நட்சத்திரம் 10 மணிக்கு*

*ஸ்ரீ மஹா கணபதி*

*ஸ்ரீ சுப்பிரமணிய*

*ஸ்வாமி கும்பாபிஷேகமும்*

*துவஜபிர திஷ்டையும்*

*நடந்தன.*

*8-7-1925 மீண்டும் 10.7.70 இல் சுப்பிரமணியர் கோயிலில் மட்டும் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நடந்துள்ளது.*

# குலசேகரமுடையார் கோயில்

**நுழைவாயில்:**

கல்லிடைக் குறிச்சியில் உள்ள சிவன் கோயில்களில், நெடுஞ்சாலைக்குத் தெற்கில் உள்ள குலசேகரமுடையார் கோயில் கட்டிட அமைப்பிலும் சிற்ப நேர்த்தியிலும் பிற்காலப் பாண்டியரின் கைவண்ணத்தைப் பிரதிபலிக்கிறது. கோயில் கிழக்குப் பார்த்த வாயிலை உடையது. வாயிலின் எதிரில் தனி மண்டபம் ஒன்றுள்ளது. திண்ணை அமைப்புடன் இருபுறமும் தூண்கள் உள்ளன. தூண்கள் ஒவ்வொன்றிலும் நாயக்கர் போன்ற வடிவில் நான்கு சிற்பங்கள் உள்ளன. மொத்தம் 16 தூண்கள் இங்குள்ளன. தனியாக இரு தூண்கள் நிறுத்தப்பட்டுள்ளன.

**அரசர்கள்**

நாயக்கர் உருவம் தலையில் கொண்டை, கழுத்தில் முத்துமாலை, வணங்கும் நிலையில் கைகள், கால் வரை ஆடை, முகத்தில் பெரிய அளவில் மீசை என்ற நிலையில் உள்ளது. நுழை வாயிலுக்கு மேலே யாளி, கிருஷ்ணன், பாம்பு ஆகிய உருவங்கள் காட்டப்பட்டுள்ளன.

**நீண்ட மண்டபம்:**

வாயிலைக் கடந்து உள்ளே நுழைந்ததும் நான்கு வரிசை கொண்ட நீண்ட மண்டபம் உள்ளது. தலா ஏழு தூண்கள் உள்ளன. உருளை வடிவ தூண்கள், கீழே சதுர வடிவில் உள்ளன. தூணில் யாழ் வாசிக்கும் பெண் சிற்பம், பூக்கூடையுடன் வழிபடச் செல்லும் பூசாரி உருவம் ஆகியவை உள்ளன. இரண்டாவது தூணில் குதிரை வீரனும், மூன்றாவது தூணில் சிவலிங்கமும் இதற்கு எதிரில் ஒரு பெண்ணின் வடிவமுடைய தூணும் உள்ளன. நீள்வாக்கில் அமைந்துள்ள இம்மண்டபத்தில் பலி பீடம் உள்ளது. நீள் சதுர கல்லில் கண்டம், முப்பட்டை, கண்டம் என்ற நிலையில் தூண் உள்ளது. நந்தி அழகிய மணியுடன் உள்ளது. இவ்வூரில் உள்ள நந்திகள் யாவும் எழிலுடன் உள்ளன. கொடி மரமும் உரிய அமைப்புடன்

காட்சி அளிக்கிறது. யாளி, விரிந்த தாமரை, ஒற்றைக் காலில் வழிபடும் அர்ச்சுனன் போன்ற சிற்பங்கள் இம்மண்டபத்தில் காண்கிறோம்.

**நடராச மண்டபம்:**

வடக்கில் தெற்குப் பார்த்தபடி நடராச மண்டபம் உள்ளது. தூண்கள் சதுரம், இரட்டைத் தூண்கள் என்றுள்ளன. தூண்களில் இறை உருவங்களும் விலங்குகளும் செதுக்கப்பட்டுள்ளன. புலி, காக்கையுடன் கூடிய சனியீஸ்பரன், விநாயகர், கருடன், சிம்மம், குதிரை மீது பறக்கும் வீரன், வழிபடும் அடியார், தவம் செய்யும், அர்ச்சுனன், காலிங்க நர்த்தனன், பிச்சுவா மற்றும் கத்தி ஏந்திய வீரன் போன்ற உருவங்கள் காண்போரை ஈர்க்கக் கூடியவையாக உள்ளன. அழகான துவார பாலகர் சிற்பங்களும் உள்ளன. இரட்டைத் தூண்கள் எல்லாவற்றிலும் சிம்மங்களும் உள்ளன.

**கலைக் கருவூலம்:**

வில்லேந்திய இராமர், கவலையில் மூழ்கிய பெண், முனிவரை வணங்கும் வேறொரு முனிவர், பெண், சிவலிங்கம், சிவலிங்கத்தை வழிபடும் கண்ணப்பர் திருஉருவம், ஆண் பெண் சிற்றின்பக் காட்சியைக் காட்டும் உருவங்கள், திருவாவடுதுறை தம்பிரான் போன்ற உருவ அமைப்புடைய துறவி உருவம் ஆகிய சிற்பங்கள் தூண்களில் செதுக்கப்பட்டுள்ளன.

வடக்கில் 7 தூண்கள் வீதம் 5 வரிசையில் தூண்கள் உள்ளன. எளிய அமைப்பு. சதுரம், பதினாறு பட்டை, போதிகை, உத்தரம் என்று தூண்கள் உள்ளன. சிற்பங்கள் இத்தூண்களில் இல்லை.

**குண்டோதரன்:**

மழு, தண்டம், நெருப்பு சுவாலை, முகத்தில் மீசை, கழுத்தில் முத்து மாலை, தோளில் தோளணி, இடையில் அணியுடன் ஒரு சிற்பமுள்ளது. இது குண்டோதரன் சிற்பமாகும்.

**குடமுழக்கு:**

இக்கோயில் 7. 2. 1943 இல் குடமுழக்கு நடைபெற்றுள்ளது. சங்கரலிங்கம் தர்மகர்த்தாவாக இருந்து முடித்துள்ளார். சுப்பிரமணியர் மற்றும் விநாயகர் சிலைகள் புதிய சிலைகளாகும்.

**வீரப்ப நாயக்கர்;**

உட் கோபுரத்தில் கஜலட்சுமிக்கு நீர் சொரியும் யானைகளைக் கொண்ட சிற்பமும் உள்ளது. சுவரில் வீரப்ப நாயக்கனுடைய கல்வெட்டும் உள்ளது.

**சந்திரன்:**

சந்திரன், பிரபையுடன் இரு கைகளில் மலர் ஏந்தியபடி உள்ளார். காதுகளைப் பத்ர குண்டலங்கள் அலங்கரிக்க கரண்ட மகுடத்துடன் கழுத்தில் கழுத்தணியும் இடையில் சிம்மமுகக் கச்சும் கால்வரை உள்ள ஆடையும் கொண்டு இவர் காட்சியளிக்கிறார்.

**பைரவர்:**

வடகிழக்கில் தெற்குப் பார்த்த படி பைரவர் 'ஜீவாலா மகுடத்துடன்' காட்சி தருகிறார். கைகளில் உடுக்கை, பாம்பு சூலம், கபாலம் ஏந்தியபடி சினமுள்ள நாய் பின்புறம் நிற்க கோரைப் பல் காட்டியபடி இவர் நிற்கிறார். மார்பில் பதக்கமும் முத்து மாலையும் எலும்புமாலையும் உள்ளன. தோளில் தோளணி உள்ளது. முழங்கால்கள் அழகிய மணிகளுடன் உள்ளன. எனினும் ஆடை இல்லை. இடக்காது பத்ர குண்டலமும் வலக்காது நாக குண்டலமுமாக பைரவர் காட்சி அளிக்கிறார்.

**மரக் கதவில் உள்ள கல்வெட்டு:**

விரோதிகிருது வருஷ கல்வெட்டொன்று ஏகாம்பரநாத முதலியார் திருப்பணியைக் குறிப்பிடுகிறது. மரக் கதவில் இக்கல்வெட்டு உள்ளது. காலம் 18 ஆம் நூற்றாண்டாகும்.

**பெரிய மண்டபம்:**

உள் கோபுரத்தை அடுத்துள்ள பெரிய மண்டபத்தில் 5 வரிசை தூண்கள் கொண்ட மண்டபம் உள்ளது. வரிசை ஒன்றுக்கு 4 தூண்கள் வீதம் 20 தூண்கள் உள்ளன. தூண்கள் சதுர வடிவ தூண், இரட்டைத்தூண் என்று இருநிலைகளில் உள்ளன. புடைப்புச் சிற்பங்கள் தூண்களில் உள்ளன. இம்மண்டபத்திற்குத் தெற்கில் மடைப்பள்ளி உள்ளது. இங்குக் கிணறு ஒன்றும் உள்ளது. தென்புற வாயிலில் சிம்ம முகத்துடன் கூடிய மூன்று படிகள் உள்ளன. தூண்களின் அருகே அரச வடிவில் கூடிய உருவமுள்ள தூண் உள்ளது. திருச்சுற்று மதிலும், மதிலில் சிம்மம், யாளி போன்ற சிற்பங்களும் காணப்படுகின்றன.

**ஜ்வரகேஸ்வரர்:**

மகா மண்டபத்தில் உள்ள சுவரில் கல்வெட்டு உள்ளது. திருச்சுற்று மதிலின் தெற்கில் மூன்று முகங்களுடன் ஜடாபாரம் தாங்கிய ஜ்வரதேவர் சிற்பம் உள்ளது. சூலம், மழு, மலர், கபாலம் கைகளில் காண்கிறோம். திரிபங்க நிலையில் இவர் உள்ளார். கால் வரை ஆடை உள்ளது. மார்பில் பூணூல், காட்டப்பட்டுள்ளது. காதுகளில் செவிப்பூக்கள் உள்ளன. இவருக்குக் கோரைப்பல் தெரிகிறது. தோளணி, நெற்றிப் பட்டம் ஆகியவை உள்ளன.

**சப்த மாதர்:**

கருவறையொட்டி வெளியே செல்ல தெற்கில் வழியுண்டு. திருச்சற்று மாளிகையில் சப்த மாதர் சிலைகள் உள்ளன. பிராம்மி இடக்கால் மடித்து வலக்கால் தொங்க விட்டபடி நான்முகமும் நாற்கரமும் கொண்டு விளங்குகிறார். இவரை யடுத்து மஹேஸ்வரி, இந்திராணி. வைஷ்ணவி, வாராகி, கௌமாரி, சாமுண்டா ஆகியோர் வழக்கமாக உள்ள பாணி யில் உள்ளனர். விநாயகரும் இங்குள்ளார்.

**ஆலமர் செல்வன்;**

கருவறைத் தென்புறக் கோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தி சனகாதி முனிவருடன் வீற்றிருக்கிறார். தட்சிணாமூர்த்தி முயல

கன் தலையில் வலக்கால் ஊன்றி, இடக்கால் வலக்கால் முட்டி மீது வைத்தபடி கல்லால் மரத்தின் கீழ் உள்ளார். கழுத்தில் பதக்க மாலையுடன் உருத்திராட்ச மாலைகள் உள்ளன. கைகளில் ஒன்று உருத்திராட்ச மாலையுடன் சின் முத்திரை காட்டுகிறது. இடது முன் கை முட்டி மீது வைத்திருக்க பின் கைகள் மான், மழு காட்டுகின்றன. ஜடா பாரத்துடன், பத்ர குண்டலமும் நாக குண்டலமும் செவிகளை அழகுபடுத்த, புன்னகை தவழும் முகத்துடன் இவர் உள்ளார். மானும் மழுவும் சடையைத் தொட்டபடி உள்ளன.

**விநாயகர்:**

கன்னி மூலை விநாயகர் சிலை வடிவில் பெரியது. விநாயகர் நான்கு கரங்களில் பாசம். அங்குசம், தந்தம், மோதகம் காண்கிறோம். தும்பிக்கை மோதகத்தைப் பற்றும் நிலையில் உருவம் உள்ளது.

**விமானத்தில் உள்ள தட்சிணாமூர்த்தி**

தட்சிணாமூர்த்தி சிற்பமுள்ள கோஷ்டத்தின் மேல் சிறிய கோயில் செல்வக வடிவில் பிற்காலத்தில் கட்டியுள்ளனர். கிரீவத்தில் கூடிய தட்சிணாமூர்த்தி சிற்பத்தில் முயலகன் இல்லை. இரண்டு சிற்பங்களும் சுகாசன நிலையில் உள்ளன. விமானத்தில் உள்ள தட்சிணாமூர்த்தி உத்குடி ஆசனத்தில் உள்ளார்.

**சாஸ்தா**

விநாயகருக்கு அடுத்துச் சிறிய வடிவில் அண்மைக் காலத்தில் செய்யப்பட்ட சாஸ்தாவை வைத்துள்ளனர். மேற்கில் மட்டும் திருச்சுற்று மாளிகையுடன் வேறொரு மாளிகை உள்ளது. வரிசைக்கு 8 தூண்கள் நட்டு பொருத்தியுள்ளனர். கருவறை கோஷ்டத்தில் சிலை ஏதும் இல்லை. ஆனால் கோஷ்டத்தில் மகர தோரணத்தில் யோக தட்சிணாமூர்த்தி சிற்பம் உள்ளது. மேலே அமர்ந்த நிலையில் விநாயகர் சிற்பம் காண்கிறோம். சாலை, கூடு போன்ற அமைப்புகள் இங்குள்ளன.

முருகர்கோயில்:

மேற்குத் திருச்சுற்றில் சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. இருபுறமும் வள்ளி, தெய்வயானை உள்ளனர். முருகன் கரண்ட மகுடத்துடன் உள்ளான். சக்தி, சூலம், அபயம், வரதம் முருகன் கைகளில் காண்கிறோம். செவிகளைப் பத்ர குண்டலங்கள் அழகு செய்கின்றன. மார்பில் அணிகலன்களும் இடையில் அழகிய சிறிய கச்சும் அலங்கரிக்கின்றன. மயில் பாம்புடன் பின்புறம் நிற்கிறது. செவ்வகமான கல்லின் மீதுள்ள பத்ம பீடத்தில் முருகர் சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது.

வள்ளி:

முருகனுக்கு வலப்புலம் வள்ளி நிற்கிறார். வலக்கை தொங்க இடக்கை மலர் ஏந்தியபடி சிற்பம் உள்ளது. மார்பில் கச்சு உள்ளது. காதுகளை ஓலைக் குழைகள் அழகூட்டு கின்றன. கால்வரை ஆடை உள்ளது.

தெய்வயானை:

முருகனுக்கு இடப்புறம் உள்ள தெய்வயானை, மகரக் குழைகள் கொண்ட செவிகளுடன் மார்பில் கச்சின்றி உள்ளார். இவருக்கும் கால்வரை ஆடை உள்ளது. கரங்களில் உரிய அணிகலன்கள் உள்ளன. செவ்வக வடிவக் கல்லின் தாமரைப் பீடத்தின் மீது வள்ளியும் தெய்வயானையும் தனித்தனியாக காட்டப்பட்டுள்ளனர்.

சண்டிகேஸ்வரர்:

சண்டிகேஸ்வரர் உரிய இடத்தில் இருந்து அருள் பாலிக் கிறார். வீரபத்ரர் உருவமும் அழகிய கோமுகமும் இக் கோயிலில் காணலாம்.

பிரம்மா:

வடக்குக் கோஷ்டத்தில் பிரம்மா சிற்பம் இல்லை. எனினும் மகர தோரணத்தில் நான்முகன் பத்மத்தின் மீதுள்ளார். இது அழகிய தோரணம் எனலாம்.

**அதிட்டானம்:**

குலசேகரமுடையார் கோயில் கருவறை அதிட்டானம், ஜகதி, கண்டம், முப்பட்டைக் குமுதம், ஜகதி, பட்டி, கண்டம், கால் (சுவர்) என்ற உறுப்புகளைப் பெற்றுள்ளது. கால் எனப்படும் சுவரில் தூண்களும் அரைத் தூண்களும் உள்ளன. தூணில் அமைய வேண்டிய உள் உறுப்புகள் யாவும் உள்ளன. கொடுங்கையில் ஒவ்வொரு தூண் முடிவிலும் மனித உருவம், சிம்மம், காமதேனு போன்றவை உள்ளன.

**அறம் வளர்த்த நாயகி:**

அம்மன் பெயர் அறம் வளர்த்த நாயகியாகும். இவருக்குக் கரண்ட மகுடமும் மகர குண்டலங்களும் உள்ளன. கழுத்தில் அணிகலன்கள், தோளில் தோளணி, முழங் கைகளில் இரட்டைக் கடகங்கள் காண்கிறோம். வலக்கை பூ ஏந்த, இடக்கை லோல ஹஸ்தம் என்ற நிலையில் அம்மன் உள்ளார். இடையில் சிம்மமுகக் கச்சு உள்ளது. மார்பில் கச்சில்லை. புன்னகை தவழும் காட்சி. கீழே அழகிய தாமரைப் பூ பீடம் உள்ளது. பாண்டியர் சிற்பக் கலைக்கு இவ்வம்மன் சிற்பமே போதும்.

**அறம் வளர்த்த நாயகி கட்டிட அமைப்பு:**

வடக்கில் தெற்குப் பார்த்த படி அம்மன் காட்சி தருகிறார். இச்சந்நிதியும் ஜகதி, கண்டம், பட்டி, மகாபட்டி, சுவர் என்று அமைந்துள்ளது. மேலே கொடுங்கை, உத்தரத்துடன் இணைகின்றது.

குலசேகரமுடையார் கருவறை, அர்த்த மண்டபம், முன் மண்டபம், மகா மண்டபம் என்று எளிமையாக உள்ளது. ஒரே இடத்தில் இருந்து சுவாமியையும் அம்மனையும் வழிபடும் விதத்தில் கோயில் அமைப்பு உள்ளது.

**திருச்சுற்று மாளிகை:**

குலசேகரமுடையார் கோயிலில் வெளிச்சுற்று மதிலும் உட்புறத்தில் திருச்சுற்று மாளிகையும் காண்கிறோம். மேற்கில் வழி உண்டு. இங்குள்ள தூண்களில் ஒருதூணில் பெண் சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தின் காதுகளில் அணிகலன்கள் ஏதுமில்லை.

**செப்புச் சிலைகளின் இருப்பிடம்:**

குலசேகரமுடையார் கோயிலுக்குரிய மூன்று ஐம்பொன் சிலைகள் பாதுகாப்புக் கருதி, சுப்பிரமணியர் கோயிலில் வைக்கப்பட்டுள்ளன.

**சோமாஸ்கந்தர்:**

சிவனுக்கு ஜடாமகுடம். மகுடத்தில் பாம்பு, பிறை, கங்கை ஆகியவை உள்ளன. செவிகளில் அணிகலன்கள் இல்லை. கழுத்தில் பட்டையான வடங்கள். தோளில் தோளணி. கழுத்தில் இருந்து வலது இடுப்பு வரை செல்லும் பூணூல். இடையில் உதர பந்தம். தொடைவரை ஆடை உள்ளது. மான், மழு, அபயம், ஆகூயம் கொண்ட முத்திரைகளை நாற்கரங்களில் காண்கிறோம். கைகளில் கடகங்களுடன், சொருகு வளையல்களும் கைவிரல்களில் மோதிரங்களும் பார்க்கிறோம். இச்சோமாஸ் கந்தரைக் கோயிலில் குலசேகர முடையார் என மக்கள் அழைக்கின்றனர். காலம் 16 ஆம் நூற்றாண்டின் தொடக்கமாக இருக்க வேண்டும்.

**அம்மன்:**

சோமாஸ்கந்த அம்மன் கரண்ட மகுடம். காதுகளில் அணிகலன்கள் இல்லை. கழுத்தில் கழுத்தணிகள் உள்ளன. மார்பில் பூணூல் உள்ளது. மார்பில் கச்சில்லை. இடையில் இருந்து கால் வரை ஆடை. பாதத்தில் பாதச் சங்கிலி உள்ளது. வலக்கை மலர் ஏந்த, இடக்கை பீடத்தில் ஊன்றிய படி சிற்பம் உள்ளது.

**அறம் வளர்த்த நாயகி செப்புத்திருமேனி**

அறம் வளர்த்த நாயகி, செப்புத் திருமேனி எழிலுடன் உள்ளது. இது கரண்ட மகுடம். இரு செவிகளிலும் மகர குண்டலங்கள் உள்ளன. நெற்றியில் பொற்பட்டம். கழுத்தில் கழுத்தணி, தோளில் கேயூரம் போன்றவை உள்ளன. மார்பில் கச்சில்லை. இடையில் அழகிய சிம்மமுகக் கச்சு. கால்வரை ஆடை விரிந்து கட்டிய கொசுவம் அழகாக உள்ளது. இருபுறமும் சரிகை வேலைப்பாடு கொண்ட அமைப்புடன் ஆடை உள்ளது. பாதத்தில் பாதச் சங்கிலி உள்ளது. பத்ம

பீடத்தின் மீது அம்மன் நின்றபடி உள்ளார். கீழே பத்ர பீடம் இல்லை. காலம் 1531 என்பதைக் கல்வெட்டு மூலம் அறியலாம்.

**சூலத்தேவர்:**

மேற்கண்ட இரு சிலைகளுடன் சூலத் தேவர் சிலையும் கோயிலில் உள்ளது. முருகர், வள்ளி, தெய்வயானை, விநாயகர் ஆகிய சிலைகள் களவு போனதால் பாதுகாப்புக் கருதி குலசேகரமுடையார் கோயில் சிலைகள் சுப்பிரமணியர் கோயிலில் வைக்கப்பட்டுள்ளன.

**குலசேகரமுடையார் கோயில் கல்வெட்டுகள்**

குலசேகரமுடையார் கோயில் முன் வாயில் சுவரிலும் கருவறைச் சுவரிலும் மரக்கதவிலும் கல்வெட்டுகள் உள்ளன. யாவும் தமிழ்க் கல்வெட்டுகளே யாகும்.

**வீரப்ப நாயக்கன்:**

நுழைவாயிலில் உள்ள கி பி. 1558 ஆம் ஆண்டு கல்வெட்டு வீரப்ப நாயக்கனுடையதாகும். சக ஆண்டு 1480ம் கொல்ல மாண்டு 734ம் இதில் உள்ளன. புரட்டாசி மாதம் மூன்றாம் தேதி உத்திரட்டாதி நாள் என்ற பஞ்சாங்கக் குறிப்பு இருப்பதால் கல்வெட்டின் காலம் 2. 9. 1558 ஆகும்.

**குருகுலராயன்:**

வீரப்ப நாயக்கன் விருப்பப்படி கல்லிடைக் குறிச்சி உள்ளிட்ட பற்று மணியம் குருகுலராயரும் நாட்டாரும் கூடி கற்பித்த காரியம் அஞ்சுபதியில் கொல்லற்கும் தச்சற்கும் இவர்களுக்குண்டான வரியும் இறையும் நீக்கப்பட்டன. இதனைக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ள உத்தர வாகிறது. கல் வெட்டிக் கொள்ள உத்தரவிட்ட வீரப்ப நாயக்கன், குறுநில மன்னன் எனலாம். குருகுலராயன், மணியம் ஆவான். மதுரை விசுவநாத கிருஷ்ணப்ப நாயக்கனின் மரபில் வரும் வீரப்ப நாயக்கன் வேறு. இவன் வேறு ஆகும். சக ஆண்டு 1505 இல் மதுரை நாயக்கனைக் காண்கிறோம்.

**உடையகுட்டி:**

மற்றொரு கல்வெட்டு மன்னன் பெயர், ஆட்சியாண்டு இல்லாமல் கொல்லம் 701 ஆம் ஆண்டில் வெட்டப்பட்டுள்ளது. கல்லிடைக் குறிச்சியில் இருந்த சில கோயில்களுக்குத் தானம் தந்த விபரம் இதில் உள்ளது. இது திருவிதாங்கூர் மன்னன் கல்வெட்டாகும்.

**உதைய மார்த்தாண்டன்:**

வேறொரு கல்வெட்டில் 707 ஆம் கொல்லமாண்டு குறிக்கப்படுகிறது. அதில் "வென்று மண் கொண்ட பூதல வீர உதைய மார்த்தாண்டன்" இடம் பெறுவதால் இக் கல்வெட்டு அவனுடையது எனலாம்.

**மூன்றாம்குடி:**

கி.பி 1532 இல் குலசேகரமுடையார் கோயில் பூசைக்கு நிலம் வழங்கப்பட்ட உத்தரவில் கையொப்பமிட்ட இராமனே இதிலும் உள்ளதால், உதைய மார்த்தாண்டன் கல்வெட்டு என்று நாம் உறுதியாகக் குறிப்பிடலாம். வென்று மண் கொண்ட வீர உதைய மார்த்தாண்டன் திருப்பாமூத்த வராயன் காலத்தில் குலசேகர முடையார், காலைச் சந்தி பூசையாகக் கட்டி நடக்கும் படி, நாள் ஒன்றுக்கு அமுதுபடி குறுணி சோறு வீதம் நிலம் மூன்று மாக்காணி முந்திரிகையின் முக்காலே மாகாணி வரி நீக்கி விடப் படுகிறது. மன்னன், கொல்லம் 707 ஆம் ஆண்டு வைகாசி மாத முதற் தேதி வெள்ளிக் கிழமை வடசேரியில் இருந்த போது, கோயில் பூசை நடத்தி வர, தான நிலமும் வரிவிலக்கும் அளித்துள்ளான். நாள் ஒன்றுக்குக் குறிணி சோறு நிவேதிக்கப் படுகிறது. இதிலும் மூன்றாங்குடி என்று கூறுவது குறிப்பிடத் தக்கது. முதற்குடி பிராமணராகவும் இரண்டாம் குடி அரசராகவும் மூன்றாம் குடி வணிகராகவும் நான்காம் குடி வேளாளராகவும் நாம் குறிப்பிடலாம். கைக்கோளர் வணிகருடைய மூன்றாம் குடியில் சேர்க்கப்பட்டுள்ளனர்,

**சுந்தரிநாச்சி:**

கி.பி. 1531 இல் கூடிய வென்று மண் கொண்ட பூதல வீர உதைய மார்த்தாண்டன் தானந்தை ஒருகல்வெட்டில் காண்கிறோம். முன் கல்வெட்டில் வந்த குறுணி சோறு இதிலும் வருகிறது. மூன்று மாக்காணி அரைக்காணி முந்திரிகையின் முக்காலே மாக்காணி நிலம் இதிலும் குறிக்கப் படுகிறது. கார் முதலுக்கு இந்நிலத்தில் முதலாகிற முதல் கொண்டு காலைச் சந்திபூசை நடத்தக் கடவதாக என்று பார்க்கிறோம். சுந்தரிநாச்சி அறுமனத்தானுக்குச் சந்திராதித்த வரை சந்ததி பிரவேசம் கொடுத்து போதும் படியும் வழங்கு கின்றார்.

**சின்னவசவப்ப நாயக்கர்:**

சின்னவசவப்ப நாயக்கர் அய்யன், தன்மமாகக் கொழுஞ் சேரி உடைய பிள்ளை பெருமாளும் இவர் தம்பி கரியனும் ஏதோ தானம் புரிந்துள்ளனர். கல்வெட்டு முழுமையில்லா ததால் செய்தி அறிய முடியவில்லை.

**மழவராயன்:**

கொல்லம் 610 இல் இராவணராம மார்த்தாண்டன் திருவடி, குலசேகரமுடையார். கோயிலில் விளக்கு இரண்டு வைக்க திருவிளக்குப் புறமாக நிலம் இரண்டு மாவினை விடுகிறான். அகத்திரி மழவராயன், நிலத்தினைப் பெற்றுக் கொண்டு பண்டாரத்திடம் எண்ணெய் வழங்க வேண்டும் என்று உத்தரவாகிறது. முட்டுவரில், தண்டமும் செலுத்த இவன் உடன்படுகிறான்.

**கேரள மன்னர்.**

மன்னர், விளக்கும் விளக்கெரிக்க எண்ணெய்க்காக நிலமும் அளித்துள்ளான். நிலத்தின் எல்லை விரிவாகக் கூறப்படுகிறது. குலசேகரமுடையார் கோயில் கல்வெட்டுகள் பலவும் கேரள மன்னர் கல்வெட்டுகளாகவே உள்ளன. பிற்காலப் பாண்டியர் வீழ்ச்சிக்குப் பிறகு அதாவது தென்காசிப் பாண்டியர் எழுச்சி பெறும் காலத்தில், கேரள மன்னர்

நெல்லையிலும் அம்பையிலும் ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளனர். ஞானபிரான், பெரிய பிரான், குலசேகர முடையார் போன்ற கோயில்களுக்கு இவர்கள் தானம் புரிந்துள்ளார்கள்.

**பாண்டியர் கலைப்பாணி:**

கட்டிடக்கலை, சிற்பக்கலை மட்டுமின்றித் தொன்மையான கல்வெட்டுகளையும் இக்கோயில் கொண்டுள்ளது. சோழர் காலத்தில் கருவறை கோஷ்டங்களிலும் அர்த்த மண்டப கோஷ்டங்களிலும் எழில் மிகு சிற்பங்கள் தாபிக்கப்படும். ஆயின், பாண்டியர் காலத்தில் இப்போக்கு அரிது எனலாம். மூலத் தெய்வங்களுக்கும் பரிவாரத் தெவங்களுக்கும் மட்டுமே சிலைகளைப் பாண்டியர்கள் செய்துவைப்பர். கோஷ்டங்களைப் பொதுவாக வெறுமனே விட்டுவிடுவர். ஒரு சில விதிவிலக் காகும். நெல்லை அருகே செங்காணியில் உள்ள சிவன் கோயிலின் கோஷ்டங்களில் உரிய தெய்வங்களைத் தாபித் துள்ளனர். குலசேகரமுடையார் கோயிலில் சில கோஷ்டங்களில் சிற்பங்கள் உள்ளன. சிலவற்றில் இல்லை என்பதை முன்னரே கண்டோம். இனி, இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளின் மூலங்களைக் காண்போம்.

குலசேகரமுடையார் கோயில் கருவறை முன் மண்டபத் தின் தென்புறச் சுவரில் கூடிய கல்வெட்டு.

1) அருளிச் செயல் நயினார் குலசேகரமுடைய நயினார் கோயிலில் மூன்றாங் குடியில் கை

2) க் கோளரில் உடைய குட்டிக்கு கல்லிடைக் குறிச்சியில் நயினார் குலை சேகரமுடைய நயி

3) னார் கோயிலுக்கும் நயினார் பெரிய பிரான் கோயிலுக்கும் நாலாயிர ஈச்சுவர

4) முடைய நயினார் கோயிலுக்கும் நயினார் கரிய மாணிக்க ஆழ்வார் கோயிலுக்கும் முன்னாள்

5) சீ பண்டாரக் கணக்காக நின்ற கலியுகத்து மெய்யனைத் தவித்து எழு நூற்று ஒன்றாமாண்டு பங்கு

6) னி மாதம் இரண்டாந் தியதி முதலுக்கு சீபண்டாரக் கணக்காக கற்பித்த கணக்குதான் காணியாட்

7) சிரைக் கணக்காக எழுதி சந்திராதித்தவர் சந்ததிப் பிரவேசமே கல்லிலும் செம்பிலும் வெட்டிய படியே ப

8) ழைய படியே கோயில் சோறும் உடைமையும் பற்றிக் கணக்கும் எழுதிக் கொண்டு போதும்படி எழு நூற்

9) று ஒன்றாமாண்டு பங்குனி மாதம் இரண்டாம்தியதி கற்பித்த அளவுக்கு தானும் இன்னாள் முதல் இத்தரகு பிடிபா

10) டாக இவ்வகைப் படியே காணி ஆட்சைக் கணக்காக எழுதிக் கொண்டு உடைமையும் பழையப

11) டியே பற்றிக் கொண்டு போதும் படியும் பாற்க இப்படிக்கு இராமன் எழுத்து.

அரசன் பெயர் இல்லாத கொல்லம் 701 ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு இதுவாகும். கல்லிடைக்குறிச்சியில் இருந்த குலசேகரமுடைய நயினார் கோயில், நயினார் பெரியபிரான் கோயில், நாலாயிர ஈஸ்வரமுடைய நயினார் கோயில், நயினார் கரிய மாணிக்க ஆழ்வார் கோயில் என்ற நான்கு கோயில்களுக்கும் சீபண்டாரக் கணக்காக இருந்தவர் கலியுகத்து மெய்யன். இவரை நீக்கிவிட்டு இவருக்குப் பதிலாகக் கொல்லம் 701 பங்குனி மாதம் இரண்டாந் தேதியன்று (கி.பி. 1526-27) கைக்கோள மரபினைச் சேர்ந்த உடைய குட்டியை நியமிக்கின்றனர். உத்தரவில் இராமன் கையெழுத்திட்டுள்ளான். ஆணை கல்வெட்டாகவும் செப்பேடாகவும் வெட்டுவிக்கப்படுகிறது. இங்குக் குறிக்கப்படும் நான்கு கோயில்களில் குலசேரமுடையார் கோயில் மட்டுமே இன்றும் அதே பெயரில் பூசை நடைபெறும் கோயிலாக உள்ளது. பெரியபிரான் கோயில் இன்று கொசக்குடி பெருமாள் கோயில் என வழங்கப்படுகிறது. கோயில் சிதலமடைந்து வழிபாடின்றி உள்ளது. நாலாயிர ஈச்சுரமுடையாரி கோயில் இன்று வழிபாடின்றிச் சிதைந்துள்ள நாகேச்சுரமுடையார் கோயிலை

யொட்டி இருந்திருக்க வேண்டும். கரிய மாணிக்க ஆழ்வார் கோயில் அழிந்துவிட்ட கிரிகிருஷ்ணர் (கல்வெட்டில் நாலாயிர விண்ணகர் பெருமான் என்று வரும் கோயில்) கோயிலில் இருந்திருக்கலாம். கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் மேலே கண்ட நான்கு கோயில் களுக்கும் சேர்ந்து ஒரே சிபண்டாரக் கணக்கு இருந்துள்ளார்

குலசேகரமுடையார் கோயில் கருவறை முன்மண்ட பத்தின் தென்புறச்சுவரில் கூடிய கல்வெட்டு.

1) அருளிச் செயல் கல்லிடைக் குறிச்சியில் நயினார் குலசேகர முடையநயினார் கோயிலில் தேவகன்மிக்

2) கு சேதுங்கநாட்டு சங்கர நாராயண வென்ற மண் கொண்ட பூதல வீரனில் வீர உதைய மார்த்தாண்ட வன்மர் திருப்பாபூ

3) மூத்தவராயன் முள்ளிநாட்டுப் பிரம்ம தேசம் இராசராச சதுர்வேதி மங்கலம் தென்கரை கல்லிடைக்

4) குறிச்சியில் நித...தலம் பூசைகொண்டு எழுந்தருளி இருந்தருளும் நயினார் குலசேரமுடையார் பூசைக்கு கால சந்திப்பூ

5) சையாக கட்டி நடக்கும்படியாக கற்பித்த நாளொன்றுக்கு அமுதுபடி குருணிக்கு இ...பூசைக்கு......று பூரத்து நாள்

6) பாக்கமான...கோட்டை....கொண்டு நில...பத்து இரண்டும்

7) ...காணி நெல்லு எழு நா...மும்...நாள் அஞ்சுக்குக் கோட்டை அரையே முக்காணிக்கு நெல்லு அஞ்ஞாழி...

8) ...ன்றுக்கு...கோட்டை நா...மூன்றே எட்டுமா முக்காணிக்கு கோட்டை...பத்து மூன்ரைக்கு எழு நூற்று ஏழாமாண்

9) டு கார்முதலுக்கு தேவதான யிறையிலியிட்டுக் குடுத்த மேற்படி னாட்டு தெ...ப் பற்றில் முதமடை செய்கு முதற் கண்ணாறு மு

10) தற்செய் நிலம் முந்திரி கையி......

11) ...தரம்நாலாஞ் செய் நிலம் காணி அரைக்காணி முந்திரி கையி... இரண்டாம் செய் நில

12) ங்காணி முந்திரிகை நாலாந்தரம் நாலாங் கண்ணாறு முதற் செய் நிலங்காணி மூன்றாந்தரம் மேல் கரம்பை தெற்கு முதற் கண்ணாறு இரண்

13) டாஞ் செய் நிலங் காணி நாலாந்தரம் இரண்டாங் கண்ணாறு ஆறாஞ் செய் நிலம் அரைக்காணி முந்திரிகை யிச்சை மூன்றாந்தரம் மூன்றாங் கண்ணாறு

14) இரண்டாம் செய் நிலம் முந்திரிகை நாலாந்தரம் நாலாங் கண்ணாறு இரண்டாம் செய்நிலம் காணி முந்திரிகை நாலாந்தரம் மூன்றாம் செய் நிலம்

15) காணியின் முக்காலே மாகாணி நாலாந்தரம் வடக்கு அஞ்சாங் கண்ணாறு இரண்டாம் செய்நிலம் காணி அரை காணி முந்திரிகை இரண்டாம்

16) தரம் கீழ் கரம்பை வடக்கு ஆறாங் கண்ணாறு நாலாஞ் செய் நிலம் காணி முந்திரிகை மூன்றாந் தரம் ஆக நிலம் மூன்று மாக்காணி அரைக்காணி முந்திரி

17) கையின் முக்காலே மாகாணி இன்னிலம் மூன்று மாகாணி அரைக்காணி முந்திரிகையின் முக்காலே மாகாணியும் எழு நூற்று ஏழாமாண்டு கார்

18) முதலுக்குத் தேவதானமாகக் கையாண்டு கொண்டு மேல் வாரம் உபாதி விநியோகம் முட்பட்ட வகையும் மற்றும் னாம் கோழ்பூ முறைபாடு

19) எப்பேறற்பட்டதும் ஆசந்திரதாரயாக செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கையாண்டு கொண்டு நாங்கற்பித்த பூசையும் நடத்தி

20) இந்தச் சோறு குறுணியும் மேற்படி கோயில் மூன்றாங் குடியில் நம்முடை... த்தானும் அறுமனத்தானுக்கு நாளொன்றுக்கு சோ

21) று குறுணியும் ஆசந்திர தாரவர் சந்ததி பிரவேசமே குடுத்துப் போதுபடி கொல்லம் எழுநூற்றேழா மாண்டு வைகாசி மாத முதற் தேதி

22) பூறுவ பக்கிழத்து துவாதசியும் வெள்ளி ஆட்சையும் பெற்ற அத்தத்தாதி நாள் நாம் வடசேரியில் வீடாயிருக்க கற்பித்த அளவுக்கு தாங்

23) களும் இன்னாள் முதல் இத்தரகு பிடிபாடாக இவ்வகைப் படியே நாங் கற்பித்த பூசெயும் நடத்தி சோறு குடுத்துப் போதும் படியும் பார்க்க இப்படிக்கு இராமன் இராமன்.

செயதுங்க நாட்டு சங்கர நாராயண வென்று மண் கொண்ட பூதலவீரன் வீர உதைய மார்த்தாண்டவர்மன் திருப்பா மூத்தவராயன் கொல்லம் 707 இல் (கி.பி. 1532 இல்) வடசேரியில் முகாமிட்டிருந்த போது பிறப்பித்த ஆணையே இக்கல்வெட்டாகும். குலசேகரமுடைய நாயனார் காலைச் சந்தி பூசைக்கும் திருவமுதுதுக்குமாக தேவதான இறையிலி யாகப் பல்வேறு இடங்களில் பலவகை கொண்ட நிலங்கள் வழங்குகிறார். மேல்வாரம், உபாதி, விநியோகம் உட்பட்ட வகையும் மற்றும் எப்பேர்பட்டதும் இறையிலியாகச் சந்திரா திக்தவரை அனுபவிக்க உத்தரவிடுகிறார். ஆணை கல்லிலும் செம்பிலும் வெட்டப்படுகிறது.

குலசேகரமுடையார் கோயில் கருவறை முன் மண்டபத்தில் உள்ள கல்வெட்டு 322/1916

1) சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ ஜகபீத ...ஸித்தி ஸங்ஹார காரணம் முள்ளி நாட்டு

2) மதுக்குறிச்சி நயினார் குலசே கரீஸ்பர ஸாஸ்நம் சாஸ் வதம் பிரம்ம ஆதி சண்டேஸ்வர

3) ர் ஜெயம் சகாப்தம் வக்ஷிம வநயம் 1453 மேல் செல்லா நின்ற கொல்லம் 706

4) ஞ்ஙு வைகாசி மாதம் முதற்யதி சூரிய பக்ஷத்து துவாத சமியும் வெள்ளியாட் சையும்

5) பெற்ற நாள் நம் கோயிலில்...அத்தத்து...சுந்தரிநாச்சி

6) ...செயதுங்கனாட்டு சங்கர நாராயண வென்று மண்கொண்டர

7) ாண்ட வன்மர். திருப்பாப்பூர் மூத்தரவராய வன்மர் தானத்தோ...க்கு குடுத்த சண்டே

8) ஸ்வர பிரமாணமாவது நம்குமாரர்விட்டு தந்த முள்ளி நாட்டு தென்கரை உள்ளிட்ட பற்றில் பலதரத்திலு

9) ம் இவள் நமக்கு விடுவித்து விட்டு தந்த நிலம் மூன்று மாக் காணியரை முந்திரிகையின் முக்கா

10) லே மாக்கணியும் எழு நூ ற்று ஏழாமாண்டு கார் முதலு க்கு இன் நிலத்தில் முதலாகிற முதல் கொண்டு கா

11) ல சந்தியில் கட்டி வைக்கும்படி கற்பித்த அமுது படி குறுணியும்...த்து நிவேத்ய... 27ம் நாள் ஒன்

12) றுக்கு சோறு குறுணியும் நம் கோயி–தளவு முறைக்கும் சுந்தரி நாச்சி அறுமனத்தானுக்கு ஆசந்திரா

13) தித்தவல் ஈந்ததி பிரவேசமே குடுத்து போதும் படியும் இந்த அமுது குறுணியும் அனாசவ இரண்டுக்கு நாள் ஒன்றுக்கு

14) நெல்லு பதக்கு நாநாழியும் இன்னிலத்தில் வந்த நெல் ...கொண்டு அமுதுபடியும் குறுணியும் அளந்து போ

15) த படியும் கற்பித்து ஆசந்திர தாலது அந்ததி வரலேனம் ஆக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கையாண்டு கொள்ளும்படி கற்பித்

16) து தாநமி விநிமயம் விச்சைசயங்களுக்கு யோக்கியமாக கற்பித்தமைக்கு ஆதி சண்டேஸ்வர தெய...

17) மசமஸம்.

இக்கல்வெட்டில் கொல்லம் ஆண்டுடன் சக ஆண்டும் குறிக்கப் பட்டுள்ளது. இரண்டும் பொருந்தி வருகின்றன. கி.பி. 1531 ஆம் ஆண்டில் செயதுங்க நாட்டு சங்கர நாராயண வென்று மண் கொண்டாரான வன்மர் திருப்பாப்பூர் மூத்தவராய வன்மர் ஆணைப்படி கல்வெட்டு வெட்டுவிக்கப்படுகிறது. குலசேகரமுடைய நாயனார்க்குப் பட்டத்தரசி சுந்தரி நாச்சி என்பவர் தானம் அளித்துள்ளார். சென்ற கல்வெட்டில் இடம் பெறும் நிலத்தின் அளவே இதில் உள்ளது. குறுணிசோறு (திருவமுது) வழங்க நாள் ஒன்றுக்கு பதக்கு நானாழி நெல் அளிக்கப்பட வேண்டும் என ஏற்பாடு செய்யப்படுகிறது. திருப்பாப்பூர் மன்னனுடன் பட்டத்தரசி தானமும் குமாரர் விட்டுத் தந்த நிலமும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன:

323/1916

ஸ்ரீமது சின்ன வசவப்ப நாயக்கர்
அய்யன் தன்மமாக கொழுஞ்சே
ரி உடைய பிள்ளை பெருமாளு
ம் இவர் தம்பி இருவர் கரியானும்.

இக்கல்வெட்டு முழுமையின்றியுள்ளது. வசவப்ப நாயக்கர் தன்மம் காண்கிறோம்.

குலசேகரமுடையார் கோயிலில் உள்ள அம்மன் சன்னிதி முன்புற நுழைவாயிலில் கூடிய கல்வெட்டு 324/1916

1) ஸ்வஸ்திஸ்ரீ கொல்லம் 610 வது ஞ பங்குனி மீ 26 தேதி இராசராச சதுர்வேதி மங்கலத்து தென் பிடாகை மதுக் குறிச்சியில் நாயினார் குலசேகரமுடைய நாய

2) னார் குமாரந் பரத ராவண ராமன் மாத்தாண்ட திருவடி இருந்தருளி இடத்தின் திருவாசலில் அரிசி பிடி சேறமும் இரண்டு பத்திர வழி நாயக்க மாருமாக திருநந்தா விளக்கு நடத்துபடி கற்

3) பித்து வாத்துக் குடுத்த இரண்டு நிலை விளக்கு இரண்டுக்கும் நாள் ஒன்றுக்கு எண்ணை உரி ஆக இதுக்கு தாம் கொண்டு நடத்தி போக திருமுகத்தின் படி விட்ட நிலமாவது இராசர

4) ாச சதுர்பேதி மங்கலத்து தென்கரை உள்ளிட்ட பற்றில் திருவிளக்கு பிறமாக விட்ட நிலமாவது கீழ் கரம்பை பற்றில் சேநநாதனுக்கு கிழக்குங் குமரங்காலுக்கு வடக்கு ப

5) ன்னிரண்டாங் கண்ணாற்று பத்தாஞ் செய் தடி நாலு நிலம் ஒரு மாவும் பதிமூன்றாங் கண்ணாற்று பத்தாஞ் செய் தடி மூன்றினால் நிலம் ஒரு மாவும் ஆக நிலம் இ

6) ரண்டு மாவும் சந்திராதித்தவரை நடத்திப் போக கற்பித்தபடி மதுக் குறிச்சியில் இருக்கும் வாணியன் தேவர் பிழை பொறுத்தா

7) ன் அகத்தரி மழவராயனை இரண்டு மாவும் கொண்டு நாள் ஒன்றுக்கு உரி என்னை முட்டாமல் கோபுர வாசலில் நயி

8) னார் சீ பண்டார நாழி கொண்டு குடுப்பேன். இப்படி ஒரு தன் முட்டுவரில் இரட்டிபடி ஆச்சி முட்டு வருகில் கோயிலில் நாநமு

9) ம் மாஹேஸ்வரரும் னயினாற்கு தண்டம் தீந்து கொள்ளுவர் இப்படி கற்பித்தபடிக்கு இம்மரிசாதி சந்தி

10) தி பிரவேசமே நடத்திப் போகும்படி கற்பித்த தந்மம் பதினெட்டு நாட்டு சநமும் மந்றும்யிவர்...

11) வாரும் இந்த தன்மம் இரக்ஷித்து கொள்ளுவாராகவும் நாட்டு அரிகேசரி நல்லூரில் நாநாம்,

முழுமையில்லை

கி.பி· 1435 (கொல்லம் 610 இல்) குலசேகரமுடைய நாயனாருக்குக் குமாரன் பரத ராவண ராமன் மார்த்தாண்ட

திருவடி காலத்தில், விளக்கு இரண்டு வைக்க தென்கரை உள்ளிட்ட பற்றில் நிலம் விடப்படுகிறது. நிலத்தின் அளவு இரண்டு மா ஆகும். கல்லிடைக் குறிச்சி, இக்கல்வெட்டில் மதுக்குறிச்சி என வழங்கப்படுகிறது. பிழை பொறுத்தான் அகத்தரி மழவராயன் தினமும் குலசேகரமுடையார் கோயில் ஸ்ரீபண்டாரத்திடம் உரி எண்ணெய் வழங்க வேண்டும். மழவராயன் வாணியன் ஆவான். தானத்தை நிறைவேற்றும் பொறுப்பில் அரிகேசரி நல்லூர் ஊரவர் ஈடுபட்டுள்ளனர். அரிகேசரி நல்லூர் கல்லிடைக் குறிச்சிக்குத் தெற்கில் வீரவ நல்லூர் அருகே உள்ள தொன்மையான ஊராகும். கல்வெட்டில் பதினெட்டு நாட்டு சனமும் மற்றும் உள்ளவர்களும் குறிக்கப் பட்டுள்ளனர்.

# கொசக்குடிப் பெருமாள் கோயில்

**பாண்டியர்கோயில்**

கொசக்குடிப் பெருமாள் கோயில், கல்லிடைக்குறிச்சி இரயில்வே தண்டவாளத்தின் தென்புறம் உள்ளது. கோயில் சிதைந்திருந்தாலும் கம்பீரமாகக் காட்சி அளிக்கிறது. பாண்டியர் காலக் கட்டிடக் கலைக்கு இந்த ஒரு கோயிலே போதும். இக்கோயிலையொட்டிக் குயவர்கள் வாழ்வதால் கொசக்குடிப் பெருமாள் கோயில் என மக்கள் தற்போது வழங்குகின்றனர்.

**குலசேகரப் பாண்டியன்**

இக்கோயிலில் மூன்று கல்வெட்டுகள் உள்ளன. அவைகளை மத்திய அரசு கல்வெட்டுத்துறை படியெடுத்துப் பதிப்பித்துள்ளது. மூன்று கல்வெட்டுகளில் தொன்மையானது முதலாம் குலசேகரப் பாண்டினுடையதாகும். இம்மன்னன் கி.பி. 1190 முதல் 1218 வரை சீரோடும் சிறப்போடும் பாண்டிய நாட்டை ஆண்டவன். இவனுடைய கல்வெட்டுகள் கல்லிடைக் குறிச்சி தவிர தென்பாண்டி நாடெங்கும் உள்ள கோயில்களில் உள்ளன.

**மூன்றுகோயில்கள்:**

கொசக்குடி பெருமாள் கோயிலின் கருவறைத் தென்புறச் சுவரில் முதல் கல்வெட்டு உள்ளது. 3 வரிகள் மட்டுமே சிதைவிலிருந்து தப்பியுள்ளன. அருளிச் செயல் நயினார் குலசேகரமுடைய நாயனார் கோயில் நயினார் பெரிய பிரான் கோவில், நயினார் நாலாயிர ஈச்சுரமுடைய கோயிலுக்கும் என மூன்று கோயில்களின் பெயர்களை இக்கல்வெட்டில் காண்கிறோம்.

**கைக் கோளர்:**

குலசேகரமுடையார் கோயிலும் நாலாயிர ஈச்சுர முடையார் கோயிலும் இவ்வூரில் வேறு இடங்களில் உள்ள கோயில்கள் ஆகும். ஆகவே பெரிய பிரான் கோயிலே

கொசக்குடிப் பெருமாள் கோயில் எனலாம். கல்வெட்டில் கைக்கோளர்...குட்டிக்கு என்று வருகிறது. வேறு செய்தி அறிய இயலவில்லை. இங்கு மட்டுமின்றி வேறு கோயில் களிலும் கைக்கோளர் இடம் பெற்றுள்ளனர்.

கட்டிட அமைப்பு' கொசக்குடிப் பெருமாள் கோயில்; சிதைந்த நிலையில் சுற்றிலும் முள் மண்டி உள்ளது. இக் கோயில் கருவறை, அர்த்த மண்டபம், அந்தராளம், மகா மண்டபம், முன்மண்டபம், அம்மன் சன்னதி ஆகியவற்றைக் கொண்டுள்ளது. யாவும் ஒரே காலத் திருப்பணி எனலாம். கருவறை அதிட்டானமானது உபபீடம் ஜகதி, கண்டம், முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டி, கம்பு, ஆகியவற்றைக் கொண்டுள்ளது. கால் எனப்படும் சுவரில் அரைத்தூண்கள் உள்ளன. தூண்களின் நடுவில் முத்துச் சரங்கள் காட்டப் பட்டுள்ளன. கருவறை கோஷ்டங்களில் கோஷ்ட தெய்வங்கள் இல்லை. அரைத்தூண்கள் சிறு கோயில்கள் போல் அமைந் துள்ளன. கொடுங்கை வரை கருங்கல் திருப்பணி. இங்குள்ள கருங்கல் சிவந்த நிறமாக உள்ளது. விமான கோஷ்டங்களில் உருவங்கள் உள்ளன. கிரீவப் பகுதியின் வடக்கில் நான்முகன் அமர்ந்துள்ளான். விமானத்தில் சாலை, கூடு என்ற அமைப்புகள் அமைந்து சிறு கோயில்கள் போல் உள்ளன. கிரீவத்தின் மேற்கில் அமர்ந்தபடி உள்ளார் திருமால். இவருக்கு மேல் விமானத்தில் யோக நரசிம்மர் உத்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ளார். கிரீவத்தின் தென்புறம் தட்சிணாமூர்த்தி வீற்றிருக்கிறார். சிகரத்தில் தற்போது சிலை இல்லை. அம்மன் சன்னிதிக்குப் பின்புறமுள்ள இடத்தில் உடைந்த கற்சிலை ஒன்றுள்ளது. வடகிழக்கில் கிணறு உள்ளது. வெளியில் கருங்கல் மற்றும் செங்கல்லில் கூடிய வெளிமதில் உள்ளது.

**மண்டபங்கள்**

மகாமண்டபத்திற்குக் கிழக்கில் உள்ள முன் மண்டபம் எழிலுடன் காட்சியளிக்கிறது. நீள்செவ்வகவடிவில் இது உள்ளது. சன்னிதி நிருத்த மண்டபம் என்று இதைக் குறிப் பிடலாம். உருளையான தூண்கள் இரு வரிசைகளில் தலா நான்கு வீதம் நிறுத்தப்பட்டுள்ளன. போதிகை யுடன் உள்ள

இம்மண்டபத்தின் கிழக்கில் வீரபாண்டிய தேவனுடைய கல்வெட்டு உள்ளது. எனவே முழு கோயிலும் பாண்டியருடையது எனலாம். இம்மண்டபத்தின் தென்புறமும் வலப்புறமும் மேல் ஏற படிக்கட்டுகள் உள்ளன. வெளியில் சிறிய மண்டபம் (கருட மண்டபம்?) இடிந்த நிலையில் உள்ளது. பலிபீடமும் உள்ளது ஆயின் கொடிமரம் இருந்த தடயம் கூட இல்லை. கோயிலில் உள்ள மண்டபத்தின் சுவர் எனப்படும் கால் பகுதியில் அரைத்தூண்கள் உள்ளன. கவிழ்ந்த தாமரை, முத்துச்சரம், கலசம் ஆகிய உறுப்புகளைத் தூண்கள் பெற்றுள்ளன. இம்மண்டபத்தின் வடக்கில் தெற்குப் பார்த்த படி அம்மன் சன்னிதி உள்ளது. சிலை ஏதும் இல்லை. அவ்வாறே சுவாமி கருவறையிலும் சிலை ஏதுமில்லை. சுவாமி கருவறை அதிட்டானம், அம்மன் கருவறை அதிட்டானம் வெவ்வேறுவகையாக உள்ளன.

**கல்சன்னல்:**

சன்னிதி நிருத்த மண்டபத்திற்கு உட்புறமுள்ள மகா மண்டபம் வரிசைக்கு நான்கு தூண்கள் வீதம் இரு வரிசைகளில் எட்டுத் தூண்களைக் கொண்டுள்ளது. மண்டபத்தின் உயரம் குறைவாகும். மண்டபத்தின் தென்புறம் பலகணி (கல் சன்னல்) உள்ளது. மேற்கிலும் வடக்குப் புறத்திலும் கல் சன்னல்கள் கோயிலில் உள்ளன. அந்தராளம் மிக நீளமாக உள்ளது. அர்த்த மண்டபம் மிகச் சிறியதாக அமைந்துள்ளது. சுவாமி சன்னிதியிலும் அம்மன் சன்னிதியிலும் உள்ள கோமுகைகள் அழகாக உள்ளன. அம்மன் கருவறை கோமுகைக்கு மேல் கோஷ்டமுண்டு. ஆயின் சிற்பம் இல்லை.

**தூண் அமைப்பு**

வெளியில் நுழைவாயிலை ஒட்டி இரு திசைகளிலும் உள்ளும் புறமும் திண்ணைகளுடன் மொட்டைக் கோபுரம் அமைந்துள்ளது. இங்குள்ள தூண்கள் கீழே சதுரமும் மேலே வட்டமும் கொண்டுள்ளன. தூண்களின் உச்சியில் அழகிய போதிகையும் மேலே உத்தரமும் தூண்களின் இடைப் பகுதிகளில் முத்துச்சரமும், பூ போன்ற அமைப்புகளும் உள்ளன.

வெளியில் ஆடவர் உருவம் ஒன்றுள்ளது. இவ்வுருவத்திற்குக் கொண்டை பின்புறம் உள்ளது. வணங்கும் நிலையில் கூடிய இவ்வுருவம் கோயில் கட்டியவர் உருவமாக இருக்கக் கூடும். இக்கோயிலைக் குலசேகர பாண்டியர் எழுப்பியிருக்க வேண்டும். கி.பி.12 ஆம் நூற்றாண்டு எனலாம்.

**பிராமணதானம்:**

வீரபாண்டியனுடைய இருபத்தெட்டாவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று இக்கோயில் மண்டபத்தின் கிழக்குப்புறச் சுவரில் உள்ளது. இருபது வரிகளைக் கொண்ட இக்கல்வெட்டு, கோயிலுக்கு வழங்கிய தானத்தைக் குறிப்பிடவில்லை. பிராமணர்களுக்கு வழங்கிய தானத்தையும் தானம் செய்யப்பட்ட நிலங்கள் எப்படி வரி விலக்கு பெற்றன என்பதையும் குறிப்பிடுகின்றது.

**ஏகதண்டி திரிதண்டி:**

வீரபாண்டியனுடைய இருபத்தெட்டாவது ஆட்சியாண்டு நாள் 82 இல் மன்னன் பிரசாதம் செய்தருளின திருமுகப்படி கல்வெட்டு வெட்டுவிக்கப்படுகிறது. முள்ளி நாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுர்வேதி மங்கலத்து, ஸபையார்க்கு 'தண் பொருந்த பேராற்றில்' (தண்பொருனை பேராறு என்க) சித்தக்கரை அளநாட்டு புதாவூர் திருநீலகண்டன் இராசாக்கள் நாயனாரான தொண்டைமானார் கற்பித்த ஊட்டில் (விட்டில்) பிராமணர் போஜனத்துக்கும் ஏகதண்டி சந்யாசிகளுக்கும் திரிதண்டி சந்யாசிகளுக்கும் ஸ்ரீகைஷக்கும் இவர்களுக்கு போஜனமும் ஸ்ரீகைஷயும் சமைக்கும் பேர்க்குமாக 10 மாநிலம் தானமாக வழங்கப்படுகின்றது. நிலம் வெவ்வேறிடங்களில் இருந்ததைக் கல்வெட்டு விரிவாகக் குறிப்பிடுகிறது.

**நிலங்கள்**

மதிற்குறிச்சிப் பற்றில் தென்னாற்றுக்கு மேற்கும் சிநாதனுக்கு வடக்கும் முதல் கண்ணாற்று மூன்றாம் செய்யில் வடக்கடைய நிலம் அரைமா, நாலாம் செய் நிலம் ஒருமா, ஐஞ்சாம் செய் நிலம் ஒரு மாவும், ஆறாம் செய் நிலம் ஒரு மாவும், இரண்டாம் கண்ணாற்று இரண்டாம் செய் நிலம் ஒரு

மாவும், மூன்றாம் செய் நிலம் ஒரு மாவும், நாலாம் செய் நிலம் ஒரு மாவும், ஐஞ்சாம் செய் நிலம் ஒரு மாவும், இவ்வதி கிழக்கு வடக்கு முதல் கண்ணாற்று மூன்றாம் செய்யில் வடக் கடைய நிலம் அரை மாவும், நாலாம் செய் நிலம் இருமாவும், ஐஞ்சாம் செய் நிலம் ஒருமாவும் விடப்படுகிறது. கார் பசானம், சிறுகொடை, வான்பயிர் புன்பயிர் உட்பட மற்றும் எப்பேர்பட்ட பயிர்களும் செய்து கொள்ளலாம். நிலம் இறையிலியாக விடப்படுகிறது. நிலத்தில் வரும் கடமை, அந்தராயம், பொன்வரி, விநியோகம், புறவிடல் மற்றும் எப்பேர்பட்ட உபாதிகளும் ஸபா விநியோகம் விட்டு, தேவை, ஆனைச்சாலை, குதிரைப்பந்தி உள்ளிட்ட பல தேவைகளும் வாசல்பேறு, இலாஞ்சினைப் பேறு, ஓலை எழுத்து, விநியோகம் உட்பட தறியிறை, செக்கிறை, தட்டொலி, தட்டார் பாட்டம், ஏரிவரி, இனவரி, மீன்வரி. குளத்நேவை, கால் தேவை மற்றும் எப்பேர்பட்ட இறைத்தேவைகளும் பொன் முதலடங்க இறையிலியாக வழங்கப்படுகிறது. வரியிலார் கணக்கிலும் இவை கழிக்கச் சொல்லப்படுகிறது. இறைக் கணக்கிலும் கழிக்க ஆணையாகிறது.

**பெண்ணாகடமுடையான்**

மன்னனின இவ்வாணை கல்லிலும் செம்பிலும் வெட்டவும் அனுமதி வழங்கப்படுகிறது. பெண்ணாகடமுடையான் ஒப்பமிட்டுள்ளான். மன்னன் 28 ஆவது ஆட்சியாண்டு நாள் 82 பிரசாதம் செய்தருளித்து என மன்னன் உத்தரவைக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

**சிற்பாசிரியன்:**

சபை பெருமக்கள் பணிக்க, சிற்பாசிரியன் காளி திருவனாயின காலிங்கராயன் என்பவன் கல்லில் வெட்டு வித்தான்.

**வரியிலார்:**

முதல் செய் இரண்டாம் செய் என்ற சேர்ககள் முதல் மடை நிலம் இரண்டாம் மடை நிலம் எனலாம். தானம் தந்த பத்து மா நிலத்தில் எப்படிப்பட்ட பயிரும் செய்து கொள்ள

உரிமை வழங்கப்படுகிறது. பல்வேறு வகையான வரிகள் கல்வெட்டில் குறிக்கப்பட்டு அவையெல்லாம் தள்ளுபடி செய்யப்படுகின்றன. வரியிலார் கணக்கு இறைக்கணக்கு இரண்டும் அரசுத்துறைகள் எனலாம். வரி வசூல் செய்தல், வரி விலக்களித்த நிலங்களைக் கண்டறிதல், மன்னன் உத்தர வினை நிறைவேற்றுதல் ஆகிய பணிகளை இவை செய்துள்ளன.

**நமச்சிவாயநயினார்:**

மூன்றாவதாக உள்ள கல்வெட்டு கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் உள்ளது. சக ஆண்டு 1359 இல் வெட்டப் பட்ட கல்வெட்டாகும். இது வீரகேரளன் என்ற மன்னனின் கல்வெட்டாகும். முள்ளிநாட்டு மதில் குறிச்சியில் நயினார் பெரிய பிரான் கோயிலில் நமச்சிவாய நயினாரும் மற்றவரும் நிபந்தம் வேண்ட, வீரகேரளன் தானம் வழங்குகிறான். வீரகேரளன் சந்தி எனவும் அத்தானம் பெயர் பெற்றது. தினம் அமுதுபடிக்கு 5 நாழி நெல்லும், கறியமுது, எரி கரும்பு, உட்பட்டவைகளுக்கு நாழி நெல்லும் உவச்சன், எம்பெருமான் அடியார் முதற்குடி மணவாள நாச்சியார் ஆகியோருக்கு அமுதுபடிக்காகத் திருவிடையாட்டமாக நிலம் விடப்படுகிறது. நிலம் 2 மா பெற்றுக் கொண்டு பூசை முதலியன நடத்திவர வேண்டும்.

**திருநெல்வேலி:**

கீழ் வேம்பு நாட்டுத் திருநெல்வேலியில் புதிய இடத்து வீடாக இருக்க மன்னன் முடிவெடுத்துள்ளான். அங்கிருந்து இவ்வாணையை வெளியிட்டுள்ளான். ஆணையில் சுத்த விக்கிரமன் ஒப்பமிட்டுள்ளான். பகழிக் கூத்தர் கோயிலில் வரும் வீர கேரளனுடைய கல்வெட்டிலும் இவ்விக்கிரமன் இடம் பெற்றுள்ளான். கேரள அரசர்களுக்குப் பல்வேறு தலை நகரங்கள் இருந்துள்ளன. திருநெல்வேலியும் கி.பி.1437–38 இல் தலைநகராக இருந்துள்ளது என்பதைக் கல்வெட்டின் மூலம் அறிகிறோம்.

**வைஷ்ணவதுறவி:**

ஏகதண்டி, திரிதண்டி, வைஷ்ணவ சன்னியாசிகளின் பிரிவு போலும். ஏகாங்கிமடம், திருவரங்கத்தில் சகம் 1559 இல் இருந்துள்ளது. ஏகாதாசருத்ர பிக்ஷா என்பவர் சைவ துறவியர் ஆவர். சோழபாண்டிய காஞ்சியில் இருந்துள்ளார். சகம் 1305 இல் கூடிய புவனேஸ்வர கல்வெட்டு, ஏகாதாசருத்ர பிக்ஷா வினரைக் குறிப்பிடுகிறது. ஆயின் கொசக்குடி கல்வெட்டில் இடம் பெறும் ஏகதண்டி, திரிதண்டி வைஷ்ணவ துறவிகளையே குறிக்கும். வீரபாண்டியனுடைய கல்வெட்டில் இத்துறவிகள் இடம் பெற்றுள்ளனர். காலம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டு ஆகும். இவ்வைணவர்கள் தங்குவதற்குரிய வீடு திருநீலகண்டன் இராசாக்கள் நாயனாரான தொண்டைமானார் கற்பித்ததாகும். இவன் அதிகாரி எனலாம்.

**பாண்டிய மன்னர்:**

கொசக்குடிப் பெருமாள் கோயில் கருவறை தென்புறச் சுவரில் குலசேகரப் பாண்டியன் கல்வெட்டும் கோயில் முன்மண்டபம் கிழக்குச் சுவரில் வீரபாண்டியன் கல்வெட்டும் உள்ளன என்பதை முன்பே கண்டோம். முதல் கல்வெட்டு ஆட்சியாண்டு இல்லை. இரண்டாம் கல்வெட்டில் உள்ளது. இங்குக் குறிக்கப்படும் இரு அரசர் பெயர்களில் பலர் உள்ளனர். கல்வெட்டறிஞர் குடந்தை சேதுராமன், பாண்டிய மன்னர் பலரை இனங் கண்டுள்ளார். அவருடைய பாண்டிய வரலாற்றிலும் இங்குக் குறிக்கப்படும் அரசர்கள் குறிப்பிடப் படவில்லை. எனினும் மூன்றாவதாக உள்ள வீர கேரளன் கல்வெட்டு மேற்கூறிய இருவர் காலத்தைக் கணிக்கச் சற்று உதவுகிறது. கொசக்குடிப் பெருமாள் கோயிலில் குலசேகர முடையார் கோயில் பெயரும் இடம் பெறுகிறது. எனவே கி.பி. 1190 முதல் 1218 வரை ஆண்ட சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டாக இது இருக்க வழியுண்டு. குலசேகரன் பெயரில் கூடிய கோயில், கல்லிடைக்குறிச்சியில் உள்ளது. மன்னார் கோவிலில் ஒரு விஷ்ணு கோயில் உள்ளது. எனவே கொசக்குடி பெருமாள் கோயில் இவன் காலத்தில் கட்டப் பட்டது என்று கூறினால் தவறில்லை. வீரபாண்டியனுடைய

இருபத்தெட்டாவது ஆட்சியாண்டு கல்வெட்டு கி.பி. 1170 முதல் 1195 வரை ஆண்ட சடையவர்மன் வீரபாண்டியன் கல்வெட்டாக இருக்க வழியில்லை. காரணம் கல்வெட்டு 28 ஆவது ஆட்சியாண்டு என்றுள்ளது. இரண்டாம் வீரபாண்டியன் கல்வெட்டாகவும் இருக்க வழியில்லை. காரணம் 1254 முதல் 1265 வரையே இவன் ஆண்டுள்ளான்.

**குலசேகரன்:**

கி.பி. 1253 முதல் 1283 வரை நாட்டையாண்ட ஒரு வீரபாண்டியன் பாண்டியர் வரலாற்றில் வருகிறான். இவன் கல்வெட்டாக இருபத்தெட்டாம் ஆட்சியாண்டு கல்வெட்டைக் குறிப்பிட வழியுண்டு. மேலும் 1297 முதல் 1342 வரை பாண்டிய நாட்டை ஆண்ட வீரபாண்டியன் ஒருவன் உள்ளான். இவன் வெற்றியும் தோல்வியும் ஒரு சேர கண்டவன். திருநெல்வேலி உடையார் எனவும் வழங்கப்படுபவன். இவனுடைய கல்வெட்டாகவும் கருத வாய்ப்புண்டு. ஆக 1253 முதல் 1283 வரை ஆண்ட வீரபாண்டியனையோ 1297 முதல் 1342 வரை ஆண்ட வீரபாண்டியனையோ இக்கல்வெட்டு குறிக்கும். இது மண்டபத்தின் கிழக்கில் உள்ளது. மற்ற இரு கல்வெட்டுகளும் கருவறை தென்புறச் சுவரில் உள்ளன ஒன்றின் காலம் கி.பி. 1437–1438 ஆகும். எனவே குலசேகர நாயனார் என்று தொடங்கும் கல்வெட்டே கோயிலில் தொன்மை வாய்ந்த கல்வெட்டு எனலாம். 20 முதல் 29–க்குள் ஆட்சியாண்டு இருக்க வேண்டும். 2 என்ற எண் உள்ளது. மற்றொரு எண் சிதைந்துள்ளது. எனவே குலசேகரன் காலத்திலோ அவனுக்கு முன்போ கோயில் எழுப்பியிருக்க வேண்டும். குலசேகரன் என்ற பெயரில் பலர் இருப்பினும் கி.பி. 1190 முதல் 1218 வரை ஆண்ட குலசேகரன் காலக் கோயில் என்று கூறுவதே பொருத்தமாகும்.

**ஞானபிரான்:**

கோயில், பெரியபிரான் கோயில், என கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. கல்லிடைக் குறிச்சியில் வேறொரு கோயில்

ஞானபிரான் கோயில் எனக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. அக்கோயில் தற்போதுள்ள லட்சுமி நரசிம்ம பெருமாள் கோயிலாகும்.

**மாறவர்மன்:**

நாகேஸ்வரமுடையார் கோயிலில் உள்ள மாறவர்மன் விக்கிரம பாண்டியனுடைய ஏழாவதின் எதிர் நாலாம் ஆட்சியாண்டு கல்வெட்டு (அதாவது கி.பி. 1229 இல்) 'கிராம ராஜ விண்ணகர் எம்பெருமான் கோயில்', ஒன்றைக் குறிக்கப்படுகிறது. இக்கோயில் பெரிய பிரான் கோயிலுக்கும் முந்தையதாகும். கோயில் இருந்த தடயமே தெரியவில்லை. கல்லிடைக்குறிச்சியின் கீழ்த்திசையிலேயே இதுவும் இருந்திருக்க வேண்டும்.

**கரியமாணிக்கம்:**

கீரி கிருஷ்ணர் கோயில் என வழங்கப்பட்ட, மறைந்த கோயிலில், உள்ள கல்வெட்டுகள் நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில் என ஒரு கோயிலைக் குறிப்பிட்டுள்ளன. இந்தக் கோயிலுக்குக் 'கரிய மாணிக்கம்' என்பவன் தானம் புரிந்துள்ளான். பிற்காலத்தில் இக்கோயில் கரிய மாணிக்க ஆழ்வார் கோயில் என் வழங்கப்பட்டமை குலசேகரமுடைய நாயனார் கோயில் கல்வெட்டின் மூலம் அறிகிறோம். இதே கல்வெட்டில் பெரியபிரான் கோயிலும் வருகிறது. எனவே பெரிய பிரான் கோயில், கல்வெட்டுகளில் மாற்றம் பெற வில்லை. கல்வெட்டின் காலம் கி.பி. 1526 ஆகும். இது கேரளமன்னர் கல்வெட்டாகும்.

**பிரான் என்ற சொல்:**

கல்வெட்டில் வரும் 'பெரியபிரான் கோயில்' என்ற பெயரை வைத்துக் கொண்டு விஷ்ணு கோயில் தான் என்று உறுதி படுத்த முடியாது. கோயிலில் சிலைகள் ஏதுமில்லை. சிதைவுற்று கருவறை காட்சித் தருகிறது. எனவே விஷ்ணு கோயில் தான் என்பதற்குச் சான்றுகள் தேட வேண்டி உள்ளது. தென்புற விமான கோஷ்டத்தில் தட்சிணா மூர்த்தியும் மேற்கில் விஷ்ணுவும் வடக்கில் பிரம்மாவும் உள்ளனர்.

மேலும் 'பிரான்' என்ற சொல் சிவனுக்கும் திருமாலுக்கும் பொதுவான சொல்லாகும்.

'கோவணம் பூணுமேனும் பிரான்', என்பர் –
தேவாரம் 640–7

'பிரான் பெருநிலங்கீண்டவன்' – திருவாய்மொழி
1,7,6

பாண்டிய நாட்டில் பாரி வாழ்ந்த மலை பிரான்மலை என வழங்கப்படுகிறது. இங்குச் சிவன் கோயில் உள்ளது. கல்லிடைக் குறிச்சியில் ஞான பிரான் என்ற கோயில் விஷ்ணு கோயிலைக் குறிப்பிடுகிறது.

மணவாளநாச்சி

இன்று மக்கள் கொசக்குடிப் பெருமாள் கோவில் என இதனை வழங்குவதால் பெருமாள் கோயில் என்பது ஓரள விற்குப் பொருந்தும். இதைவிட கொல்லம் 613 என்ற வருட முள்ள இங்குள்ள கல்வெட்டில் 'மணவாள நாச்சியார்' குறிக்கப்படுகிறார். விஷ்ணு தேவியின் பெயர்களில் இது ஒன்றாகும். எனவே இங்குள்ள அம்மன் பெயர் மண வாளநாச்சி எனலாம். இக்கல்வெட்டில், இறைவன் எம்பெரு மான் என வழங்கப் பட்டுள்ளான். ஓங்கி உலகளந்த உத்தமன் வடிவில் பெரியபிரான் இருந்திருக்க வேண்டும். ஏகதண்டி, திரிதண்டி என்ற வைஷ்ணவ அடியார்களைக் கொசக் குடி பெருமாள் கோயில் கல்வெட்டில் காண்கிறோம். சிவன் கோயில், அம்மன் கோயிலாகவோ விஷ்ணு கோயிலாகவோ பிற்காலத்தில் மாற்றப்பட்டுள்ளதால் தடை எழுப்பி விடை யளிக்கப்படுகிறது. கல்லிடைக் குறிச்சியின் மேற்கில் ஞான பிரான் கோயிலும் கிழக்கில் நாலாயிர விண்ணகர் பெருமான் கோயிலும், நடுவில் பெரியபிரான் கோயிலும் இருந்துள்ளன. தற்போது ஞானபிரான் கோயிலும் பெரியபிரான் கோயிலும் உள்ளன. கிழக்கில் இருந்த கோயில் இன்றில்லை. நாகேஸ்வர முடையார் கோயிலைக் காட்டிலும், குலசேகரமுடையார் கோயிலைக் காட்டிலும், பெரியபிரான் கோயில் உண்மையில் பெரிய கோயிலாகும். இவை மூன்றும் சம காலமாகக்

கருதலாம். பெரிய பிரான் கோயில் பூமி மட்டத்தை விட 3' உயரத்தில் கட்டப் பட்டுள்ளது, கிழக்கு நுழை வாயில் வழி யாக உள்ளே வந்தால் தென்புறப் படிக்கட்டுகள் வழியாக உள்ளே செல்ல வேண்டும். ஊருக்கு வெளியில் தண்ட வாளத்தைக் கடந்து தான் இக்கோயிலுக்குச் செல்ல வேண்டும் என்ற நிலை இருப்பதால் ஊர் மக்கள் எவரும் கோயிலுக்குச் செல்வதில்லை. மேலும் கருவறைச் சிதலமடைந்து சிலைகள் ஏதுமில்லாததால் வழிபாடும் இல்லை.

**கோயில் புணரமைப்பு:**

நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில் இருந்த தடயமே இன்றில்லை என்ற நிலை பெரியபிரான் கோயிலுக்கு ஏற்படாத வண்ணம் இருக்க வேண்டுமானால், கோயிலைப் புணரமைத்து தினம் ஒரு வேளையாவது வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்தால் பயனுடையதாக இருக்கும். இறை உணர்வு மிக்க அன்பர்கள் இது குறித்து சிந்திக்க வேண்டுமாய் வேண்டுகிறேன்.

# பகழிக் கூத்தர் கோயில்

**குமாரமார்த்தாண்டன்**

கல்லிடைக் குறிச்சியின் கீழ்த்திசையில் உள்ள பழைய கோயில்களில் பகழிக் கூத்தர் கோயில் ஒன்றாகும். இக்கோயில் சிறிய கோயில். கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முன் மண்டபம் ஆகியவற்றையே கொண்டுள்ளது. நுழை வாயிலின் இருபுறமும் வட்டமான தூண்களை நிறுத்தி திண்ணை போன்ற அமைப்பை ஏற்படுத்தி உள்ளனர். வாயிலின் இருபுறமும் துவார பாலகர் சிலைகள் உள்ளன. பலி பீடத்தை அடுத்துள்ள மண்டபத்தின் தென்புறச் சுவரில், கொல்லம் 698 இல் வெட்டப்பட்ட குமார மார்த்தாண்டன் கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டை மத்திய அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை, படியெடுத்து, 1916 இல் ஆங்கிலத்தில் சுருக்கமான ஆண்டறிக்கையாக வெளியிட்டுள்ளது. மூலம் இன்னும் பதிப்பிக்கப் படவில்லை. இக்கல்வெட்டின் மூலம் வருமாறு:

1) கொல்லம் 698 ஆ புரட்டாசி மாதம் 3 ஆம் தேதி பூறுவ பக்கிழத்து துவா

2) தெசியும் செவ்வா ஆட்சையும் பெற்ற திருவோணத்தி நாள் செய்தான

3) ப்ரமாணமாவது நயினார் பவழக் கூத்தர் நயினார் சீ பண்டராத்துக்கு

4) தென்கரை சேர குமாரனில் நயினார் ஞான பிரான் கோயிலில் கைகோள

5) ரில் குமாறன் மாத்தாண்டன் சந்தியாதீபங்கற்பித்த திரு விளாக்கு...

6) பதக்கு 100 அதிகை நாள் உள்பட ஆக்கு

7) ...698 கார்த்திகை மீ சந்தியா தீபம் மீ மக...க்கு 700ஙூ ... லும் ஆக 712

8) ஆண்டுதோறும் அற்பசி மீ 5 ... யுனந்து தரும் மற்றும் தர்மத்து

9) இவன் இந்நாயினார் சி பண்டாரத்துக்குத் தந்த தோப்பு பெருமாள்சீ ப

10) ற்பணாப பெருமாள் திருவிடையாட்டம் தென்கரை

11) மணத்திட்டில் தோப்பு வடக்கடைய தோப்பு இவன்

12) ஆசந்திரதிதவற் சந்ததிப் பிறவேசமே கையாண்டு போது ம் படியும் கற்பித்தது.

**பத்மநாபபெருமாள்:**

கொல்லம் 698 புரட்டாசி மாதம் மூன்றாம் தேதி துவாதசி செவ்வாய் அன்று (கி.பி.1523 இல்) நயினார் பவழக் கூத்தர் கோயில் கார்த்திகை விளக்கு வைக்க நெல் தானம் செய்யப் படுகிறது. சேர குமாரனில் ஞானபிரான் கோயிலைச் சேர்ந்த கைக்கோள மரபில் வந்த குமாரன் மார்த்தாண்டன் என்பவன் இத்தானம் செய்துள்ளான். கோயிலுக்குத்தோப்பு ஒன்றும் தானம் செய்யப்பட்டுள்ளது. மேலும் பத்மநாப பெருமாள் திருவிடையாட்டமாகச் சேரகுமாரன் மணத்திட்டில் தோப்பு வழங்கப் பட்டுள்ளது. ஞானபிரான் கோயிலில் பத்மநாபர் கோயில் இருந்திருக்கலாம்.

**அகத்தடி இளையாள்**

ஞான பிரான் என்ற இலட்சுமி நரசிம்ம பெருமாள் கோயில் தனியாக எழுதப்பட்டுள்ளதால் இங்கு விவரிக்க வில்லை. மகாமண்டபத்தின் மேற்குத் திசையில் மற்றொரு கல்வெட்டு உள்ளது. இது கொல்லம் 671 ஆவணி முதல் தேதியில் (கி.பி.1496-97) வெட்டப்பட்ட கல்வெட்டாகும். இக்கல்வெட்டும் சேரவர்மன் அல்லது திருப்பாப்பூ மரபில்

வந்தவர் கல்வெட்டேயாகும். இக்கல்வெட்டே இந்தக் கோயிலில் தொன்மை வாய்ந்தது என்பதால் கி.பி.1496-க்கு முன் கோயில் கட்டப்பட்டது தெளிவாகிறது. உண்மையில் அகத்தடி இளையான் சாத்தனுக்காக எழுப்பப்பட்ட இக் கோயில் பிற்காலத்தில் சிவன் கோயிலாக மாற்றப்பட்டது. எனினும் சாத்தனின் திருமேனி கோயிலில் உள்ளது. சாத்தன் தான் காத்தான் என்று கல்வெட்டில் உள்ளது.

இனி, இரண்டாவது கல்வெட்டின் மூலம் வருமாறு:

1) சுபமஸ்து அருளிச் செய்கை அகத்தடி இளையான் காத்தானுக்கு கொல்லம் 671-க்கு கார் முதலுக்கு இறையிலி

2) ஆக விட்டுக் குடுத்த முள்ளி நாட்டுப் புனலான சத்திரி சிகாமணி புரத்துப் பற்றில் மேற்படியான்

3) உழவான வடவூர் தெற்கு நாலாங் கண்ணாற்று முதல் பதின்னொன்றாம் கண்ணாறு வரையில் ஆனந்தமெ

4) ய்யனும் இருந்து திண்டிச்சி பற்மனாபனும் வகை நிலம் ஒருமாவரையும் நீங்கலாக நிலம் இருபதுமா இதில் முதற்றரம் நிலம்

5) ஒரு மாவும் அரைக்காணி இரண்டாந்தரம் நிலம் ஒன்பது மா கால் முந்திரிகை மூன்றாந்தர நிலம் எழுமா முக்காணி

6) அரைக்காணி முந்திரிகை நாலாந்தர நிலம் ஒருமா அரைக்காணி ஆக நிலம் இருபது மாவும் மே

7) ற்படி ஆண்டு கார் முதலுக்கு இறையிலியாகக் கையாண்டு கொள்ளும் படியும் இந்நிலத்துக்குத்

8) தரப்படி கடைமை தவிர்த்து கட்டுக்கடைமை ஆகக் கல்லிடைக் குறிச்சியில்

9) சாத்தர் பகுதியில் கந்தன் சாத்தன் வீரகேரளன் சந்தி பூசையாக எழுபத்தொன்

10) றாமாண்டு ஆவணி மாதம் முதற்றியதி முதலுக்கு நியமமாக

11) நாள் ஒன்றுக்கு அமுதுபடி முன்னாழிக்கு இரண்டு அஞ்சு விழுக்காடு நெல்லு ஏழு நாழி உரியும் கறியமுது எரி

12) கரும்பு நெய்யமுது உட்பட வகைக்கு நெல்லு இரு நாழி உரியும் ஆக நெல்லுக்குறுணி இருநாழியும் சந்திரா

13) தித்தவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிப் பூசைக் குறைச்சல் வராமல் நடத்திக் கொண்டு

14) போதும்படி அறுநூற்று எழுபதாம் ஆண்டு ஆனி மாதம் இருபத்தாறாம் தியதி விளங்குளத்தில் கோட்டை

15) அகத்து நாம் வீடாய் இருக்க கற்பித்தோம். தானும் இன்னாள் முதல் இத்தரவு பிடிபாடாக இந்நிலம் இருப

16) து மாவும் சந்ததிப் பிறவேசமே இறையிலி ஆகக் கைய்யாண்டு கறபித்த வகைப்படியே பூசையும் குறை

17) வற நடத்திக் கொண்டு போதும் படியும் கற்பித்தமைக்கு இது தரவு ஆகும்

18) இப்படிக்கு கணக்கு சுந்தரன் விக்கி

19) றமன் எழுத்து.

**வீரகேரளன்:** வீரகேரளன் சந்தி ஒன்று கோயிலில் ஏற்படுத்தப்படுகிறது. இதற்காக 20 மா நிலம் விடப்படுகிறது. நிலமுள்ள ஊர் புனலாகிய சத்திரிய சிகாமணிபுரம். இவ்வூர் முள்ளி நாட்டில் இருப்பது. விளங்குளம் கோட்டையில் முகாமிட்டிருந்தபோது மன்னன் வரிநீக்கி ஆணைவழங்கி யுள்ளான். தானம் தந்தவன் கல்லிடைக் குறிச்சியைச்சேர்ந்த சாத்தர் பகழி கந்தன் சாத்தன் என்பவன் ஆவான். நிலங்களின் தரமும் கண்ணாறுகளும் சந்திக்கான படி வகைகளும் இதில் காண்கிறோம். உத்தரவில் சுந்தரன் விக்கிரமன்

என்பவன் ஒப்பமிட்டுள்ளான். இவனே பெரிய பிரான் கல்வெட்டொன்றிலும் இடம் பெற்றுள்ளான். கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லை. எனினும் வீரகேரளன் சந்தி என்ற தொடர் மூலம் வீரகேரளன் கல்வெட்டு என்று முடிவு செய்ய லாம். இறைவன் பெயர் அகத்தடி இளையான்காத்தான் ஆகும்.

**விளங்குளம்:**

நாள் ஒன்றுக்கு அமுதுபடி முன்னாழிக்கு இரண்டு அஞ்சு விழுக்காடு நெல் ஏழு நாழி உரி அளவு விடப்படுகிறது. அதே போல் கறியமுது உட்பட பிறவற்றிற்கு நெல் இரு நாழி விடப்படுகிறது. உத்தரவு கல்லிலும் செம்பிலும் வெட்டப் படுகிறது. கால்வாய் பல உள்ள கல்லிடைக் குறிச்சி புனல் எனவே கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. விளங்குளம், வீர கேரளன் துணைத் தலை நகரமாக இருந்துள்ளது. கல்வெட் டில் கோட்டை என்றே வருகிறது. நம் வீடு என்று மன்னன் கூறுவது அரண்மனையாகும். ஆனந்த மெய்யன் மற்றும் திண்டிச்சி பற்பநாபன் பெயர்களும் காண்கிறோம். குல சேகரமுடையார் கோயில் கல்வெட்டொன்றில் வரும் கலியு கத்து மெய்யன் (கி.பி. 1526) ஆன்ந்தமெய்யனின் (கி.பி.1496) உறவினனாக இருக்கலாம்.

**பகழிக்கூத்தர் கோயில் அமைப்பு:**

பகழிக்கூத்தர் கோயில் கருவறை எளிய அமைப்புடையது. இது ஜகதி, கண்டம், முப்பட்டைக் குமுதம், பட்டி மற்றும் அரைத்தூண்களைக் கொண்டுள்ளது. அரைத்தூண்களுக் கிடையே கோஷ்டங்கள் இருப்பினும் சிற்பங்கள் இல்லை. எனினும் புடைப்புச் சிற்பமாக மேற்கில் விஷ்ணு சிற்பம் உள்ளது. கிரீவத்தில் சிம்மமுகப்புடைய தோரணத்தில் யோக நரசிம்மர் உள்ளார். கருவறை வடக்குச்சுவரில் நாட்டிய சிற்பம், யானை சிற்பம், பன்றியுடன் மோதும் ஆடவர் சிற்பம், மயில் மீது அமர்ந்த கௌமாரி சிற்பம் முதலிய சிற்பங்கள் உள்ளன.

**செங்குந்தர்:**

மகாமண்டபத்தில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. எனவே சேரள அரசர் காலத்தில் இக்கோயில் மகாமண்டபம் எடுக்கப்பட்டது எனலாம். வேறு தொன்மையான கல்வெட்டு கள் இல்லாததால் இக்கோயில் வீரகேரளன் காலத்தில் புதுப் பிக்கப்பட்டது எனலாம். செங்குந்த மரபினன் ஒருவன் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளான். செங்குந்தர்களால் இக் கோயில் பராமரிக்கப்பட்டு வருகிறது. கோயிலை ஒட்டி இவ்வின மக்கள் மிகுதியாக வாழ்வதையும் இங்கே குறிப்பிட வேண்டும். பகழிக் கூத்தர் என்ற பெயரில் தமிழ்ப் புலவர் ஒருவர் இருந்துள்ளார். பகழிக்கூத்தர் இறைவன் பெயரை அவர் சூடினார் போலும்.

**ஐம்பொன் சிலைகள்:**

இங்குள்ள ஐம்பொன் சிலைகள் யாவும் கல்லிடைக் குறிச்சியில் உள்ள அகஸ்தீஸ்வர முடையார் கோயிலுக் குரியவை ஆகும். அகஸ்தீஸ்வரர் கோயிலும் செங்குந்தர் மரபினருக்குரிய கோயில் ஆகும். திருவிழா நாட்களில் எடுத்துச் சென்று மீண்டும் இதே கோயிலுக்குத்திரும், வைத்துவிடுவர். பாதுகாப்புக் கருதி பகழிக்கூத்தர் கோயிலில் சிலைகள் வைக்கப் பட்டுள்ளன.

**நடராசர்:**

பிரபையின்றி வலது காலை முயலகன் மீது ஊன்றி இடது காலைத் தூக்கி ஆடும் நிலையில் நான்கு கரங்களுடன் நடராசர் காட்சியளிக்கிறார். மேற்கரங்களில் உடுக்கையும் நெருப்பையும் காண்கிறோம். கீழ் வலக்கரம் காக்கும் கரமாக உள்ளது. இடக்கரம் மார்புக்குக் குறுக்கே நீண்டு வேழ முத்திரை காட்டுகிறது. நடராசர் தலையில் ஜடாமகுடம் உள்ளது. கழுத்தில் கண்டசரம் என்ற கழுத்தணி உள்ளது. தோளில் தோள்வளை அழகூட்டுகிறது. இடையில் உதர பந்தம் காட்டப்பட்டுள்ளது. பாதத்தில் பாதசரம் உள்ளது.

சிவனின் காதுகளை ஓலைக்குழையும் நாக குண்டலமும் அழகு செய்கின்றன. கைகளில் கடகங்களும் இடையில் கச்சும் உள்ளன.

**மாணிக்கவாசகர்**

ஒரு கையில் சுவடி ஏந்திய மணிவாசகர், மற்றொரு கையில் சின்முத்திரை காட்டி நிற்கிறார். தலையில் உருத்திராக்க மாலை உள்ளது. மார்பிலும் உருத்திராக்கமாலை உள்ளது. தொடை வரை ஆடை காட்டப்பட்டுள்ளது.

**காரைக்கால் அம்மையார்:**

கல்லிடைக் குறிச்சியில் பல கோயில்களில் நடராசருடன் காரைக்கால் அம்மையாரும் வீற்றிருக்கிறார். இங்கும் இவர் உள்ளார். இவருடைய காதுகளில் அணிகள் ஏதுமில்லை. மணிவாசகர் போல் சின் முத்திரை ஒரு கையில் உள்ளது. தாளம் மற்றொரு கையில் காண்கிறோம். கழுத்தில் பதக்கமாலை மட்டும் உள்ளது. இடையில் ஆடை. தொங்கும் நிலையில் மார்பகங்கள். எலும்பும் தோலுமாகப் பேய் வடியில் காரைக்கால் அம்மையார் காட்சி தருகிறார்.

**சிவகாமி:**

சிவனுக்கு அருகில் சிவகாமி உள்ளார். அம்மன் கரண்ட மகுடம். செவிகளில் மகர குண்டலங்கள் உள்ளன. இடையில் இருந்து பாதம் வரை ஆடை காட்டப்பட்டுள்ளது. கழுத்தில் கண்டசரம், முத்துமாலை, பதக்கமாலை, கைகளில் வளையல் கள், கால்களில் பாதச் சங்கிலிகள் முதலியவை உள்ளன. பத்ர பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் சிவகாமி நின்றபடி உள்ளார்.

**கூத்தர்**

பகழிக் கூத்தர் கோயில் இன்று சிவன் கோயிலாக உள்ளது. 1496 இல் உள்ள கல்வெட்டில் பகழிக் கூத்தர் பெயர் இல்லை. மாறாக அகத்தடி இளையான் காத்தான் என்று உள்ளது.

ஆயின் கி.பி.1523இல் கூடிய கல்வெட்டில் பவழக் கூத்தர் கோயிலும் ஞானபிரான் கோயிலும் இடம் பெற்றாலும் அகத்தடி இளையான் காத்தான் பெயர் இல்லை. இரண்டு கல்வெட்டுகளும் வீர கேரள வர்மனுடையதாகும். முதல் கல்வெட்டில் அகத்தடி இளையானுக்குத் தானம் செய்துள்ளார். இவர் சாத்தனார் ஆவார். சாத்தன் என்பது காத்தான் என்றுள்ளது. இரண்டாவது கல்வெட்டில் 1523 இல் பவழக் கூத்தர் என்றபெயர் இடம் பெறுவதால் இக்காலக் கட்டத்தில் சிவன் கோயிலாக மாறியிருக்க வேண்டும். பவழக்கூத்தர் என்ற சொல் பகழிக் கூத்தர் எனத் திரிந்திருக்கலாம்.

**அய்யனார்**

அகத்தடி இளையான் காத்தான் என்ற அய்யனார் இரு கரங்களுடன் உள்ளார். யானை, சிங்கங்கள் பீடத்தின் அடியில் உள்ளன. இவர் அமர்ந்த நிலையில் உள்ளார். வலக்கை முட்டி மீது உள்ளது. இடக்கை தொங்கிய நிலையில் உள்ளது. தடித்த உருண்டையான பூணூல் மார்பில் உள்ளது. காதுகளில் குண்டலங்கள். அழகிய உதர பந்தம். சிம்மமுகக் கச்சு இடையை அலங்கரிக்க, இடக்காலை மடக்கி வலக்கால் குத்திட்ட நிலையில் அய்யனார் உள்ளார். இருபுறமும் விரிந்து செல்லும் ஜடாபாரம். புன்னகை தவழும் முகம். காலம் 12 ஆம் நூற்றாண்டு எனலாம்.

**அவலோகிதர்:**

பௌத்தரால் வணங்கப்படும் தெய்வங்களில் அவலோகிதரும் ஒருவர். உலக நாதர் என்றும் போதி சத்துவர் என்றும் இவருக்குப் பெயருண்டு. அறநெறியைப் பூவுலகில் போதிப்பதற்காகப் புத்தராகப் பிறக்கிறவர் இவராவார்,

''ஆயுங் குணத்தவலோகிதன் பக்கல் அகத்தியன் கேட்டு
ஏயும் புவனிக் கியம்பிய தண்டமிழ்''

என்று வீர சோழிய நூலாசிரியர் அகத்தியனுக்குத் தமிழ் கற்று தந்தவராக அவலோகிதனைக் குறிப்பிடுகிறார். அகம் என்பதற்கு மலை என்று பொருள். அகத்தடி – மலையின் (பொதிய மலை என்க) அடியில், இளையான் – பின்னால்

வந்தவன். சாத்தான் — அவலோகிதன். அவலோகிதனைப் பௌத்தர்கள் வணங்குகிறார்கள். இந்த அவலோகிதனையோ பௌத்த மதத்தில் கூறிய சாத்தனையோ இப்பெயர் குறித்திருக்க வேண்டும். பௌத்த நூலான மகாவம்சம் புத்தர் கற்ற ஐந்தாவது மொழியாகத் திராவிடி (தமிழ்) யைக் குறிப்பிடுகிறது. ஆகவே அவலோகிதனிடமிருந்து அகத்தியன் தமிழ் கற்றான் என்பது பௌத்தர் நம்பிக்கையாக வீர சோழிய நூலாசிரியர் காலம் வரை இருந்து வந்துள்ளது எனலாம். சாத்தன் என்ற அய்யப்பன் இந்து சமயக் கடவுளாகக் கருதப்படினும் புத்த சமண நூல்களில் இவர் பெரிதும் போற்றப்பட்டுள்ளார். இந்து சமயக் கடவுளாகக் கருதப்பட்டு பூசை செய்விக்கப்படுகிறது.

## 84

# இலட்சுமி வராகர் கோயில்

**வராகமூர்த்தி:**

தமிழ்நாட்டில் வராகமூர்த்தி வழிபாடு சங்க காலம் தொடங்கி இன்று வரை இருந்து வருகிறது. பரிபாடலில் இம்மூர்த்தியைக் காண்கிறோம். தமிழகத்தில் இப் பெருமானுக்குப் பல கோயில்களும் சிற்பங்களும் உள்ளன.

**மாமல்லபுரம்:**

மாமல்லபுரத்தில் உள்ள ஆதிவராகர் குடைவரைக் கோயில் தொன்மை வாய்ந்தது. 'பரமேஸ்வர மகாவராக விஷ்ணு கிரகம்' என்று இது வழங்கப்படுகிறது. நிலமகளை ஆழ்கடலில் இருந்து தூக்குவது போல் இங்குச் சிற்பம் உள்ளது. தசாவதாரத்தைக் குறிப்பிடும் வடமொழிக் கல்வெட்டும் இக்கோயிலில் உள்ளது. இதே ஊரில் வேறோர் இடத்திலும் வராக மூர்த்தி கோயில் உள்ளது.

**நாமக்கல் வராகர் கற்சிலை:**

நாமக்கல் குடைவரைக் கோயிலான நரசிம்ம சுவாமி கோயிலில் மிகச்சிறந்த வராக மூர்த்தியின் உருவம் உள்ளது. பெருமான் கணுக்காலின் கீழ் ஏதும் காட்டப்படாமல் நீரில் உள்ளதுபோல் காட்டி, பூமி தேவியைப் பெருமான் தூக்கி வர, நான்கு முனிவர்கள் போற்றுவது போல் சிற்பம் உள்ளது. இந்நான்கு முனிவரும் நான்கு வேதமாக அறிஞர் கருது கின்றனர். அத்யேந்திரன் என்ற அதியமான் மன்னன் எடுத்தது இக்கோயில் ஆகும்.

**திருவிடந்தை வராகர்:**

திருவிடந்தை என்னும் ஊரில், ஆழ்வார் வராக தேவர் கோயில் சோழர் காலத்தில் கட்டப்பட்டது. இக்கோயில் வராக சுவாமி எனத் தற்போது அழைக்கப்படுகிறது. இக் கோயில் கட்டிடக் கோயிலாகும்.

**ஸ்ரீமுஷ்ணம் பூவராகவர்:**

சிதம்பரம் அருகேயுள்ள ஸ்ரீமுஷ்ணத்தில் உள்ள ஆதி வராக மூர்த்தி பிரசித்தி பெற்றவர். மூலஸ்தானத்தில் சிறிய வடிவில் இவர் காணப்படுகிறார். பூவராக மூர்த்தி எனவும் இவர் வழங்கப்படுவார். ஆதிவராக நல்லூர் என்ற ஊர் இக்கோயில் அருகே உள்ளது.

**ஞானம் :**

உபநிடதங்களில் வராக உபநிடதம் என்ற ஒன்றுள்ளது. இது ஐந்து அத்தியாயங்களைக் கொண்டது. ரிபு என்ற முனிவர் 12 ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து, வராகப் பெருமானிடமிருந்து ஞானத்தைக் கேட்டறிந்தார் என்று அந்நூல் குறிப்பிடுகிறது.

**ஜீவன்முக்தர்**

யார் யார் பக்தியோடு வராகமூர்த்தியை வணங்குகிறார்களோ அவர்கள் அறியாமையிலிருந்து நீங்கி, ஜீவன்முக்தர்கள் ஆவார்கள். எனவே வராக மூர்த்தியை ஞானபிரான் என்று அறிஞர் வழங்குகின்றனர். யோகாப்பியாஸத்தால் ஆத்மாவை அறிவதே ஞானம். அதுவே சிவம். சிவனே குருவும் வேதமாகவும் தேவனாகவும் பிரபுவாகவும் நானாகவும் நீயாகவும் இருக்கிறான். சிவன் வேறு; விஷ்ணு வேறு அல்ல இரண்டும் ஒன்றே. அவரவர் மனத்தே உள்ள ஆத்மதத்துவம் தானே சிவன் என்பதும் விஷ்ணு என்பதும் ஆகும்.

"சிவோ குரு சிவோ வேத சிவோ தேவ சிவ; பிரபு
சிவோஸ்மா அஹம் சிவ ஸர்வம் சிவாத் அன்யத்
ந கிஞ்சன்"

இந்த ஆத்ம தத்துவமே வராஹஸ்வருபம் என்றும் ரிபு முனிவர் கூறுகிறார்.

**ஞான தட்சிணா மூர்த்தி :**

ஆலின் கீழ் அமர்ந்து அறிவுரை கூறும் தட்சிணா மூர்த்தி சிற்பங்களில் ஞான தட்சிணாமூர்த்தி குறிப்பிடத் தக்கவர்.

வராகப் பெருமானாகிய ஞானபிரானுடன் இவரை ஒப்பிட்டு பார்க்கலாம். இருவரும் ஞானத்துடன் தொடர்புடையவர்கள். 'மரீசி சம்ஹிதை' என்ற வைகானஸ நூல், வராகப் பெரு மானை மூன்று விதமாகக் கூறுகிறது. வேறு சில ஆகமங்கள் சிறிது மாற்றியும் கூறுகின்றன.

**ஆதிவராக மூர்த்தி:**

நான்கு கரங்களும் வராக முகமும் வலது காலை ஐந்தலை அரவான் தலையில் ஊன்றி, இடது காலை நிலமகளைத் தூக்க உதைத்து ஊன்றி, தேவியைத் தம் மார்புயரத் தூக்கி, தம் வலக்கரத்தால் தேவியின் அடிகளைப் பற்றி, இடக் கரத்தால் அவளை அணைந்து தம் முகத்தால் அத்தேவியை முகர்வது போல் இம்மூர்த்தி விளங்குவார். தேவி வணங்கிய நிலையில் புன்முறுவல் பூத்தபடி இருப்பாள். அதாவது இம் மூர்த்தி நின்றபடியிருப்பர். நாமக்கல் ஆதிவராகர் இவ்வாறே உள்ளார்.

**பிரளய வராக மூர்த்தி:**

இப்பெருமான் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பார். இடக் காலை மடக்கி, வலக்காலைத் தொங்கவிட்டபடி இருப்பார். நான்கு கைகள்; பின்புறக் கைகள், சங்கு, சக்கரம்; முன் வலக்கை அபயம் அளிக்கும். இடக்கை தொடை மீது வைக்கப் பட்டிருக்கும். இவருக்கு வலப்புறம் பூதேவி அமர்ந்திருப்பார். தேவியின் வலக்கரம் உத்பல புஷ்பம் ஏந்த, இடக்கரம் ஆசனத்தில் இருக்கும். இத்தேவரை பிரளய வராகர் என்றும் பூவராக மூர்த்தி என்றும் ஆகம நூலார் அழைப்பர். ஸ்ரீமுஷ்ணத்தில் பூவராக மூர்த்தி காட்சி தருகிறார் என்பதை முன்பே கண்டோம்.

**யக்ஞ வராகர்:**

வெள்ளை நிறம். நான்கு கரங்கள். சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பார். வலப்புறத்தில் ஸ்ரீதேவி அமர்ந்திருப்பாள். தேவியின் கரத்தில் தாமரை மலர் இருக்கும். இடப்புறத்தில் பூதேவி அமர்ந்திருப்பாள். இவர் அல்லி மலரை வைத்திருப் பார். இம்மூர்த்தமே யக்ஞவராக மூர்த்தமாகும்.

**ஆதிவராகர்:**

ஆதிவராகர் பச்சை நிறம். பிரளய வராகர் நீல நிறம். யக்ஞ வராகர் வெண்மை நிறம். ஆதிவராகர் நின்ற நிலை: மற்ற இருவரும் அமர்ந்தபடி இருப்பர். வராக மூர்த்திக்கு நான்கிலிருந்து 16 வரை கைகள் காட்டப்படும். பூமியை மட்டும் தேவியாக உள்ள வராகர், பூமி மாதாவும் இலக்குமியு முடைய வராகர், தவிர ஸ்ரீ, பூமி, நீளா தேவி என மூன்று தேவியருடன் கூடிய வராகரும் உண்டு. இவரையே சில ஆகமங்கள் யக்ஞவராகர் என்று கூறும். இலட்சுமிவராகர் கிழ்த்தளத்தில் ஞானபிரானான வராக மூர்த்தியும் மேல் தளத்தில் அனந்தசாயியும் உள்ளனர்.

**ஆகம நூல்களில் குறிக்கப்படாதவர்:**

ஆகமங்கள் குறிப்பிடும் மூன்று நிலைகளான ஆதிவராகர், பிரளய வராசர், யக்ஞவராகர் என்ற மூன்றிலும் அடங்காமல் இலக்குமி வராகராக இக்கோயில் இறைவன் காட்சியளிக் கிறார். ஆயின் உற்சவ மூர்த்தி யக்ஞ வராகர் அமைப்பு எனலாம். எனினும் இலட்சுமி வராகர் என்றே மக்கள் அழைக்கின்றனர்.

**ஆதிவராகர் வருக்கக் கோவை:**

அதிவராகர் வருக்கக் கோவை ஆசிரியர், ஞானபிரான் என்றும் ஆதிபிரான் என்றும் இருபெயர்களிலும் இறைவனைக் குறிப்பிடுகிறார். கல்லிடைக்குறிச்சிக் கொசக்குடிப் பெருமாள் கோயிலும், பவழக் கூத்தர் கோயிலும் ஞானபிரான் என்ற இறைவனைக் குறிப்பிடுகின்றன. இலக்குமி வராகர் கோயில் இறைவனே ஞானபிரான் ஆவார்.

''பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர்''

என ஆண்டாள் இப்பெருமானைப் பாடியுள்ளார். திருமங்கை ஆழ்வார், பெரிவாழ்வார் ஆகியோரும் இவரைப் போற்றி உள்ளனர்.

**முதல் இராசேந்திரன்:**

புராண கருத்தின்படி குபேரன், கல்லிடைக் குறிச்சியில் வராகர் கோயிலைக் கட்டினான் என்றறிந்தாலும் வரலாற்றுக் கண்ணோட்டத்தின் படி, முதல் இராசேந்திரன் காலத்தில் இக்கோயில் கட்டத் தொடங்கியிருக்க வேண்டும். ஆதித்த வர்மன் மற்றுமுள்ள சேரள மன்னர் காலங்களில் இக்கோயில் வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும்.

**திருப்பணி:**

இக்கோயில் 1944 இல் (4. 2. 1944) கும்பாபிஷேகம் நடைபெற்றது. மீண்டும் 7. 6. 1987 அன்று மகா கும்பாபிஷகம் நடைபெற்றது. கோயில் புதுப்பிக்கப்பட்டு கும்பாபிஷேகம் இருமுறை நடைபெற்றுள்ளதால் இன்றும் கோயில் நன்னிலையில் உள்ளது.

**முக்கிய கோயில்கள்:**

கல்லிடைக் குறிச்சியில் இலக்குமி வராகர் கோயிலும் மானேந்தியப்பர் கோயிலும், சுப்பிரமணியர் கோயிலும் மக்கள் மிகுதியாகக் கூடி வழிபடும் கோயில்களாக உள்ளன. இனி, இலக்குமி வராகர் கோயில் வரலாற்றினைக் காண்போம் வைணவ மரபினரான திருவிதாங்கூர் மன்னர்கள் குறித்தும் நாடார் மற்றும் பிராமணர் குறித்தும் இடைஇடையே காண்போம்.

**மையப்பகுதி:**

அம்பா சமுத்திரம் வட்டத்தில் அமைந்துள்ள கல்லிடைக் குறிச்சி, சைவமும் வைணவமும் தழைத்தோங்கும் பகுதியாகும். இப்பதியின் மையத்தில் இலட்சுமி வராகர் கோயில் அமைந்துள்ளது.

**மெய்க்கீர்த்தி:**

கோயிலின் மேற்குப் பிரகாரத்தில் முதல் இராசேந் திரனுடைய மெய்க்கீர்த்தியுடன் கூடிய துண்டுக் கல்வெட்டு உள்ளது. 'திருமன்னிவளர இருநில மடந்தையும்' என்று இது தொடங்குகிறது. கோயில் திருப்பணி காரணமாகச் சிதைந்த கல்வெட்டுகள் இங்கும் சில உள்ளன.

**திருவேங்கடமுடையான்:**

கோயில் முன் மண்டப கிழக்குச் சுவரில் கூடிய கொல்லம் ஆண்டு 653 ஐப்பசி மாதம் 20 ஆம் தேதியில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஞான பிரான் கோயிலுக்கு வழங்கிய தானத்தைக் கூறுகிறது. இராஜராஜ சதுர்வேதி மங்கலத்து பிடாகையாகிய சேர குமாரன் (கல்லிடைக்குறிச்சி) பகுதியில் ஞானபிரான் வழிபாட்டிற்காகத் தொண்டை மண்டலத்துக் காடவராயன் பட்டி திருவேங்கடமுடையான் கிராஞ்சி நாராயணன் என்பவன், தன் பெயரில் கி.பி. 1478 இல் தானம் அளித்துள்ளான்.

குலசேகரமுடையார் மற்றும் பவழக்கூத்தர் கோயில்களில் உள்ள சேர மன்னர் கல்வெட்டுகளிலும் ஞானபிரான் கோயில் இடம் பெற்றுள்ளன என்பதை முன்பே கண்டோம்.

**பிராமணன் தானம்:**

இலட்சுமிவராகர் கோயில் முன்மண்டப இடப்பக்க வாயிலில் உள்ள கொல்லம் 655, கார்த்திகை முதல் தேதியில் வெட்டப்பட்ட கல்வெட்டு, கோயில் வழிபாட்டுக்காக ஒரு பிராமணன், நெல் அளித்த தானத்தைக் கூறுகிறது. காலம் கி.பி. 1490 ஆகும்.

**சேர மன்னர்**

முஸ்லீம் படையெடுப்புக்குப் பின் பாண்டியர் ஒடுக்கப் பட்ட போது வேணாடு பகுதியில் நாடாண்ட சேர மன்னர், அம்பா சமுத்திரம் பகுதியில் செல்வாச்குப் பெற்றனர். பின்னர் இவர்களுடைய ஆட்சி சுருங்கியது.

**ஒரே பெயரில் சில மன்னர்கள்:**

கோப்பெருஞ்சிங்கன் என்ற பெயரில் இருவரும் இராச நாராயணச் சம்புவராயர் என்ற பெயரில் மூவரும், வீர பாண்டியன், சுந்தர பாண்டியன் என்ற பெயர்களில் பல மன்னர்களும் இருப்பது போல் வீர உதைய மார்த்தாண்டன் என்ற பெயரில் கேரள மன்னர்கள் பலர் (வேணாடு ஆண்டவர்

கள்) இருந்துள்ளார்கள். ஆய்வாளர்கள் இவர்களைக் கண்டறிவதில் மாறுபட்டுள்ளனர்.

**சுந்தர பாண்டியன் காலச்சேர மன்னன்:**

கி.பி 1123 ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டொன்றின் மூலம் (கல் குளத்தில் உள்ளது) கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் ஒரு வீர உதைய மார்த்தாண்டன் இருந்துள்ளான் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் இவனையே வென்று தன் வெற்றி வாழ்க்கையைத் தொடங்கினான் என ஆய்வாளர் கருதுவர். இவர் வீர ரவி உதைய மார்த்தாண்ட வர்பனாக இருக்க வேண்டுமென செந்தில் செல்வகுமார் கருதுகிறார்.

**இரண்டாம் உதைய மார்த்தாண்டன்:**

மூன்றாம் சடாவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1292–1342) என்பவன் உதைய மார்த்தாண்டன் உதவியைப் பெற்றதாக வரலாற்று ஆசிரியர் கருதுவர். கன்னியாகுமரி வட்டம் சோழபுரக் கல்வெட்டில் காணப்படும் வீர உதைய மார்த்தாண்டன் இவன் எனலாம். காலம் கி.பி. 1316 ஆகும். இவனை இரண்டாம் உதைய மார்த்தாண்டனாக நம் வசதிக்காகக் குறிப்பிடுவோம்.

**மூன்றாம் உதைய மார்த்தாண்டன்:**

கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் வேணாடுடன் தென் பாண்டி நாட்டின் பெரும் பகுதியினையும் ஆண்டு வந்த ஒரு உதைய மார்த்தாண்டன் மூன்றாம் உதைய மார்த்தாண்டான் என்போம். சுமார் 46 ஆண்டுகள் இவன் நாட்டை ஆண்டுள்ளான். இவனுடைய ஆட்சிக் காலத்தை அறிஞர் பலவாறு குறிப்பிட்டுள்ளனர். கொல்லம் 678 முதல் 721 வரை என டி. ஏ. கோபிநாதராவ் கருதுகிறார். மத்திய அரசு கல்வெட்டுத் துறை கொல்லம் 653-707 வரை என்று கூறுகிறது. எனினும் இருவர் கருத்தும் மாறுதலுக்கு உரியவை. களக்காடு சத்திய வாகீஸ்வரர் கோயிலில் கொல்லம் 676 ஆம் ஆண்டு மார்த்தாண்டன் கல்வெட்டு உள்ளது. மன்னன் வடசேரியில் இருந்த போது இத்தானம் புரிந்துள்ளான். திருப்புடை மருதூரில் இம்

மன்னனின் கல்வெட்டொன்று கொல்லம் 722 என்று குறிப்பிடுகிறது. எனவே இவன் காலம், கி.பி. 1501 முதல் கி.பி. 1547 வரை ஆகும். கொல்லம் 685 இல் தென்காசிப் பாண்டிய ஆட்சிக்கு இம்மன்னன் முடிவு கட்டியுள்ளான். அங்குள்ள அரண்மனையில் இருந்து களக்காட்டில் உள்ள வீரமார்த்தாண்ட பிள்ளையாருக்குத் தானம் தந்துள்ளான்.

**தென்காசிப் பாண்டியர்:**

சீவல்லப பாண்டியன் என்ற தென்காசிப் பாண்டிய மன்னன், விஜய நகரமன்னர் அச்சுதராயன் உதவியினால் மார்த்தாண்டனை வென்று மீண்டும் தென்காசியைக் கைப்பற்றினான். பாண்டிய இராச்சிய தாபனாச்சாரியன் என இவன் வழங்கப்பட்டான். இவன் ஆட்சிக்காலம் கி.பி. 1534 முதல் 1543 வரை என்று ஆய்வாளர் கருதுவர். எனினும் நெல்லையப்பர் கோயிலில் கொல்லம் 721 ஆம் ஆண்டு கல்வெட்டும் திருப்புடை மருதூர் கோயிலில் கொல்லம் 722 ஆம் ஆண்டு கல்வெட்டும் மார்த்தாண்டனுடையது என்பதால் தென்காசிப் பாண்டியனை மீண்டும் வென்று, மார்த்தாண்டான் தென்பாண்டி நாட்டை ஆண்டான் என்று கருத வேண்டி உள்ளது.

**அகரசீர்மை:**

வீர மார்த்தாண்டன் களக்காட்டில் புதிய அகரம் தோற்றுவித்ததுடன் புதிய அரண்மனையும் ஏற்படுத்துகிறான். நம் பேரால் வைத்த அகரசீர்மை என்றே இவன் குறிப்பிடுகிறான். வீரமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்ற பெயரில் ஊர், வீரமார்த்தாண்டன் மடம், வீர மார்த்தாண்டன் சந்தி ஆகியவை ஏற்படுத்தப்படுகின்றன.

**பராக்கிரம பாண்டியன்:**

உதைய மார்த்தாண்ட வர்மன் சிறைவாய் மூத்தவர் என்பதும் திருப்பாப்பூர் மூத்தவர் என்பதும் வீர மார்த்தாண்டனையே குறிப்பிடும். கொல்லம் 707 ஆம் ஆண்டைச் சேர்ந்த தென்காசிக் கல்வெட்டு ஒன்று வீரமார்த்தாண்ட

பராக்கிரம பாண்டியன் ஒருவனைக் குறிப்பிடுகிறது. கல்லிடைக் குறிச்சியில் உள்ள குலசேகரப்பெருமாள் கோயில் கல்வெட்டு, கொல்லம் எழுநூற்றுஎழில் கூடியது. இக்கல் வெட்டு வீர உதைய மார்த்தாண்டனைக் குறிப்பதால் இரண்டில் வருபவரும் ஒருவர் எனலாம். தென்காசியில் வேறொரு கல்வெட்டு. பராக்கிரம பாண்டியன் கட்டிய கோயிலுக்கு உதைய மார்த்தாண்டன் திருப்பணி செய்ததைக் குறிக்கிறது. இதுவும் கொல்லம் 707 என்பதைக் குறிப்பிட வேண்டும். நெல்லையப்பர் கோயிலில் கொல்லம் 721 ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று, சங்கிலி வீர மார்த்தாண்டன் சிறைவாய் மூத்தவர் என்ற மன்னனைக் குறிப்பிடுகிறது. இவனும் மேலே கூறிய உதைய மார்த்தாண்டவர்மன் எனலாம்.

**செண்பக ராமன்:**

உதைய மார்த்தாண்டனுக்குச் செண்பகராமன் என்ற பெயருண்டென மத்திய அரசு கல்வெட்டுத்துறை கருத, செந்தில் செல்வகுமார் இதை மறுக்கிறார். இராமவர்மன் என்பவர் பெயரே செண்பகராமன் என்று குறிப்பிடுகிறார். செண்பகராம நல்லூர் பெருமாள் கோயில் கல்வெட்டுகள் இரண்டை இதற்குச் சான்றாகப் பயன்படுத்துகிறார். உதைய மார்த்தாண்டன் கல்வெட்டில் (கொல்லம் 703) ஜெகன்னா தப் பெருமாள் என்று இறைவனைச் சுட்ட இராம வர்மன் கல்வெட்டில் (கொல்லம் 720) செண்பகராமன் விண்ணகராழ் வார் என்றுபெயர் உள்ளதாகக் கூறி, மார்த்தாண்டனுக்கு செண்பகரான் என்ற பெயர் இல்லை என்கிறார். வெவ்வேறு காலம் என்பதால் வெவ்வேறு கோயில்களை இக்கல்வெட்டுகள் குறிக்கக்கூடும் அன்றோ? ஒரே ஊரில் ஏன் ஒரே கோயிலி லேயே பல சிறு கோயில்கள் இருப்பதுண்டு அன்றோ?

**பள்ளக்கால்:**

பள்ளக்காலில் உள்ள கல்வெட்டு, உதையமார்த்தாண்ட விண்ணகராழ்வார் பெருமாள்கோயில் விழாக்களுக்கும் வழி பாட்டிற்குமாகச் 'செண்பகராமன் சந்தி' ஏற்படுத்தியதைக் குறிப்பிடுகிறது.

**சதுர்வேதி மங்கலம்:**

இவனுக்குக் களக்காடு, வடசேரி, தென்காசி, என மூன்று அரண்மனைகள் இருந்துள்ளன. களக்காடு மட்டும் புதிதாகும். மன்னன் மக்களின் நன்மைக்காகவும் கோயில் வழிபாடு சிறக்கவும் வேண்டி பல்வேறு முகாம்களில் இருந்தே ஆணை பிறப்பித்துள்ளான். திருக்கரூர் கோயிலில், வள்ளியூர் சைவ சிகாமணி பட்டர் வீட்டில், சுசீந்திரம் கோயிலில் இருந்தெல்லாம் ஆணை வழங்கியுள்ளான் என்று கல்வெட்டுகள மூலம் அறிகிறோம். களக்காட்டில் தன் பெயரில் ஊர் அமைத்தது போல, அம்பா சமுத்திரம் பள்ளக்கால் என்ற ஊரில் உதைய மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் ஏற்படுத்தி உள்ளான். சந்தி ஒன்றை நரசிங்க மங்கலத்து தங்கச்சி நம்பி வீர கேரளவாட்டி ஏற்படுத்தி உள்ளார்.

**உதைய மார்த்தாண்ட விநாயகர்:**

பள்ளக்கால் இறைவன் பெயர் உதைய மார்த்தாண்ட விண்ணகராழ்வார் என்று கல்வெட்டு மூலம் அறிகிறோம். அம்பையில் வீர மார்த்தாண்டேஸ்வரமுடையார் கோயில் தாபிக்கப்பட்டது.

மேலும் களக்காட்டில் வீர மார்த்தாண்டப் பிள்ளையாரும் சுசீந்திரத்தில் உதைய மார்த்தாண்ட விநாயகரும் இவரால் தாபிக்கப்பட்டனர் எனலாம்.

ஸ்ரீவில்லிபுத்தூரிலும் நலுக்கலிலும் இவன் பெயரில் மடங்கள் ஏற்பட்டன. பிரம்மதேசத்தில் இருந்த வேப்பங்குளம், வீரமார்த்தாண்ட பேரேரி என வழங்கப்பட்டது.

**அறுபத்து மூவர்:**

களக்காடு, பள்ளக்கால், தென்காசி, குற்றாலம் ஆகிய கோயில்களுக்குத் தானம் புரிந்த மார்த்தாண்டன் நெல்லையப்பர் கோயிலில் அறுபத்து மூவர் திருமேனிகளை செய்து வைத்துள்ளான். மகா மண்டபத்தில் இசைத்தூண் மண்டபத்தை உருவாக்கியுள்ளான்.

**வீரமார்த்தாண்டன் மடம்:**

ஸ்ரீவில்லிபுத்தூரில் வீர மார்த்தாண்டன் சந்தி ஏற்படுத்தியதுடன் வீரமார்த்தாண்டன் மடம் ஏற்படுத்தியதை முன்பே கண்டோம். இம்மடத்தில் 33 பிராமணர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. நெல்லை ஒட்டிய பெரும் பகுதியைச் சுமார் 46 ஆண்டுகள் ஆண்ட மார்த்தாண்டன் கல்லிடைக்குறிச்சியிலும் தன் பங்கினைச் செலுத்தியுள்ளான் என்றால் மிகையில்லை. சங்கர நாராயணனை வென்று மண்கொண்ட பூதவீர வீரஉதைய மார்த்தாண்டன் என இவன் முழுப் பெயரையும் கல்லிடைக் குறிச்சிக் கல்வெட்டு கூறுகிறது. அம்பா சமுத்திரம் கல்வெட்டும் கூறுகிறது.

**கவீரமடம்:**

அம்பா சமுத்திரத்தில் உள்ள திருப்போத்தீச்சுரமுடைய நாயனார் எரிச்சா உடைய நாயனார், கரிய மாணிக்க ஆழ்வார் என ஒரே நேரத்தில் மூன்று கோயில்களுக்கும் தனி நபர்களுக்கும் வெவ்வேறு ஊர்களில் இருந்து கொண்டு தானம் அளித்துள்ளான். வடசேரியில் இருந்த போது, செண்பகராம நல்லூரில் முகாமிட்ட போது, களக்காட்டில் இருந்த போது தானங்கள் புரிந்துள்ளான். செண்பகராம நல்லூரில் இருந்தபோது பூதல வீர வீர ராம கவீர மடத்தின் குருவாகிய ஆனந்த கூத்த முதலியாருக்கு மடத்தின் சகல உரிமைகளையும் வழங்கியுள்ளான். காலம் கி.பி. 1545 ஆகும்.

**ஏழு குளங்கள்:**

1522–23 ஆம் ஆண்டில் பூதல வீர உதைய மார்த்தாண்டவர்மன் 7 குளங்களுடன் நிலங்களை மன்னார் கோயில் என்ற ஊரில் உள்ள மன்னார் கோயிலுக்கு அளித்துள்ளான். பாசிக் குளம், கீழையாரைக்குளம், மேலையாரைக்குளம், சடக்கிக் குளம், சுமைதாங்கிகுளம், செண்டலங்காரப் பேரேரி, திருவரங்கப் பேரேரி ஆகியவையே அக்குளங்களாகும்.

**தேவரடியார்:**

கி.பி.1546இல் கல்விடைக் குறிச்சி வந்த மன்னன் மார்த்தாண்டன், திருக்குருகூர் நாகம்மை மற்றும் அவர் வாரிசுகளுக்குத் தானம் தந்து பதினொன்றாவது குடியாக அமர்த்தினான். கி.பி.1587இல் கோயில் பணிக்கு இரு தேவரடியார்களை மன்னன் நியமித்துள்ளான்.

**அம்பா சமுத்திரம்:**

பாண்டிய நாட்டிற்கும் சேர நாட்டிற்கும் இடையில் பாண்டிய நாட்டின் வளமிக்கப் பகுதி, அம்பா சமுத்திரம் வட்டம் எனலாம். இவ்வட்டத்தில் உள்ள பல கோயில்களில் பாண்டியர் கல்வெட்டுகளுடன் சேரர் கல்வெட்டுகளும் உள்ளன. சில கல்வெட்டுகளைக் காண்போம்.

**செண்டலங்கார தாசன்:**

மன்னார் கோயிலில் உள்ள குலசேகர தேவனுடைய 13 ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டு, பலை மண்டலத்து முல்லைப் பள்ளி வாசுதேவன் கேசவனான செண்டலங்கார தாசன் என்பவர் குலசேகரப் பெருமாளை எழுந்தருளிவித்தார். குலசேகரப் பாண்டியன் சேர இளவரசியை மணந்தவன். எனவே சேர நாட்டைச் சேர்ந்தவர் கோயில் எடுத்துள்ளார். காலம் பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கமாகும். செண்டலங்கார மாமுனி ஒருவரும் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளார். சோழரும் பாண்டியரும் வீழ்ச்சியுற்ற போது முஸ்லீம்கள் தமிழ்நாட்டில் தாக்குதல் நடத்தினர். அப்போது இரவி குலவர்மன் குலசேகரன் என்ற சேர மன்னன் காஞ்சிபுரம் வரை சென்று தம்மைச் சக்கரவர்த்தி என அழைத்துக் கொண்டதுடன் கல்வெட்டுகள் சிலவும் வெட்டி வைத்துள்ளான். இவன் கி.பி. 1314 இல் இறந்து போனான். இவனுக்குப் பின் வந்த சில மன்னர்களின் கல்வெட்டுகள் அம்பா சமுத்திரம் வட்டத்தில் பல ஊர்களில் உள்ளன.

**களக்காடு:**

கி.பி.15 ஆம் நூற்றாண்டில் களக்காடு அல்லது செயதுங்க நாட்டைத் தலைநகராகக் கொண்டு இவர்கள் ஆண்டுள்ளனர்.

நறும்பூங்கொண்டான் தண்டயர் காலம் அழகியான் வீர கேரளன் விருதராயம் கல்வெட்டொன்று மன்னார் கோயிலில் உள்ளது. காலம் கி.பி. 1506 ஆகும். கி.பி.1512 ஆம் ஆண்டில் சீவல தேவனாகிய பட்டிராயன் வேளாக்குறிச்சியில் முகாமிட்டு மன்னார் கோயிலுக்கு நன்கொடை அளித்துள்ளான். பூதல வீர உதைய மார்த்தாண்ட வர்மன் என்ற பெயரில் சில சேர மன்னர்கள் இருந்துள்ளார்கள். அம்பாசமுத்திரம் வட்டம் மட்டுமின்றித் தென்காசி, சேரன்மாதேவி, நெல்லை வட்டங்களிலும் இவர்களுடைய கல்வெட்டுகள் உள்ளன. பூதல வீர உதைய மார்த்தாண்ட வர்மர் சிலரையாவது அறிந்து கொள்வது பயனுடையதாகும். குலசேகரமுடையார் கோயில் வரலாற்றில் ஓரளவு இவர்கள் வரலாறு பார்த்தோம்.

**அய்யாக்குட்டி:**

கி.பி.1523 இல் பூத வீர மார்த்தாண்ட வர்மன், களக்காட்டில் இருந்த போது அய்யாக்குட்டி என்ற நாட்டியப் பெண்ணைக் கோயிலுக்கு நியமித்து அவளுக்கு மனையும் நிலமும் வழங்கியுள்ளான்.

**சேர நாட்டவர்:**

கி.பி.1558 இல் வெட்டப்பட்ட ஒரு கல்வெட்டு வென்று மாலையிட்ட பெருமாள், பேராயிரமுடையான், அனந்தன் கிருஷ்ணன் ஆகியோர்களைக் குறிப்பிடுகின்றது. இவர்கள் சேர நாட்டவர் என்று நாம் யூகிக்கலாம். கி.பி. 1567 இல் மண்ணப் பிள்ளை மற்றும் மாத்த பணிக்கர் இருவர் மன்னார் கோயில் குலசேகர ஆழ்வார் கோயிலுக்கு 150 கோட்டை நெல் வழங்கியுள்ளனர். இவர்களும் கேரள நாட்டவர் என்பதில் ஐயமில்லை.

**சோழகுல வல்லிபுரம்:**

வீர உதைய மார்த்தாண்டவர்மன் அகர சீமையாகிய களக்காட்டில் சோழ குல வல்லிபுரத்தில் முகாமிட்ட போது ஆய்குட்டி மற்றும் சிலரையும் மன்னார் கோயில் என்ற ஊரில் ஒன்பதாவது குடியாக அமர்த்தித் தானம் தந்துள்ளார்.

**நாகர்கோவில்:**

கி.பி. 1488 ஆம் ஆண்டைச் சேர்ந்த நாகர்கோவில் வடிவீசுவரம் அழகம்மன் கோயில் கல்வெட்டு ஒன்று திருவிதாங்கூர் மன்னன் தண்பொருந்தக்கரைக் கல்லிடைக்குறிச்சி 23 ஆம் பண்ணை, திருவேங்கடமுடையான் வீட்டில் தங்கி இருந்த போது தேரூர் எனப்பட்ட அழகிய சோழ நல்லூர் நிலத்தை வடிவீசுவரம் கோயிலுக்குத் தானமாக அளித்தான் என்று கூறுகிறது. ஆகத் திருவிதாங்கூர் மன்னர் சிலர் கல்லிடைக் குறிச்சியில் இருந்து ஆணை பிறப்பித்துள்ளார்கள்.

**கோனேரியப்ப முதலியார்:**

தானகோனரியப்ப முதலியார் என்பவர் திருவிதாங்கூர் மன்னர் இராஜா ரவிவர்மன் காலத்தில் படைத் தளபதியாக இருந்துள்ளார். மதுரை திருமலை நாயக்க மன்னன் மைசூரை யாண்ட கந்தர்வ நரசிம்மனுடன் போரிட வேண்டிய சூழ்நிலையில் திருவிதாங்கூர் மன்னர் உதவியை நாடினார். இரவிவர்மன், படைத் தலைவர் தானகோனரியப்ப முதலியாரை அனுப்பி வைத்ததாக அறிகிறோம். கரூர் அருகே பெரிய மஞ்சுவெளி என்ற கிராமத்தில் போர் நடைபெற்றது. மன்னர் திருமலை நாயக்கர் வெற்றி பெற்றார். இவ்வெற்றிக்காகத் திருமலை நாயக்கர். கோனேரியப்ப முதலியாருக்கு 16 கிராமங்களைத் தானமாக வழங்கினார். கி.பி. 1656 இல் இது நிகழ்ந்தது. கோனேரியப்ப முதலியார் இத்தானத்தைச் செம்மையாக நிறைவேற்ற வேண்டி, திருவாவடுதுறை ஆதீனத்திற்குக் கட்டளையாக வழங்கினார்.

**சொக்கலிங்க முதலியார்:**

வடமலையப்ப பிள்ளை என்பவர் திருமலை நாயக்கர் காலத்தில் நெல்லையில் இருந்து பல கோயில்களைப் புதுப்பித்து, பாதுகாத்ததைப் பல கல்வெட்டுகளில் காண்கிறோம். கோனேரியப்ப முதலியாரும் அவ்வாறே இருந்துள்ளார். இவருடைய குமாரர் சொக்கலிங்க முதலியார் திருவாவடுதுறை நமசிவாய குருமகானுக்குச் சமாதி எழுப்பியுள்ளார். கிளை மடம் கட்டி உள்ளதை ஒரு கல்வெட்டு உணர்த்துகிறது.

**சொக்கப்ப முதலியார்:**

திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள செப்பேடுகளில் ராம தேவராயர் செப்பேட்டின் இறுதியில் சொக்கப்ப முதலியார் தர்மம் என்று பொறிக்கப்பட்டுள்ளது. காலம் கி.பி. 1690. இதே காலத்தைச் சேர்ந்த வேறோர் செப்பேட்டிலும் சொக்கப்ப முதலியார் இடம் பெறுகிறார். இரு செப்பேடுகளும் திருவீழி மிழலை சிவன் கோயிலுக்குச் சோழ நாட்டின் பல ஊர்களில நிலங்கள் வழங்கப்பட்ட தானமும் அர்த்த சாம பூசைக்கு ஏற்பாடு செய்த கட்டளையையும் குறிப்பிடுகின்றன. சொக்கப்ப முதலியாரைக் குறிப்பிடும் போது 'ராசஸ்ரீ' என்ற அடை மொழியுடன் குறிப்பிடுவதால் இவர் படைத் தளபதி யாகவோ அரசு அதிகாரியாகவோ இருந்திருக்க வேண்டும் என்று உறுதியாகக் கூறலாம். திருவாவடுதுறை பத்தாவது குரு மகான் வேலப்பதேசிகர் (1678-1700) காலத்தில் இவர் இத்தானம் புரிந்துள்ளார் எனலாம். தானகோனேரியப்ப முதலியாரின் மகன் சொக்கலிங்க முதலியாரும் இந்தச் சொக்கப்ப முதலியாரும் ஒருவராகவே இருக்க வேண்டும். பத்தாவது சன்னிதானம் வேலப்பதேசிகர், சங்கர நாராயணர் கோவிலில் சிவபரிபூரணமடைந்தவர் ஆவர்.

**மார்த்தாண்ட வர்மன்:**

திருவிதாங்கூர் மன்னன் மார்த்தாண்டவர்மன் என்பவன் தன் நாட்டை விரிவுபடுத்தும் நோக்கில் இருந்தான். இதனால் சிற்றரசுகள் எதிர்த்தன. இராமப்பையன் கலகத்தை அடக்க வந்திருந்தான். மார்த்தாண்டவர்மனுக்கு உதவி செய்வதாகக் கூறிய ஹைதர் ஹலி வரவே இல்லை. போர்ச்செலவுகளை ஈடுகட்ட இறந்தவருக்கும் சேர மன்னர் வரி விதித்தனர். வரி கொடுக்க முடியாதவர் நெல்லைச் சீமைக்குக் குடி பெயர்ந்தனர். அரசோ ஏழைகளைச் சுரண்டியது.

**பலராமவர்மன்:**

கி.பி.1807-1808 ஆம் ஆண்டில் பலராமவர்மன் என்பவர் திருவிதாங்கூரை ஆண்ட போது நாடார்களிடமும் ஈழவர் களிடமிருந்தும் தலை வரியாக 80,044 ரூபாய் வாங்கியுள்ளார்.

மற்ற சாதியாரிடமிருந்து 4,623 மட்டுமே தலைவரி வசூலிக்கப் பட்டது. கள் இறக்கும் மரங்களுக்கும் அரசு, 'பாட்டம்' என்ற வரியை விதித்தது. இதன் மூலம் 18523 ரூபாய் வசூலிக்கப் பட்டது.

**வைகுண்டசாமி:**

இக்காலத்தில் வைகுண்டசாமி (1809–1851) முத்துக்குட்டி சுவாமி போன்றோர் திருவிதாங்கூர் அரசுக்கு எதிராகப் பாடிய பாடல்கள் பலவாகும். அதில் ஒரு பாடல் வருமாறு:

தாலிக்கு வாயம் சருகு முதலாயம்
காலிக்கு வாயம் கம்புதடிக் காயம்
தாலமதோறும் சான்றோரிக் காயம்
தாலமுடன் அரிவாள் தூருவட்டிக் காயம்
தாலமதுக் காயம் தரணிதணிலே வளர்ந்த
ஆலமரம் வரைக்கும் அதிகயிறை வைத்தனனே.
வட்டிக்கு மாயம் வலங்கை சான்றோர் கருப்புக்
கட்டிக்கு மாயம் கருநீசன் வைத்தானே·

இப்பாடல் மூலம் நாடார்களே வலங்கைச் சான்றோர் என்றும் அறிகிறோம்.

**ஆதித்தவர்மன்:**

கல்லிடைக் குறிச்சி பெருமாள் கோயிலுக்கும் திருவனந்த புரம் பத்மநாபர் கோயிலுக்கும் இடையேயுள்ள தொடர்பினை அறிவதற்கு ஆதித்த வர்மன் கால வரலாற்றை அறிய வேண்டியுள்ளது. இம்மன்னன் கொல்லம், திருவனந்தபுரம், குமரி மாவட்டம், நெல்லை ஆகிய பகுதிகளை ஆண்டுள்ளான் தென்காசி மட்டும் பாண்டியர் பிடியில் இருந்துள்ளது. இவன் ஆட்சிக் காலம் கி.பி. 1469 முதல் 1484 வரை ஆகும். இவன் கொல்லத்தில் அக்கிரஹாரம் ஒன்றை உருவாக்கினான். அதில் தன் பெயரில் செண்பகராமன் தெரு ஒன்றை ஏற்படுத்தினான். அஞ்சினான் புகலிடம் ஒன்றையும் உருவாக்கினான். கி.பி. 1469 இல் திருக்குறுங்குடி என்ற ஊரில் பெரிய மணி ஒன்றை

வழங்கியுள்ளான். தென் வஞ்சியின் அரசன் என்ற பெயரும் இவனுக்குண்டு. இவன் கல்லிடைக் குறிச்சியில் இருந்தும் நாடாண்டுள்ளான் எனலாம். கொல்லம் 653 ஆம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி. 1478) இவனுடையது ஆகும்.

**மேல் சேவல்:**

மேல் சேவல் கிராமத்தில் உள்ள ஆதித்த வர்மேஸ்வரம் கோயிலில் இவன் உருவம் தாங்கிய சிற்பம் ஒன்று பிரகாரத்தில் உள்ளதாக அறியப்படுகிறது. இவ்வூரும் கல்லிடைக் குறிச்சி போல் வரலாற்றுச் சிறப்புடையது. ஆதித்த வர்மேஸ்வரம் கோயில், புதுப்பித்துக் கட்டப்பட்ட பழைய கோயில். முதலில் சுந்தர பாண்டியன் என்ற பாண்டிய மன்னனால் கட்டப்பட்டது. முஸ்லீம்களால் சேதமாக்கப்பட்ட பின் மீண்டும் மன்னன் ஆதித்த வர்மன் புதுப்பித்துக் கட்ட உத்தர விடுகிறான். கோயில் கட்டி முடியும் முன், மன்னன் இறந்து விடுகிறான். எனவே அவனுக்குப் பின் நாட்டையாண்டவர் அவன் பெயரில் கோயில் உருவாக்கி அவன் சிலையையும் நிறுவுகின்றனர். இந்த ஈஸ்வரன் கோயிலுக்குள் வீரகேரளப் பெருமாள் என்ற விஷ்ணு கோயிலும் நிலா சுந்தரி நாச்சியார் என்ற அம்மன் கோயிலும் வீர கேரளப் பிள்ளையார் என்ற கிருஷ்ணர் கோயிலும் உள்ளன.

**திருவம்பாடி பிள்ளையார்:**

திருவனந்தபுரத்து பத்மநாபர் கோயிலுக்குள் உள்ள கிருஷ்ணருக்குத் திருவம்பாடி பிள்ளையார் என்ற பெயர் உண்டு. முருகனுக்கு இளைய பிள்ளையார் என்ற பெயர் இருப்பதை நாம் அறிவோம். எனவே வீரகேரளப் பிள்ளை யாரும் கிருஷ்ணர் தான் எனலாம்.

**வராகர் தெரு:**

ஆதித்த வர்மன் கல்லிடைக் குறிச்சியில் ஆதிவராகர் கோயிலையும் விரிவுபடுத்தியுள்ளான். பிற்காலத்தில் திருவனந்த புரத்தில் கட்டப்பட்ட வராகர் கோயில் கல்லிடைக் குறிச்சி வராகர் கோயில் போல் உள்ளது. கல்லிடைக் குறிச்சியில் ஸ்ரீ வராகர் தெரு இருப்பது போன்றே திருவனந்தபுரத்திலும்

கோயிலுக்குப் பின் ஒரு ஸ்ரீவராகர் தெரு உள்ளது. ஆதித்த வர்மன் கல்லிடைக் குறிச்சி அரண்மனையில் வாழ்ந்த காலத்தில் திருவனந்தபுரத்திலும் வராகர் கோயில் எடுத்திருக்க வேண்டும். கல்லிடைக் குறிச்சி ஆதிவராகர் கோயிலுக்குரிய 'தந்த பல்லக்கு' ஒன்று, இம்மன்னன் அளித்ததாக நம்பப் படுகிறது.

**கரந்தையார் பாளையம்:**

கல்லிடைக் குறிச்சி பதினெட்டு அக்கிரகாரங்களை உடைய ஊராக இருந்துள்ளது. கரந்தையார் பாளையம் என்ற சமூக அமைப்பு சமீப காலம் வரை இருந்துள்ளது. இது மேற் குறிப்பிட்ட 18 அக்கிரகாரத்து பிரதிநிதிகளும் அடங்கிய சபையாகும். இப்பிராமணர் சபை கேரளம், இலங்கை போன்ற ஊர்களுடன் வியாபாரம் செய்து வந்த பிராமணர் களுக்கு உதவுவதற்காக ஏற்பட்ட சபையாகும். ஆரியங் குணவாய் வழியாகப் பெரிய வண்டிகளில் பொருட்களைக் கேரளாவிற்கு எடுத்துச் சென்றனர். வழிப்பறியிலிருந்து மீட்க ஆயுதம் தாங்கிய காவலர்களையும் உடன் அழைத்துச் சென்றுள்ளனர். ஆங்காங்கே சத்திரம் அமைத்தனர். அதையும் கரந்தையார் பாளையம் சமூகம் பராமரித்து வந்தது. கல்லிடைக்குறிச்சியைத் திருநெல்வேலி செட்டிநாடு என்றும் கூறுவதுண்டு. கைத்தறி துணியை விலைக்கு வாங்கி கேரளாவில் விற்று வந்தனர். இன்றும் கல்லிடைக் குறிச்சி அப்பளம் பெயர் போனதாகும்.

**முத்துசாமி தீட்சதர்:**

முத்துசாமி தீக்ஷதர் என்பவர் எட்டையபுரத்திற்கு வந்து குடியேறுமுன் கல்லிடைக் குறிச்சியில் இருந்திருக்க வேண்டும் என அறிஞர் கருதுகின்றனர். வ.வே.சு அய்யர், பாரதியார் வாஞ்சிநாதன் ஆகியோர் இவ்வூரில் கூடி விடுதலை போராட்டத் திட்டங்களைத் தீட்டியுள்ளனர்.

**சிருங்கேரி மடமும் சிங்கம்பட்டி ஜமீனும்:**

கல்லிடைக் குறிச்சிக்கும் சிருங்கேரி மடத்துக்கும் நெருங்கிய உறவு இருந்துள்ளது. கல்லிடைக்குறிச்சிக்கு அருகில் உள்ள

சிங்கம்பட்டி ஜமின்தார் சிருங்கேரி மடத்துப் பெரியவர்களுடன் பெருமதிப்பு வைத்திருந்தனர். ஒரு சிங்கம்பட்டி அரசருக்குப் பிள்ளைச் செல்வம் நீண்ட நாளாக இல்லை. தனக்கு மகன் பிறந்தால் ஸ்ரீ சச்சிதானந்த அபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளைப் பல்லக்கில் பாண தீர்த்தம் வரை தானே தூக்கி வருவதாக வேண்டிக் கொண்டாராம். ஆண் குழந்தை பிறக்கவே முன் கூறியபடி சுவாமிகள் கல்லிடைக் குறிச்சி வந்த போது தாமே பல்லக்கில் தூக்கிச் சென்றாராம். அப்போது எடுத்த நிழற்படம், இன்றும் சிங்கம்பட்டி ஜமீன் மரபிடம் உள்ளது. ராஜா முருகதாச தீர்த்தபதி அப்படத்தைக் கண்ணாடிச்சட்டம் போட்டு பாதுகாப்பாக இன்றும் வைத்துள்ளார்.

**புதிய கட்டிடம்:**

கல்லிடைக்குறிச்சியில் இராமச்சந்திராபுரம் என்ற பகுதியில் இந்தியா சிமெண்ட்ஸ் அதிபர்கள் அழகிய கட்டிடம் ஒன்றைக் கட்டி அதனைச் சிருங்கேரி மடத்திற்கு அளித்துள்ளார்கள்.

**முதலியப்பபுரம்:**

கல்லிடைக் குறிச்சியில் வீரப்பபுரம் தெரு பெரிதாகவும் நீளமாகவும் உள்ளது. தொழில் அதிபர்கள் கே ஆர். சுந்தரம் அய்யர், கே.ஆர். ஈஸ்வர அய்யர் ஆகியோர் வீடுகள் இங்கே உள்ளன. இத்தெருவின் நடுவில் ஒரு மண்டபம் உள்ளது. வீரப்ப நாயக்கன் என்ற மன்னன் கட்டியதாக ஊர் மக்கள் கூறுகின்றனர். முதலியப்பபுரம் அக்கிரகாரம், அரியநாயக முதலியார் அவர்களாலும் திம்மராஜபுரம் அக்கிரகாரம் சாளுவ சேனாதிபதி திம்மண்ணர் ஞாபகமாகவும் ஏற்பட்டது என்றும் மக்கள் கூறுகிறார்கள். ஆயின் கி.பி. 1490 இல் வெட்டப்பட்ட இலட்சுமண நரசிம்மர்கோயில் கல்வெட்டில் திம்மண்ண பட்டர்பெயர் உள்ளது. எனவே இவர் பெயரில் திம்மராஜபுரம் ஏற்பட்டது என்றும் கூறலாம்.

**ஐயா சுவாமிகள்**

பண்டரிபுர பஜனை பத்ததியை ஏற்படுத்தி பக்தி நெறியை நிலை நாட்டின ஐயா சுவாமிகள், இங்கே ஆடி அமாவாசை தோறும் பாண தீர்த்தத்தில் கூடாரங்கள் அமைத்து அன்ன தான தர்மம் செய்து வந்துள்ளார். இசை மேதை கிருஷ்ணய் யரும் இவ்வூரில் இருந்துள்ளார் என்பதை மறந்துவிட முடியாது.

**திலகர்**

தாமிரபரணி ஆற்றங்கரை அருகில் ஆயிரங்கால் மண்டபத்தில் சங்கர சாஸ்திரியார் தலைமையில் நீண்ட காலம் சமஸ்கிருத கல்வி கற்பிக்கப் பட்டதாகத் தெரிகிறது. 1921 இல்பால கங்காதர திலகர் இவ்வூருக்கு வந்துள்ளார். அவர் பெயரில் ஏற்படுத்தப்பட்ட பள்ளி ஆங்கிலேயர் காலத்தில் அங்கீகாரம் கிடைக்காமல் மூடப்பட்டு பின் 1945க்குப் பின் இயங்கிவருகிறது.

**செங்குந்த முதலியார்:**

பிராமணர் மட்டுமின்றிச் செங்குந்த முதலியார் இனத்த வரும் கல்லிடைக் குறிச்சி கோயில்களுடன் நெருங்கிய பிணைப்புக் கொண்டுள்ளார்கள். குறிப்பாக அகத்தியர் கோயில், பகழிக் கூத்தர் கோயில் இச்சமூகத்தவர் கோயில்கள் எனலாம். கல்லிடைக் குறிச்சி செங்குந்தர்கள் நெய்யும் வேட்டிகள் துண்டுகள், பிரசித்திப் பெற்றவையாகும்.

**நுழைவாயில்:**

கல்லிடைக் குறிச்சி இலக்குமிவராகர் பெருமாள் கோயில் வாயில், இருதிண்ணைகளுடன் மண்டபமாக உள்ளது. வாயில் விதானத்தில் இலக்குமி வராகர், சிதேவி, பூதேவி, பாம்பணையில் பள்ளி கொண்ட பெருமாள், கருடன் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

**சிற்பங்கள்:**

இராமர், இலக்குமணன், அனுமன், நின்ற நிலையில் திருமால், மற்றும் மூலவர் சிற்பங்கள் இங்கே உள்ளன. ஆதிவராகர் கோயில், வாயில், கதவுகளில் உள்ள குமிழ்களில் தாமரையின் இதழ்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு உயிரின வடிவத்தில் சுழலும் தன்மையுடன் அமைக்கப்பட்டிருப்பது சிறப்பாகும். ஒவ்வொரு குமிழும் ஒவ்வொரு விதத்தில் அமைந்துள்ளது. கதவுகளில் இராமாயணக் காட்சிகள் செதுக்கப்பட்டுள்ளன. கதவுகளின் இருபுறங்களிலும் கருடன் மீது அமர்ந்த வராகர் சிற்பங்கள் உள்ளன. கண்ணாடியில் பொட்டு வைக்கும் பெண், அருகில் ஆடவர், இலக்குமி நரசிம்மமூர்த்தி போன்ற சிற்பங்களும் உள்ளன.

**கருடக்கொடி:**

கோயில் உள்ளே நுழைந்ததும் கருடக்கொடி மரம் நம்மை வரவேற்கிறது. மணிமண்டபத்தில் உற்சவர் இலக்குமி வராகர் தம்பதியினர், நீளாதேவி, பூமாதேவி சகிதமாகக் காட்சியளிக்கின்றனர்.

**பெருமான் அமைப்பு:**

கருவறையில் வராகர், பூதேவி சகிதமாக இருக்கின்றார். பீடத்திலிருந்து மூன்றடி உயரம் இருக்கும். அழகான கோயில். கருவறை துப்புறவாகவும் உள்ளது. வழக்கம் போல் இடக்காலை மடித்து, வலக்காலைத் தொடங்கவிட நிலையில் சுகாசன நிலையில் பெருமான் உள்ளார். இடது மடியில் பூதேவியை வைத்துக் கொண்டுள்ளார்.

பெருமானுக்கு நான்கு திருக்கரங்கள். பின்னிருகரங்கள் சங்கு சக்கரம ஏந்தியுள்ளன. இடது முன்கை தேவியின் இடையைப் பரிவுடன் பற்றிக் கொண்டிருக்கிறது. முன்புற வலக்கை அன்னையின் முழங்கால்களை ஆதரவுடன் அணைத்துக் கொண்டிருக்கிறது. தேவியின் பாதங்களுக்குக் கீழே தாமரை மலர்ந்திருக்கிறது. அம்மனுக்கு இருகரங்கள் வழக்க

மாக உருவ அமைப்புடன் அம்மை உள்ளார். வராகமுகத்துடன் உள்ள பெருமானின் மார்பிலே கழுத்தணிகளும் முப்புரி நூலும் உள்ளன. கரிய நிறத்தில் வராகமுகம் உள்ளது தீச்சுடர் போன்ற விழிகள். பொன் முடியும் யாகப் பிரியனான பெருமானின், யாக அங்கங்களாகவே தோன்றுகின்றன.

**பாகவதம்:**

ஆதிவராகர் வருக்கக் கோவை 92 ஆம் பாடலில் ''ஆதிவராகர் மலைய மதில் யாகத்தில் பிரியார் பொன்னின்'' என்ற வரி வருகிறது. வராகப் பெருமான் யாகத்தின் திரு உருவமாக உள்ளார். நான்கு வேதங்களும் இவரின் நான்கு சரண கமலங்களாகும். யூபஸ்தவிகள் இவரின் கோரைப் பற்களாகும். யக்ய அவிசுகள் கொள்ளும் இடம் தான் தந்தங்களாகும். நமஸ்தானங்களே இவரின் திருமுகம். ஏமாக்கினியே இவரின் நாக்கு. தருப்பைப்புற்கள் இவரின் திருக்கண்கள். பிரதான பிரணவம், இவருடைய திருமுடி. இப்படி யக்ஞ பாத்திரங்கள் வராக மூர்த்தியின் அவயங்களாகப் பாகவதம் என்ற நூல் வருணிக்கிறது. இவர் எப்படி யக்ஞ ரூபியானார்? என்பதைத் தலபுராணம் விளக்குகிறது.

**தலபுராணச் செய்திகள் :**

யாகபூமியாம் கல்லிடைக் குறிச்சியில் அசுவமேதம் என்ற மகா யக்ஞம் நடந்திருக்கிறது. மத்ஸ்ய புராணத்தில் தாம்பிரபரணி மகாத்மியத்தில் 13 ஆவது அத்தியாயத்தில் இது பற்றிய செய்திகள் உள்ளன. அப்புராணத்தில் மலைய பர்வதத்திற்குக் கீழ்ப் பாகத்தில் அரையோசனை தூரத்தில் உள்ள சிலசாலிபுரம் என்ற கல்லிடைக்குறிச்சி குறிக்கப்படுகிறது.

இந்தச் சிலசாலி புரத்திலே விஷ்ணுதர்மன் என்ற அரசன் நாடாண்டு வந்தான். தர்மம் செய்வதில் இவன் ஈடுபாடுடையவன். வேதங்களைக் கற்றுணர்ந்தவன். ஒரு சமயம் பெரும் பொருட் செலவில் யாகத்தைச் செய்ய ஆரம்பித்தான். இவனுடைய பக்திக்குக் கட்டுப்பட்டு பிரம்மா தன் குமாரர்களுடனும், மகேஸ்வரன் தன் நண்பனான குபேரனுடனும், தேவேந்திரன் எல்லாத் தேவகணங்களுடனும், அகத்தியர் தம்

சீடர்களுடனும் யாக சாலைக்கு வந்தார்கள். மன்னனும் நன் முறையில் வரவேற்று உபசரித்தான். தேவர்கள் வரம் கொடுத்துவிட்டு சென்றார்கள். குபேரன் மட்டும் சற்று நேரம் இருந்து, அசுவமேதயாகம் செய்த இவ்விடத்தில் கோயில் எழுப்புமாறு கேட்க, மன்னனும் இலக்குமி வராக மூர்த்தி கோயிலை எழுப்பினான். குபேரன் யோசனையால் பிரதிஷ்டிக்கப் பட்டதால் குபேர பிரதிஷ்டை ஆயிற்று. கோயிலுக்கருகே வராக தீர்த்தம் உருவாயிற்று. இது தல புராணக் கருத்தாகும். குபேரனே மூல விக்ரகத்தை பிரதிஷ்டை செய்ததாகவும் ஒரு ஐதீகம் உண்டு. முத்துசாமி தீட்சதர் என்பவர் குபேர பிரதிஷ்டதம் என்ற சொல்லைக் குறிப்பிடு கிறார்.

**கோயிலின் காலம் :**

புராண நூல் இவ்வாறு கூறினாலும், இக்கோயிலில் கிடைக்கும் கல்வெட்டுகளில் தொன்மையானது முதல் இராசேந்திரனுடையது ஆகும். இவ்வூருக்கருகில் உள்ள மன்னார் கோயிலிலும் இம்மன்னன் இராசேந்திர விண்ணகர் கோயில் எடுத்துள்ளதால் இக்கோயிலையும் இவனே எடுத்திருக்க வேண்டும் என்பதை முன்பே கண்டோம். கி.பி. 900–925 இல் சாந்தாளா அரசர்கள் இக்கோயிலைக் கட்டி யிருக்கலாம் என்று சிலர் குறிப்பிடுவர். இதற்குச் சரியான சான்றில்லை.

**உற்சவ மூர்த்தி:**

கருவறைக்கு முன்னால் மணிமண்டபத்தில் உள்ள உற்சவருக்கு இருபுறமும் சீதேவி, பூதேவி இருவரும் நிற்கிறார்கள். சங்கு, சக்கரம் ஏந்தி, அழகிய திருமண் காப்புடன், அழகாகப் பெருமான் உள்ளார்.

**சந்நிதிகள் :**

கோயிலின் திருச்சுற்றில் இடப்பக்க மேற்கு மூலையில் சீதேவிக்கும் வட மேற்கு மூலையில் பூமி தேவிக்கும் தனித் தனியாகச் சந்நிதிகள் இருக்கின்றன.

**அனந்த சயனப் பெருமாள் :**

தென் பிரகாரத்தின் மேலே, கோயில் வரைக்கும் போகப் படிக்கட்டுகள் உள்ளன. தென் கிழக்கு மூலையிலும் துவஜஸ் தம்பத்தை ஒட்டி மேலே செல்ல படிகள் உள்ளன. வைகுண்ட ஏகாதசியன்று பக்தர்கள் இந்தக் கீழ்ப்பக்க படிகள் வழியாக மேலே ஏறிச் சென்று, அங்கே விமானத்தில் உள்ள அனந்த சயனப் பெருமாளைத் தரிசித்து விட்டு தென்மேற்குப் படிகள் வழியாக இறங்கிச் செல்வார்கள். மேல் விதானம் ஒரே சமதளமாக இன்றி மேடும் பள்ளமுமாக இருப்பதால் எச்சரிக்கையுடன் நாம் செல்ல வேண்டும். கீழ்ப்புறம் கோயிலின் மூன்று நிலை கோபுரமும் அதற்கு நேர் எதிரே கருவறைக்கு மேலே அழகிய விமானமும் உள்ளன.

**விமானம் :**

விமானக் கருவறையில் விஷ்ணு, பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கிறார். அவருக்கு இருபுறமும் இரு தேவியர் உள்ளனர். பின்னால் சுவரில் சங்கு, சக்கரம் பொறிக்கப்பட்டிருக்கிறது. நாபி கமலத்திலே பிரம்மா இருக்கிறார்.

**பல்லக்கு :**

கோயிலின் வடக்குப் பிரகாரத்தில் பழைய பல்லக்கு ஒன்றுள்ளது. திருவிழாக்களின் போது முன்பு பயன்படுத்துவார்களாம். பல்லக்கின் பக்கவாட்டுப் பகுதியில், இராமாயணக் காட்சிகள் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன. ஓவியங்கள் சிதைந்துவிட்டன. வேறொரு பல்லக்கும் கோயிலில் இருந்ததாக இங்குள்ளோர் கூறுகிறார்கள். பழமையும் புதுமையும் ஒருங்கேயுடைய கோயிலாக இக்கோயில் உள்ளது. பல கோயில்களில் பல்லக்குகள் இன்றுமுள்ளன. சிறப்பாகத் திருவோத்தூர் வேதபுரீசுவரர் கோயிலில் காணலாம்.

**புள்ளரசர்:**

ஆதிவராகர் கோயிலுக்கு வடகிழக்கு மூலையில் உள் கோயில் மதில் மீது குடை நிழலில் 'புள்ளரசர்', அமர்ந்திருக்கிறார், இவர் திருமாலின் வாகனமாவார். கோயில் சுவர்கள்

கூடும் மூலையிலே மேலே அமர்ந்திருப்பதால் மூலைக்கருடர் எனவும் இவர் வழங்கப்படுவார். ஓர் அழகான தாமிரக்குடை அவர் மீது இதழ்விரித்து வெயில் மழையிலிருந்து காக்கிறது. குடை கலை நயத்துடன் உள்ளது. நாலு விட்டங்களும் பதினாறு ஆரக்கால்களும் எண்பட்டை வடிவமும் தோன்றும் படி மரத்தால் இது அமைக்கப்பட்டிருக்கின்றது. தாமிரம் போர்த்தியிருக்கிறது. மேலே ஓரங்களில் அழகிய குஞ்சரங்கள், மணிகள் உள்ளன. குடையின் தென் கிழக்குப் பகுதியில் குடையைப் பற்றிய கல்வெட்டு உள்ளது.

(கொல்லம்) 1001 வருஷம் புரட்டாசி மாதம்
தேதி 2 திங்கட் கிழமை அவுட்ட நட்சத்திரத் தனுசு
லக்கணத்தில் சர்வ ஸ்ரீ லட்சுமி வராகர் மூலைக்
கெருட சுவாமிக்கு தாம்பிரக்
குடை சுத்து மணியார் ஸ்த்தூபி செய்தது. சன்னதித்
தெருதொளிகுளத்தூ ரய்யர் பௌத்திரன் சங்கரய்யன்
புத்திரன் சுப்பய்யர் குடு
ம்ப சகிதமாயிசதா சேவை ஆதிமூலம் துணை.

**சுப்பையர்:**

கல்வெட்டில் உள்ள வருடம் கொல்லம் ஆண்டு. எனவே இதன் காலம் கி.பி.1826 ஆண்டாகும். குளத்தூரய்யன் பௌத்திரன் சங்கரய்யன். சங்கரய்யன் மகன் சுப்பைய்யர் இதை செய்தளித்தவர் ஆவார். கருடனுக்கு நேர்கீழே ஒரு பெரிய தொட்டியிருக்கிறது. சாதாரணமாக எல்லா ஊர் களிலும் விநாயகருக்குத் தான் வேண்டுதல் செய்து கொண்டு தேங்காய் சிதறு போடுவார்கள். இங்கு மூலைக் கருடருக்கு வேண்டுதல் செய்து கொண்டு சிதறு தேங்காய் போடுகிறார் கள். இது இக்கோயிலில் விசேடம் ஆகும்.

**திருவிழா:**

புரட்டாசி வெள்ளிக்கிழமை இரவு கோயிலுக்குள் மூலவருக்கு மாகாப்பு சாத்தி, நிலமாலை அணிவிப்பார்கள். மாகாப்பு என்பது தயிரில் அரிசிமாவைக் கலந்து பிசைந்து

சுவாமிக்குச் சந்தனக்காப்பு போல காப்பிடுவதாகும். நிலமாலை என்பது இத்தனை பூ, இத்தனை இலை என்று கணக்குள்ள தாகும். மாகாப்பில் நிலமலையுடன் ஆதிவராகர் அபூர்வங் களையே பெற்று ஆனந்த தரிசனம் தருவார். மறுநாள் காலை சனிக்கிழமை மூலவருக்கு எல்லா அபிஷேகங்களும் நடைபெறும். மூலைக் கருடருக்கும் அபிஷேகம் செய்து பூச்சட்டை சாத்துவார் கள். மக்கள் வெள்ளமெனத் திரண்டிருப்பர். ஆடி மாதம் சுவாதியன்று 1008 தேங்காய் உடைப்பார்கள். இது கோயில் செலவாகும். ஊர் மக்களும் 1000 தேங்காய்களை உடைப் பார்கள். 108 கொழுக்கட்டைகள் நைவேத்தியமாகும். விநாயகருக்கும் மோதகம் விசேடம். இங்கு வராகருக்கு விசேடம் போலும். இரவு மூலவருக்குச் சந்தனக் காப்பு செய்து ஆராதனைகள் முடிந்த பின், நான்கடி உயரமுள்ள பஞ்ச லோகத்தினாலான கருடன் மீது உற்சவர்களை ஆரோ கித்துதென்னூர் என்ற சிராம அண்ணாவிமார்கள் சுவாமியைத் தூக்கி வருவர். கோயில் கதவு சாத்தப்பட்டிருக்கும். கோயில் வாசலில் நிறுத்தி, வெளியே பக்தர்கள் காத்திருக்க ஆவலும் பரபரப்பும் உச்ச நிலையில் இருக்கும் போது கதவுகள் திறந்து தீபாராதனையைக் காட்டுவார்கள். இதற்குக் குடவாசல் தீபாராதனை என்று பெயராகும். சிதம்பரம் தில்லையம்மன் கோயிலில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை இராகு கால பூசையை இத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

**ஸ்மார்த்தர்கள்:**

தீவட்டிகளும் காஸ் விளக்குகளும் நாயனமும் பளபளக்கும் கருடரும் அவர் மீது அத்தனை நகைகளையும் அணிந்து கொண்டு அமர்ந்திருக்கும் பூமி நீளாதேவி சமேதரரான இலக்குமி வராகருக்குச் செய்யும் அலங்காரங்களும் கண் கொள்ளாக் காட்சி என்பர். உற்சவங்களை நடத்துபவர் ஸ்மார்த்தர் என்ற பிரிவினைச் சேர்ந்த பிராமணர்கள் ஆவார்கள்.

**புரட்டாசி விழா:**

புரட்டாசி மாதம் நான்கு சனிக்கிழமைகளிலும் கருடோற்சவம் இவ்வூரில் வெகு விமர்சியாகக் கொண்டாடப் படுகின்றது.

**கருடசேவை:**

ஆனி, மாசி, பங்குனி தவிர மற்ற எல்லா மாதங்களிலும் ஏதாவது ஒரு விழா நடைபெறுகிறது. தமிழ் வருடப் பிறப்பான சித்திரை விஷீவன்று கருடசேவை நடைபெறுகிறது சித்திரை சுக்கில பஞ்சமியன்று கொடி ஏற்றி, பத்து நாட்கள் பிரம்மஉற்சவம் கொண்டாடுகிறார்கள். முதல் நாள் கண்ணாடி சப்பரத்தில் ஆதிவராகர் எழுந்தருள்வார். அடுத்து வரிசையாக சிம்ம வாகனம், அனுமான் வாகனம் பெரிய நாக வாகனம், வண்டிச் சப்பரம், யானை வாகனம், கோரதம், பல்லக்கு, அன்னம் குதிரை வாகனம் போன்ற வாகனங்களில் பவனி வந்து இறுதியில் திருத்தேர் ஏறி, நாலு ரத வீதிகளிலும் இறைவன் பவனி வருவார். பதினோறாம் நாள் சித்ரா பௌர்ணமியன்று தீர்த்தவாரி. புஷ்ப பல்லக்கு, வாண வேடிக்கை, காலை மாலைகளில் வேத பாராயணம் என்று எல்லா நாட்களிலும் விழா நடைபெறும்.

**ஆடிப்பூரம்:**

இது தவிர இக்கோயிலில் வைகாசியில் பத்து நாள் வசந்தோற்சவம். ஆடியில் தட்சிணாயன புண்ணிய கால கருடச்சேர்வை, ஆடிப்பூரத்தில் பத்து நாட்கள் திருவிழா ஆகியவை நடைபெறுகின்றன. பத்தாம் நாள் ஆடிஸ்வாதி (கருடாழ்வார் ஜன்ம நட்சத்திரம் சுவாதியாகும்) கருடோற் சவம். கடைசி நாள் சேஷ வாகனம் ஆகும். இவை குறிப்பிடத் தக்க விழாக்கள் ஆகும். ஆவணியில் ஏழு நாட்கள் பவித்ரோற் சவம். கிருஷ்ணபட்ச துவாதசியன்று பெருமாள் சயனம். புரட்டாசி சனிக்கிழமை திருவிழா முன்னரே கண்டோம். திருவோண கருட ்சேர்வை, நவராத்திரி விழா, விஜயதசமி அன்று பாரி வேட்டை, ஐப்பசியில் விஷீ கருடசேவை, கார்த்

திகையில் திருக்கார்த்திகை சொக்கப்பனை – நாகவாகன காட்சி, மார்கழியில் திருப்பள்ளி எழுச்சி, அத்யாயன உற்சவம், துவாதசியில் மண்டகப்படி, மகர சங்கராந்தியில் சங்காபிஷேகம், கண்ணாடி சப்பர ஊர்வலம், இரவு கோயில் முழுவதும் லட்ச தீபம், கருடோற்சவம், தை வெள்ளிக் கிழமைகளில் விசேட அபிஷேகங்கள் என்று வரிசையாக விழாக்கள் வருகின்றன. இவ்வூரில் பிற கோயில்களிலும் விழாக்கள் பல நடைபெறுகின்றன.

**கும்பாபிஷேகம்:**

ஸ்ரீலட்சுமிபதி சேவா மண்டலம் என்ற அமைப்பே கோயிலைப் புதுப்பித்து 1987இல் கும்பாபிஷேகமும் நடத்தி உள்ளது. இவ்வூரில் பிறந்த பல செல்வந்தர்கள் இக்கோயில் வழிபாட்டிலும் பாதுகாப்பிலும் பெரும் பொருளை அளித்து வருகிறார்கள். கோயில் கும்பாபிஷேகத்தை யொட்டி 7.6.1987 இல் மலர் ஒன்று வெளியிடப்பட்டது. ஞானபிரான் என்ற தலைப்பில் டாக்டர். நாகசாமி எழுதிய சிறிய கட்டுரையும் இவ்வூரைச் சேர்ந்த அன்பர் எஸ். கிருஷ்ணமூர்த்தி தந்த தகவலும் ஓம்சக்தி 1/1989 மாதத்தில் வந்த மதுசூதனன் கட்டுரையும் மத்திய அரசு கல்வெட்டுத்துறை ஆண்டறிக்கையும் திருவாவடுதுறை செப்புப் பட்டயங்களும் இக்கோயில் குறித்து அடியேன் எழுத துணைபுரிந்தன. கோயிலில் உள்ள கல்வெட்டுகள் இரண்டு முழுமையானவை.

கல்லிடைக்குறிச்சி இலக்குமி வராகப் பெருமாள் கோயில் கருவறை முன்மண்டபத்தில் உள்ள கிழக்குச் சுவர் வாயிலில் கூடிய கல்வெட்டு. 314/1916

1) ஸ்வஸ்திஸ்ரீ கொல்லம் 653 ஸ்ரீ அற்பசி 22 முள்ளி நாட்டு பிரம்ம தேசம் ஸ்ரீராச

2) ராச சதுர்வேதி மங்கலத்து தென்கரை சேரகுமாரனில் நயினார் ஞானப்பிரான் கோயிலில் வ...

3) தொண்டை மண்டலத்துக் காடவராயன்பட்டில் நி ... காசிப கோத்தரத்து ஆஸ்வலா

4) யந சூத்திரத்து கிராஞ்சி நாராயணன் திருவேங்கட முடையான் கணக்காக நடந்து பொரும்

5) படி கற்பித்த நமஸ்காரம் ஒன்றுக்கு பூசைக்கும் ளா ...நீகு அமுதுபடி முன்னாழிக்கு இரண்ட

6) ஞ்சுக்கு ஏல உரியும் கறி அமுது முரம்பு எரிகரும்பு மற்றும் உட்பட்ட வகைக்கு...

7) டி ஆக ...வல் ஆக ஆண்டொன்றுக்கு ...6 கோட்டை ... இ நெல் இதுக்கு இ

8) ன்னயினார் பண்டாரத்திற் குடுத்த கோட்டை 104 மேல் கொண்டு ஆசந்திராதித்தவர் நட...

9) ...பொரும்படியும் நமக்காரச்சே ... நீக்கியுள்ள முதல் பண்டாரத்தில் முதலாம்படி...

10) தத்து...

**திருவேங்கடமுடையான்:**

இக்கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லை, எனினும் காலம் குறிக்கப்பட்டுள்ளது. காலம் 1478 என்பதால் சேர அரசர் கல்வெட்டு எனலாம். சேரகுமாரன் என்று கல்லிடைக் குறிச்சி அழைக்கப்பட்டுள்ளது. இராஜராஜ சதுர்வேதி மங்கலத்து தென் கரையில் உள்ள சேரகுமாரன் பகுதியில் நாயனார் ஞானபிரான் கோயில் வழிபாட்டிற்குத் திருவேங் கடமுடையான் கிராஞ்சி நாராயணன் என்பவன், நெல் தானம் வழங்கியுள்ளான். தானம் அளித்த திருவேங்கடமுடையான், தொண்டை மண்டலத்து காடவராயன் பட்டி என்ற ஊரைச் சேர்ந்தவன் ஆவான். கோயில் பண்டாரத்திடம் 104 கோட்டை நெல் வழங்கியுள்ளான். காசிப கோத்திரத்து ஆஸ்வலாயன சூத்திரத்து கிராஞ்சி நாராயணன் எனத் தானம் தந்தவன் அழைக்கப்படுவதால் இவன் பிராமணன் என்று அறிகிறோம்.

மேற்படி கல்வெட்டுள்ள இடத்தின் இடது பக்க வாயிலில் கூடிய கல்வெட்டு 315/1916

1) ஸ்வஸ்திஸ்ரீ கொல்லம் 655 கார்த்திகை மீ முள்ளிநாட்டு பிரம்மதேச ஸ்ரீ இராசராசசதுர்வேதிம

2) ங்கலத்து தென்கரை சேர குமாரனில் நயினார் ஞானபிரான் கோயிலில் வழிபாடாக கற்

3) பித்த கெங்கைக் கரையில் காசிப கோத்திரத்து காத்தியான ஸூத்திரத்துக்குச் சரப்ப

4) ட்டாரில் ஸனாரியபட்டன் மகன்...ச்சர் திம்மனா பட்டர் கற்பித நமஸ்காரம் ஒன்றுக்கு பூஜைக்கு

5) னாள் ஒன்று அமுதுபடி முன்னாழிக்கு இரண்டஞ்சு... 7 உரியும் கறிஅமுது முரம்

6) பு எரிகரும்பு மற்று உட்பட்ட வகைக்கு 102 உரி ஆக 102 நெல் ஆக ஆண்டடொன்று நெல்

7) 365 கோட்டை 19... நெல் இதுக்கு இன்னயினார்ப் பண்டாரத்தில் கு

8) டுத்த கோட்டை 106 இதில் பரிசை கொண்டு ஆசந்தி ராதித்தவர் நட

9) ந்து பொரும்படியும் நமக்காரச் செ

10) லவு நீக்கியுள்ள முதல் பண்டாரத்தில்

11) முதலாம் படியும் கற்பித்தது சுபமஸ்து.

**திம்மண்ணபட்டர்:**

இக்கல்வெட்டு கி.பி.1490 இல் வெட்டப்பட்டது. கங்கைக் கரையில் வாழ்ந்திருந்த ஓர் பிராமணன் ஞானபிரான் கோயில் பூஜைக்கும் அமுது படிக்கும் பிறவற்றிற்குமாக 365 கோட்டை நெல் அளித்துள்ளான். பூஜை என்ற சொல்லுடன் நமஸ்காரம் என்ற சொல்லும் கல்வெட்டில் உள்ளது. தானம் வழங்கிய பிராமணன் பெயர், திம்மண்ண பட்டராகும்.

# அகஸ்தியர் கோயில்

**சிற்பங்கள்:**

கல்லிடைக் குறிச்சியில் செங்குந்த முதலியார்களால் நிருவகிக்கப்படும் அகஸ்தியர் கோயில், முன்மண்டபத்துடன் கோபுரத்தைக் கொண்டுள்ளது. மண்டபத்தின் தூண்களில் மிகவும் பிற்காலக் கல்வெட்டுகள் உள்ளன. யாவும் 19 ஆம் நூற்றாண்டு எனலாம். தனிநபர்களின் நன்கொடைகளைக் கல்வெட்டுகளில் காணலாம்.

*பெருமாள் முத*
*லியார் குமாற சுட*
*லைமுத்து முதலியார்*
*உபயம் யிந்த தூண்* - என்ற கல்வெட்டு ஒருதூணில் உள்ளது.

இருபுறமும் துவாரபாலகர்கள் தாடியுடன் உள்ளனர். மேலே முருகர் சிற்பம், அகஸ்தியர் கெண்டியுடன் உள்ள சிற்பம் ஆகியவை உள்ளன.

*1751க்கு... முதயாற்கு*

*வருஷம்... சுப்புமுதலியார் உபயம் யிந்த தூண்*
இக்கல்வெட்டும் தூண் நிறுவிய தானத்தைக் குறிப்பிடுகிறது.

*1755 சிஷ்யர்*
*யகு அகஸ்தியர் கோவி*
*ல் தெரு வா, மகாலிங்*
*க முதலியார் தானு*
*பையம்*
*விதானம்*

விதானம் அமைத்து தந்த விபரம் இதில் காண்கிறோம்.

*சிவமயம்*
*1755 ... விகா*
*ரி தை மீ 13*
*வலனி பொன்ன*

மாணிக்க முதலி
யார் குமரர் பொன்ஸ
சுலி முதலியார் உபயம்.

இக்கல்வெட்டும் தானம் தந்த விபரத்தைக் குறிப்பிடுகிறது. குதிரை மீது அய்யனார், சிவலிங்கம், அடியார், முருகர், விநாயகர் ஆகிய சிற்பங்களை இங்கே காண்கிறோம்.

மண்பத்தின் தென்புறம் முருகர், அகஸ்தியர், அடியார் சிற்பங்கள் உள்ளன. அகஸ்தியர் தாடியுடன் உள்ளார். மேலும் தாடியுடன் வேறு மூவர் உள்ளனர்.

தூண்களில் வாழைப் பூ சிற்பம் தொங்குகிறது. யானையும் சிங்கமும் கட்டிடத்தைத் தாங்கும் நிலையில் சிற்பம் காட்டப் படுகிறது. விதானத்தில் இராகு, சனி, கேது, செவ்வாய், சூரியன், குரு, சந்திரன், சுக்கிரன், புதன் என்ற நவக்கிரக சிற்பங்கள் உள்ளன.

செவ்வாய், சனி 4 கைகளுடன் உள்ளன. இருபுறமும் அகஸ்தியர் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன.

வெளி மண்டபத்தை அடுத்து உள்ளே பெரிய மண்டபம் பலிபீடம், நந்தி, கொடிமரம், வழக்கமான விதத்தில் உள்ளன. வடகிழக்கில் நவக்கிரக கோயில் உள்ளது. அன்ன மண்டபம் எனப்படும் மண்டபத்தில் பங்குனி 28 இல் ஏழாம் திருவிழா ஆண்டுதோறும் நடைபெறும்.

கருவறை:

அகஸ்தியர் வலக்கை சின் முத்திரை. இடக்கை புத்தகம் ஏந்தியுள்ளார். கழுத்தில் லிங்கத்துடன் மாலை, ஜடா மகுடம், மார்பில் பூணூல், கால் வரை ஆடை காட்டப் பட்டுள்ளது.

அகஸ்தியரின் தேவி லோபா முத்திரை கரண்ட மகுடத் துடன் இரு கரங்களுடன் உள்ளார். வலக்கரம் மலர் ஏந்திய படி உள்ளது. இடக்கரம் லோலஹஸ்தம். பிரபையுடன் உள்ளார். பத்ர பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் இவர் தென்புறம் உலோபா முத்திரை சந்நிதி உள்ளது.

4. 6. 54 அன்று கோயில் பழுது பார்க்கப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. 9. 6. 1978 இல் மீண்டும் கும்பாபிஷேகம் நடைபெறுள்ளது.

# நாகேஸ்வரமுடையார் கோயில்

**கல்வெட்டுகள்**

கல்லிடைக் குறிச்சியில் உள்ள பழைய கோயில்கள் அனைத்திலும் கல்வெட்டுகள் மிகுதியாக இடம் பெற்றுள்ள கோயில் நாகேஸ்வரமுடையார் கோயிலேயாகும். சிற்ப நேர்த்தியிலும் முதன்மை வகிக்கும் கோயில் இது என்றால் மிகையில்லை. நாகேஸ்வரமுடையார் கோயில் இடிந்து சிதலமான நிலையில் வழிபாடின்றி இருப்பதால் இக்கோயில் இருப்பதே பலருக்குத் தெரியாமல் உள்ளது.

**கோயில் அமைப்பு:**

கோயில் மிகவும் சிறியது. கட்டிட அமைப்பிலும் சிற்பத் திறனிலும் உயர்ந்தது. சதுரமான கருவறை. தற்போது கருவறையில் சிவலிங்கம் இல்லை. கருவறை முன்புறம் உள்ளது அர்த்த மண்டபம். அர்த்த மண்டபத்திற்கு முன்புறமுள்ள மண்டபம் விழும் நிலையில் தொங்கிக் கொண்டுள்ளது. தூண்களை நிறுத்தி மண்டபம் விழுவதைத் தடுத்துள்ளனர். கோயிலுக்குரிய பழைய நந்தி ஒன்று கோயிலுக்குத் தென்புறம் கிடக்கிறது. அர்த்த மண்டபம் கொடுங்கைக்குக் கீழ் உள்ள பகுதியே இன்றுள்ளது. இங்கும் இரு மரங்கள் செழித்து வளர்ந்துள்ளன. கருவறை கிரீவமும் விமானமும் செங்கல திருப்பணி. சிற்பம் ஏதுமில்லை.

**சிற்பங்கள்:**

கோயில் கருவறை, அர்த்த மண்டபம், முன்மண்டபம், யாவும் சமகாலத் திருப்பணியாகும். உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டிகை என அதிட்டானம் அமைந்துள்ளது. இதனைப் பாத பந்தம் என்று கூறுவர். கால் எனப்படும் சுவர்ப் பகுதியில் தூண்கள், அரைத் தூண்கள் எழிலுடன் அமைந்துள்ளன. தூண்களில் கலசம், முப்பட்டை, பட்டி, போதிகை போன்ற உறுப்புகள் உள்ளன. அழகான கூரையில் ஆண், பெண் சிற்பங்கள் வரிசையாக உள்ளன. கருவறை, அர்த்த மண்டபம் இரண்டிலும் இப்போக்கு

உள்ளன. அர்த்த மண்டப வடக்குச்சுவரில் அன்னம், ஆமை, நாட்டியப் பெண்டிர், மத்தளம் அடிக்கும் ஆடவர் இருவர், தாளம் ஏந்திய ஆடவர் ஒருவர், ஊது குழல் வாசிப்பவர் இருவர், வரிசையாக உள்ள போர் வீரர் ஆகிய சிற்பங்களைக் கண்ணையும் கருத்தையும் கவருவனவாகும். போர் வீரர்களுக் கிடையே தலை ஒன்றுள்ளது. ஆடவருக்கும் பெண்களுக்கும் காதணிகள் (ஓலைக்குழைகள்) ஒரே மாதிரியாக உள்ளன. கருவறை வடக்கு பிரஸ்தரத்திலும் இதே போன்ற சிற்பங்கள் காண்கிறோம்.

**யாளி வரிசை:**

மேற்கண்ட சிற்பங்களுக்கு மேலே யாளி வரிசை உள்ளது. யாளியுடன் படம் எடுத்தாடும் பாம்பும்; குரங்கொன்றும் உயிரோடு இருப்பவை போன்று உள்ளன. கபோதகத்தில் கத்தி, கேடயத்துடன் கூடிய ஆடவர் சிலர் கம்பீரமாக நிற்கின்றனர். தலை கீழாக ஓர் ஆடவன் சிற்பம் உள்ளது. இது கலை அழகுடன் காட்சியளிக்கின்றது. விமானப் பகுதி சிதைந்த நிலையில் உள்ளது. இங்கே அன்னம் காட்டப்பட்டுள்ளது. யாளி வரிசையின் நடுவில் சிங்கமும் இறுதியில் யானையும் காட்டப்பட்டுள்ளன.

**கோஷ்டங்கள்:**

கருவறை வடக்குக் கோஷ்டத்தில் தெய்வ உருவம் ஏதும் இல்லை வடக்கில் உள்ள கோமுகை மண்மேடிட்டு உள்ளது. வடக்கு கோஷ்டத்தின் மேலே மகர தோரணத்தில் உமை, மகேஸ்வரன், இருவரும் நந்தி மீது அமர்ந்தபடி அருள் பாலிக்கின்றனர். இச்சிற்பம் கவின்மிகு சிற்பமாகும். சிவனுக்கு நான்கு கரங்கள். மான், மழு, அபையம், தொடை மீது கை என அக்கைகள் விளங்க, உமைக்கு ஒரு கை இடுப்பின் மீது உள்ளது. மற்றொரு கை தற்போது உடைந்துள்ளது. தொடக் கத்தில் மலர் ஏந்தியபடி இருந்திருக்க வேண்டும். கிரீவ கோஷ்டத்திலும் விமான கோஷ்டத்திலும் சிற்பம் ஏதும் இல்லை.

**யோக நரசிம்மர்:**

கருவறை மேற்கு கோஷ்டத்தின் மேலே உள்ள மகர தோரணத்தில் யோக நரசிம்மர் காட்சி தருகிறார். இவருக்கு நான்கு கரங்கள் உள்ளன. முன்புறமுள்ள இரு கரங்கள் முட்டி மீது உள்ளன. பின்புறமுள்ள கரங்கள் சங்கு, சக்கரத்தை ஏந்தியுள்ளன. அழகே உருவாக இவர் காட்சியளிக்கிறார். கைகளில் தடித்த காப்பு, கங்கனம் காட்டப்பட்டுள்ளன. பிரிந்து செல்லும் புரிநூலும் கால்களுக்கிடையே யோக பட்டமும் காட்டப்பட்டுள்ளன.

**வீரர்கள் :**

ஆடவர், பெண்டிர் சிற்பங்கள் கருவறை மேற்கில் உள்ள தளவரிசையில் உள்ளன. புள்ளியின் வாய்க் கீண்டான், மற்றும் வீரர் சிற்பங்கள் உள்ளன. தலை கீழாகச் சிங்கமொன்று காட்டப்பட்டுள்ளது. ஓர் ஆடவன் அடி வயிற்றிலிருந்து வெளிப்படும் வேறொரு வீரன் சிற்பம் எழில்மிகு சிற்பமாகும். இங்குள்ள ஆடவர் கரங்கள் வெவ்வேறு முத்திரைகளைக் காட்டுகின்றன.

**தாய்சேய் சிற்பம்:**

தாய் ஒருத்தி, தன் இரட்டைக் குழந்தைகளுக்கு ஒரே சமயத்தில் பால் புகட்டும் அரிய சிற்பம் குறிப்பிடத் தக்க தாகும். தருமபுரி கோட்டைக் கோயில் இராமாயணச் சிற்பங் களில் மகனுக்குப் பால் புகட்டும் கோசலை, கைகேயி சுமத்திரை சிற்பங்கள் நினைவிற்கு வருகின்றன. தருமபுரியில் படுத்தபடி தாயர்பால் புகட்டுகின்றனர். இங்கே அமர்ந்த நிலையில் தாய்பால் புகட்டுகிறார். இரு தொடையிலும் இரு குழந்தைகள் அமர்ந்து பால் குடிக்கின்றன.

**வலம்புரி விநாயகர்:**

தெற்கில் உள்ள கோஷ்டத்தில் யாளி தோரணத்தில் வலம் புரி விநாயகர் காட்சியளிக்கிறார். இரு யாளிகளுக்கிடையில் அமர்ந்த நிலையில் விநாயகர் அருள் பாலிக்கிறார்.

**கற்றளி:**

தென்புறக் கருவறைச் சுவரில் உள்ள கொடுங்கையில் வீரர் மற்றும் போரிடும் யானை சிற்பங்கள் உள்ளன. இலிங்கத்திற்குப் பால் பொழியும் பசு அழகாக உள்ளது. கொசக்குடிப் பெருமாள் கோயில் என இன்று அழைக்கப்படும் பெரிய பிரான் கோயில், கட்டிடக் கலையில் கம்பீரமாக இருந்தாலும் சிற்பத் திறனில் நாகேஸ்வரமுடை நாயனார் கோயிலை இது நெருங்கவே முடியாது. நாகேஸ்வரமுடையார் கோயில் கொடுங்கையில் ஆண் பெண் கைகோர்த்த சிற்பம், காமச்சிற்பம், நாட்டிய சிற்பம், சங்கூதும் சிற்பம், எனப் பல சிற்பங்களைக் காண்கிறோம்.

**இரு சிவன் கோயில்கள்:**

மத்திய அரசு கல்வெட்டுத்துறை, 1907 இல் படியெடுத்த கல்வெட்டுகளைத் தொகுதி 23இல் பதிப்பித்துள்ளது. இதில் 90 என்ற எண் முதல் 96 என்ற எண் வரை உள்ள கல்வெட்டுகள், நாகேஸ்வாமுடையார் கோயிலில் இருந்து படியெடுத்ததாக அது குறிப்பிடுகிறது. எண். 97முதல் 102 வரை உள்ள கல்வெட்டுகள் நாகேஸ்வரமுடையார்–அம்மன் கோயிலில் இருந்து படியெடுத்ததாக நூலாசிரியர் குறிப்பிடுகிறார். நாகேஸ்வரமுடையார் கோயில் கல்வெட்டுகள் யாவும் நிலை உடைய பாண்டீஸ்வரமுடையாரைக் குறிப்பிட, அம்மன் கோயில் கல்வெட்டுகள் யாவும் நாலாயிர ஈசுவரமுடையாரைக் குறிப்பிடுகின்றன. தற்போது அம்மன் கோயில் என்று கல்வெட்டுத் துறை குறிப்பிட்ட கோயில் இல்லை. நாகேஸ்வரமுடையார் என்று குறிப்பிடப்படும் நல்லமர் கோயில் மட்டுமே உள்ளது. நல்லமர் கோயிலும் இடிபாடுற்ற நிலையில் உள்ளது. நல்லமர் எனப்படும் நாகேஸ்வரமுடையார் கோயிலே கல்வெட்டுகள் குறிப்பிடும் நிலை உடைய பாண்டீஸ்வரமுடையார் கோயில் ஆகும்.

**கீரிகிருஷ்ணர்கோயில்**

முற்றிலும் அழிந்து விட்ட ஒரு கோயில் கல்வெட்டுகள் படியெடுக்கும் போது அம்மன் கோயில் என வழங்கப்

பட்டுள்ளது. (1907 ஆம் ஆண்டு) இக்கோயிலும் கல்வெட்டுகள் வெட்டப்பட்டக் காலங்களில் நாலாயிர ஈஸ்வரமுடையார் என்றே வழங்கப்பட்டிருக்க வேண்டும். நாலாயிர விண்ணகர் எம்பெருமான் என்ற பெருமாள் கோயில் பெயரை யொட்டி இப்பெயர் அமைந்திருக்கலாம். பெருமாள் கோயில் கல்வெட்டு படி யெடுக்கும் போது கீரி கிருஷ்ணர் கோயில் என வழங்கப் பட்டுள்ளது. நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயிலும் அம்மன் கோயிலாகக் கருதப்பட்டுள்ளது. நம் அலப்பேற்றின் காரணமாக இவ்விரண்டு கோயில்களும் முற்றிலும் அழிந்துவிட்டன. நிலைஉடைய பாண்டீஸ்வரமுடைய நாயனார் மற்றும் நாலாயிர ஈஸ்வரமுடையார் என்ற இரு கோயில்களிலும் பாண்டியர் கல்வெட்டுகளே உள்ளன.

**வாழவல்ல பாண்டீஸ்வரம்:**

''அம்பாசமுத்திரம் நெல்லை பாதையில் உள்ள தருவை என்ற சிற்றூரில் 'வாழவல்ல பாண்டீஸ்வரம்' என்ற கோயில் உள்ளது. 19 கல்வெட்டுகள் இங்கு உள்ளன. யாவும் பாண்டியர் கல்வெட்டுகளாகவே உள்ளன. நிலைஉடைய என்பதற்கு நிலைபேறுடைய என்று பொருளாகும். வாழவல்ல என்பதும் ஏறக்குறைய இதே பொருளாகும். நிலை உடைய என்ற சொல்லே பொதுமக்கள் மத்தியில் நல்லமர் எனத் திரிந்து இன்று வழங்கப்படுகிறது.

**முற்காலப் பாண்டியர் கோயில்கள்:**

கல்லிடைக் குறிச்சிக்கு வடக்கில் அம்பா சமுத்திரத்தில் உள்ள எரிச்சாவுடையார் என்றும் திருப்போத்துடைய படாரர் என்றும் வழங்கப்பட்ட சிவன் கோயிலும் திருமூலத் தானத்துப் படாரர் அல்லது திருமூல நாதர் என வழங்கப்பட்ட சிவன் கோயிலும் முற்காலப் பாண்டியர் காலத்தில் அதாவது கி.பி.8 ஆம் நூற்றாண்டில் எழுப்பப்பட்டன.

**அரிகேசரி நல்லூர்**

கல்லிடைக் குறிச்சிக்குத் தென்புறமுள்ள அரிகேசரி நல்லூர் சிவன் கோயிலும் முற்காலப் பாண்டியர் திருப்பணி ஆகும். ஆயின், கல்லிடைக் குறிச்சி சிவன் கோயில்கள் யாவும்

பிற்காலப் பாண்டியர் திருப்பணி. முற்காலப் பாண்டியரை அடுத்து பாண்டிய நாட்டையாண்ட சோழபாண்டிய பிரதிநிதிகள் காலத்திலும் குறிப்பிடும் படியான சிவன் கோயில் கள் கல்லிடைக்குறிச்சியில் எழுப்பப்படவில்லை. சோழ பாண்டிய பிரதிநிதிகள் ஆட்சியை விரட்டியபின் நாடாண்ட பிற்காலப் பாண்டியர், எண்ணற்றக் கோயில்களைப் புதிதாகக் கட்டியுள்ளனர். அத்தகு கோயில்களுள் நிலை உடைய பாண்டீஸ்வரமுடையார் கோயிலும் நாலாயிர ஈஸ்வரமுடை யார் கோயிலும் குறிப்பிடத் தக்கவை ஆகும்.

**கல்வெட்டுகள்:**

முதலாம் இராசராசன் உருவாக்கிய தஞ்சை இராஜராஜீஸ் வரமுடையார் கோயில் கல்வெட்டுகளின் எழுத்துக்கள் எவ்வாறு நளினமாகவும் பெரியதாகவும் அமைந்துள்ளனவோ அவ்வாறே நிலைஉடைய பாண்டீஸ்வரமுடையார் எனப்படும் நாகேஸ்வரமுடையார் கோயிலிலும் கல்வெட்டுகள் அமைந் துள்ளன. பிழையின்றியும் காணப்படுகின்றன. வட்டெழுத்து களுக்குப் பதிலாகத் தமிழ் எழுத்துக்களே கோயிலில் காண் கிறோம். கல்லிடைக் குறிச்சியில் உள்ள பிற கோயில்களிலும் தமிழ் எழுத்துக்களே உள்ளன. கல்வெட்டுகளின் அடிப் படையில், நிலைஉடைய பாண்டீஸ்வரமுடையார் மற்றும் நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயில்களின் சிறப்புகளைக் காண்போம்.

**வீற்றிருந்தான் பூவந்தன்:**

நாகேஸ்வரமுடையார் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் கூடிய விக்ரம பாண்டியனுடைய 11 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டின் மூலம் கி.பி.1229இல் கோயிலுக்கு வழங்கிய நன்கொடையைக் காண்கிறோம். இராஜராஜ சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகைக் கல்லிடைக் குறிச்சியில் நிலையுடைய பாண்டிய ஈச்சுரமுடையார் கோயிலுக்கு நிலம் விற்கப்படுகிறது. மாற்பற்று எலி வாரமான 6½ மா நிலம் அளவாகும். 'வீற்றிருந்தான் பூவந்தன்', முன்னிலையில் 13காசு, கற்பூர விலையாக விலைஉறுதி படுத்தப்

படுகிறது. முதல் மடை நீர் பாயப் பெறாததால் அந்த வாய்ப்பு வேண்டப்படுகிறது. பெருமாள் கோயிலுக்குரிய நிலம் நீங்கலாக இக்கோயிலுக்குரிய நிலம் இறை நீக்கி விடப் படுகிறது.

**பெருமக்கள்:**

பட்டண சுவாமி நிலம் கிழக்குத்தென் வடல் பெரு வரம்புக்கு மேற்கு. தென்னெல்லை சாத்தனூர் பெருங்கால் வடக்கு கிராம ராஜ விண்ணகர் எம்பெருமான் கோயில் நீங்கலாக எல்லை வரையறுக்கப் படுகிறது. இந்த உத்திரவில் கீழ்க்கண்டவர்கள் ஒப்பமிட்டுள்ளனர்.

1) சீதுங்க பல்லவரையர் ...... (ஆயிரவர்)

2) கருமாணிக்கப் பல்லவரையர் (ஆயிரவர்)

3) வாகையற நாயன் உள்ளிட்டார்

4) கோட்டையூர் வீற்றிருந்தான் பூவந்தன்

5) வங்கிபுரத்துச் சிங்கபிரான்

6) திருப்புத்தூர் அரசு திருமலை சோமாசி

7) திருக்கடலூர் ஸ்ரீ கிருஷ்ணன் கருமாணிக்கம்

8) ஏமப்பேரூர் தேர் பொலிய நின்றான் கண்ணபட்டன் சோமாசி

9) இளங்கோக்குடி சுந்தரத் தோளுடையான் திருமயான தர்மன்

10) புள்ள மங்கலத்து எச்சவராகன்

11) திருநல்லூர் திருமாலிருஞ்சோலை நாராயணன் உத்திரசினன்

12) திருவெள்ளறை சிவதேவன் கைலாயமுடையான்

13) பாப்பாக்குறிச்சி தாமோதரன் ஆட்கொண்ட வில்லி

14) பராந்தூர் ஸ்ரீகிருஷ்ணன்

15) குரோவி சாத வேதன் மகன் ஸ்ரீ மாதவன்.

மேற்கண்ட பெருமக்கள் பணிக்க, கோட்டையூர் வீற்றிருந்தான் பூவந்தன் என்பவன் விலைப் பிரமாணம் எழுதியுள்ளான். இவன் 15 பேர்களில் ஒருவனாகவும் உள்ளான். இவனுடன் கொற்றங்குடையான், பத்தங்கி எச்சமுத்தி, தேவன், நின்ற தேவன், தில்லைக் கூத்தனான தென்னவன் ஆசாரியன் ஆகியோரும் ஒப்பம் இட்டுள்ளனர். 'திருமகள் செயமகள்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி உடைய விக்கிரம பாண்டியன் கி.பி.1218 முதல் கி.பி.1232 வரை ஆட்சி புரிந்தவன். இவனே இக்கல்வெட்டில் வரும் மன்னன் ஆவான்.

## திருமுறை ஓதுவார்:

நாகேஸ்வரமுடையார் கோயில் கருவறையின் மேற்குச் சுவரில் உள்ள சுந்தர பாண்டியனுடைய ஒன்பதாவது ஆட்சியாண்டு கல்வெட்டு முக்கியம் வாய்ந்த ஒன்றாகும். திருமுறை ஓதுவார்க்குத் தந்த நன்கொடையை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. நிலை உடைய பாண்டீஸ்வர முடைய நாயனார் கோயிலில் திருக்கைக் குடி திருக்காப்பு நீக்கி திருமுறை ஓதுவார்க்கு அமுதுபடிக்காகத் தானம் வழங்கப் படுகிறது. முள்ளி நாட்டு பிரம்மதேயம் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்து இரண்டாம் சேரியைச் சேர்ந்த (இச்சேரி மும் முடி சோழ சேரியாக இருக்கலாம்) தலைச் செங்காட்டு ராஜ சிம்மன் திருமாலிருஞ் சோலை நாராயணன் சிவகல்லியான நம்பி என்பவன் தானம் வழங்கியுள்ளான். எலிவாரத்து நிலம் ஐந்து மா வரைக்கும் உழவு மாற்றுக் குடுத்த அச்சு (காசு) பத்தும் இளங்கோமங்கலத்துச் சிவப்பிராமணர் தந்த அச்சு (காசு) இரண்டும் மற்றும் இரண்டு மா நிலமும் ஓதுவாற்கு அமுது படிக்காக முதலீடாக வழங்கப்படுகிறது.

## இராசராசன்

ஓதுவார் நாள்தோறும் எண்ணாழி ஆழாக்கு நெல் கோயில் பண்டாரத்திடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும் என்று தானம் வழங்கிய சிவகல்லியான், உத்திரவும் இட்டுள்ளான். இக்கல்வெட்டின் காலம் கி பி.1224 ஆகும். முதலாம் இராசராசனுக்கு முன்னரே கோயில்களில் நாயன்மார்

ஆழ்வார் பாடல்கள் பாடப் பட்டிருந்தாலும் இராசராசன்தான் புதிதாக எடுப்பித்த தஞ்சை இராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் பெரிய அளவில் தேவாரம் ஓத ஏற்பாடு செய்தான். இவன் சிவதீட்சை பெற்ற பிடாரர் எனப்படும் சைவ அடியார்களை நியமித்தான். இவனையடுத்து வந்த அரசர்களும் கோயில்களில் நாயன்மார் பாடல்களையும் ஆழ்வார் பாசுரங்களையும் ஓதுவதற்கு ஏற்பாடு செய்துள்ளார்கள்.

**ஓதும்பேர்:**

சோழர்களைப் போலவே பாண்டியர்களும் பண்சுமந்த பாடல்களைக் கோயில்களில் ஓத ஏற்பாடு செய்துள்ளார்கள். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி 13 ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலத்தில் பல கோயில்களில் பாடல்கள் பாட ஓதுவார்களைப் பாண்டிய மன்னர்கள் நியமித்துள்ளார்கள். பிரிக்கப்படாத நெல்லை மாவட்டத்தில் மட்டும் 27 கோயில்களில் இவ்வாறு திருப்பதிகங்கள் ஓதுவது நடைபெற்றுள்ளன. இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய 15 ஆவது ஆட்சியாண்டில் நெல்லையப்பர் கோயிலில் தேவாரம் ஓத 11 ஓதுவார்கள் நியமிக்கப்பட்டார்கள். திருஞானம் ஓதும்பேர் (ஓதுவார்) என இவர்கள் வழங்கப்பட்டார்கள். இராசராசன், பிடாரர் என வழங்க, பாண்டியர், ஓதும்பேர் என வழங்கினர்.

ஆளுடையான் ஆனந்தக் கூத்தவன் தினமும் நெல்லையப்பர் கோயிலில் திருக்காம கோட்டமுடைய நாச்சியார் முன்பு பாடுவதற்காக நிலம் பெற்றுள்ளதை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**கோளகி மடம்:**

வீரபாண்டியன் மூன்றாம் ஆட்சியாண்டில் திருவாலீஸ்வரம் கோயிலில் கோளகி மடத்தைச் சேர்ந்த புகலிப் பெருமாள் என்பவர் திருஞானம் ஓதியுள்ளார். திருஞானம் என்பது சம்பந்தர் பாடிய பதிகமாகும். சொக்கன் நாயக்கன் என்பவர் ஞானம் பெற்றார் என்று ஒரு கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. கோளகி மடம் என்ற பெயரில் பல மடங்கள் தமிழகத்தில் இருந்தன. நெல்லை மாவட்டத்தில் வாலீஸ்வரம்

கோயிலை ஒட்டியும் ஆற்றூர் கோயிலை ஒட்டியும் கோளகி மடங்கள் இருந்தன. ஞானாமிர்த ஆசாரியார் இம்மடத்தைச் சார்ந்தவர் என அறிஞர் கூறுவர்.

**திருவாவடுதுறை ஆதீனம்**

கி.பி. 16 ஆம் நூற்றாண்டுமுதல் சைவ மடங்கள் சைவத்துடன் நாயன்மார் பாடல்களையும் பாதுகாத்து வந்துள்ளன. திருவாவடுதுறை ஆதீனமும் கோயில்களில் தேவாரம் ஓத நன்கொடை வழங்கியது. தற்போதும் வழங்கி வருகிறது. தற்போதுள்ள குருமகான், பல கோயில்களில் தேவாரம் ஓத கட்டளைகள் வழங்கியதுடன் தமிழை வளர்க்க அரிய உபாயத்தையும் மொழிந்துள்ளார்கள். ஒவ்வொரு கோயிலுக்கும் ஓர் ஓதுவாரை நியமித்து தேவாரம், திருவாசகத்தை ஓதச் செய்தாலே தமிழ்ப்பண்பாடு தழைப்பதுடன் ஏழை ஓதுவார்களின் நிலையும் உயரும் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

**குலசேகர ஆழ்வார்:**

கல்லிடைக்குறிச்சியில் சுந்தர பாண்டியன் தேவாரம் ஓதச் செய்தது குறிப்பிடத் தக்கதாகும். கல்வெட்டு, திருமுறை என்று பொதுவாகக் குறிப்பிடுவதால் 12 திருமுறைகளையும் குறிப்பிடும் எனலாம். கி.பி. 1190 முதல் 1218 வரை பாண்டிய நாட்டையாண்ட குலசேகரன் திருமுறைகளைத் தொகுக்க ஆற்றூரில் தானம் அளித்துள்ளான். மன்னார்கோயில் என்ற ஊரில் குலசேகர ஆழ்வார் சந்நிதியில் ஆண்டாள் பாடிய திருப்பாவை பாடல்களை ஓத மன்னன் ஏற்பாடு செய்துள்ளான். சைவம், வைணவம் என்ற வேறுபாடு கருதாமல் திருமுறைகளையும் திவ்வியப்பிரபந்த பாடல்களையும் கோயில்களில் ஓத பாண்டியர் நடவடிக்கை மேற்கொண்டுள்ளனர். காளாமுகர், காபாலிகர் நடத்தி வந்த மடங்களும் வீர சைவ மடங்களும், குகைகளும் இன்ன பிறவும் மதுரைக்கு வடக்கே சென்னை வரை இருந்துள்ளன. கோளகி மடத்தார் நடத்தி வந்த சைவ மடங்களும், சந்தான மடங்களும் தமிழகம் எங்கும் இருந்துள்ளன. நெல்லையிலும் இருந்துள்ளன.

**கோனேரின்மை கொண்டான்:**

மன்னன் பெயரின்றிக் கோனேரின்மை கொண்டான் என்று தொடங்கும் மற்றொரு கல்வெட்டு கோயிலின் தென்புறச் சுவரிலேயே உள்ளது. ஒன்பதாவதின் எதிர் நான்காம் ஆண்டில் வெட்டப்பட்ட இக்கல்வெட்டு குலசேகரன் (1190–1218) கல்வெட்டாக இருக்க வேண்டும். நிலையுடைய பாண்டீஸ்வரமுடையார் கோயிலுக்குப் பல்வேறு வரிகள் நீங்கலாக நிலம் விற்றுக் கொடுத்ததைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**ஐயன் காலிங்கராயன்:**

பாண்டீஸ்வரமுடையார் கோயிலுக்கு அந்தராயம் உட்பட தேவதானம் இறையிலியாக இடப் பெற வேணுமென்று ஐயன் காலிங்கராயன் அரசனுக்குச் சொல்ல, அரசன் தானம் வழங்க உத்திரவு வழங்குகிறான். அதனை, கேள்வி என்ற அதிகாரியும் வரியிலார் எழுதிட்ட உள்வரியும் பதிவு செய்கின்றனர். ஆணை கல்லிலும் செம்பிலும் வெட்டவும் உத்திரவாகிறது.

**சீவல்லபன்:**

அரசன் ஆணைக்கு, கேரளசிங்க வளநாட்டு வெளியாற்றூர் உடையான் சீவல்லபன் சீ கையிலாயமுடையான், தியாகபரண மூவேந்த வேளான் ஆகியோர் உடன்பட்டு கையொப்பம் இட்டுள்ளனர். காலம் மன்னனின் ஒன்பதாம் ஆட்சியாண்டு நாள் 1430 ஆகும். (கி.பி.1203)

**பல்லவராயன்:**

மதுரோதைய வளநாட்டு கானாட்டிருக்கை அரயன் அமுத நம்பியான வய நாட்டரையன் அண்ட நாட்டு பெருமணலூர் மந்திரி ஆதித்த தேவனான பல்லவரையன் என்பவன், வேண்டுதலை ஏற்று, இறைவன் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிபந்தங்களுக்கு அந்தராயம் உட்பட இறையிலியாக 6½, மா நிலம் தானமாக அரசன் வழங்கியுள்ளான்,

**எலிவாரம்:**

இதற்கு முந்தைய கல்வெட்டு (90/1907) இக்கல்வெட்டுடன் தொடர்புடையது. இரண்டும் 6½ மா அளவுள்ள

எலிவாரம் என்ற நிலத்தையே சுட்டுகின்றன. குலசேகரனை யடுத்து (1190-1218) விக்கிரம பாண்டியன் (1218-1232) நாட்டையாண்டுள்ளான். குலசேகரனுடைய இக்கல்வெட்டின் காலம் 1203-1204 எனலாம். 'பூவின்கிழத்தி' என்ற மெய்க் கீர்த்தியினை இக்குலசேகரன் கொணடுள்ளான். எனினும் இக்கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லாததுடன் மெய்க் கீர்த்தியும் இல்லை. வேறொரு கல்வெட்டில் ஆட்சியாண்டுடன் மன்னன் மெய்க்கீர்த்தியும் உள்ளது. அக்கல்வெட்டிலும் இங்குக் குறிக்கப்படும் எலிவாரம் என்ற நிலம் உளளது' காலிங்கராயன் என்பவனும் குறிக்கப்படுகிறான். ஆகவ இக்கல்வெட்டும் சடையவர்மன் குலசேகரனுடையது என உறுதியாகக் குறிப்பிடலாம்.

**சடையவர்மன் குலசேகரன் :**

இக்கல்வெட்டை மத்திய அரசு கல்வெட்டுத் துறை, விக்கிரம பாண்டியன் கல்வெட்டு என்று தென்னிந்திய கல் வெட்டுகள் தொகுதி 23 இல் பக்கம் 7 மற்றும் 16 இல் குறிப் பிட்டுள்ளது. விக்கிரம பாண்டியனுடைய 13 ஆம் ஆட்சி யாண்டில் கூடிய இரு கல்வெட்டுகளில் (90/1907 மற்றும் 97 A /1907) எலிவாரம் என்ற நிலம் குறிக்கப்படுவது போலவே சடையவர்மன் குலசேகரனுடைய 13 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் குறிக்கப்படுகிறது. எனவே மன்னன் பெயர் குறிக்கப்படாத 91/1907 கல்வெட்டில் வரும் எலிவாரம் என்ற தொடரை மட்டும் வைத்து விக்கிரம பாண்டியன் கல்வெட்டாக நினைக்கக்கூடாது. அதிகாரியின் பெயர் இரண்டில் ஒன்றாக வருவதுடன் நிலத்தின் பெயரும் ஒன்றாக வந்துள்ளதால் சடையவர்மன் குலசேகரன் (1190-1218) கல்வெட்டென, 91/1907 கல்வெட்டைக் கருதுவதே பொருத்தமாகும். குலசேகரனும் விக்கிரம பாண்டியனும் சமகாலத்தில் நாடாண்டுள்ளதால் இருவர் கல்வெட்டுகளிலும் எலிவாரம் என்ற நிலம் இடம் பெற்றுள்ளன எனலாம்.

**சுந்தரபாண்டியன்:**

நாகேஸ்வரமுடையார் கருவறையின் வடக்குச் சுவரில் கூடிய சுந்தர பாண்டியனுடைய ஆறாம் ஆட்சியாண்டு

கல்வெட்டு, கி.பி. 1222 இல் விளக்கு வைக்க, தானம் தந்ததைக் குறிப்பிடுகிறது.

**ஆச்சான் திக்கன்:**

மலை மண்டலத்து மயிலை கோட்டு ஆச்சான் திக்கன் பாண்டிய ஈச்சுரமுடைய நாயனாற்குத் தினம் விளக்கு வைக்க வேண்டி ஸ்ரீ பண்டாரத்தில் 6¼ அச்சு செலுத்துகிறான். அன்றாடு குடங்கொடு கோயில் புகுவார் செலுத்துவதாகச் சம்மதித்துச் சிவப்பிராமணர் காசினைப் பெற்றுக் கொண்டு கல்வெட்டு வெட்டி வைக்கின்றனர். சிவப்பிராமணர் சார் பாகக் கீழ்க் கண்டவர்கள் ஒப்பமிட்டுள்ளார்கள்.

1) சட்டன் மானதி ஈச்சுரனான வீராபரண பட்டன்,
2) எச்சவராகன் ஆண்பாலான கோதுகுல பட்டன்,
3) உமையாள்வான் ஆவின் கன்றான் நியாய பரிபாலன் பட்டன்,
4) பொன்னம்பி வெள்ளந் தாங்கி ஆன திருச்சிற்றம்பல பட்டன்.
5) பொன்னம்பி உமையாள்வான் ஆயிரத்தளி பட்டன்
6) பெருமாள் காமராச பட்டன்,

தானம் வழங்கியவன் சேர நாட்டவன் என்று அறிகிறோம்.

**பூவின் கிழத்தி:**

இக்கல்வெட்டின் அருகிலேயே 'பூவின் கிழத்தி' என்று தொடங்கும் 'சடாவர்மன் குலசேகரனுடைய' மெய்க்கீர்த்தியின் ஒரு பகுதி மட்டும் (4 வரி மட்டும்) உள்ளது. இவனுடைய வேறு கல்வெட்டு ஏற்கனவே கண்டோம்.

**திருஞான சம்பந்தர் திருக்காவணம்:**

கோயில் முன் மண்டபச் சுவரில் கூடிய மன்னன் பெயர் ஆட்சியாண்டு குறிக்கப்படாத வேறொரு கல்வெட்டு, பதினெட்டு நாட்டு நாட்டார் கூடி எடுத்த முடிவினைக் கூறுகிறது. திருஞான சம்பந்தர் திருக்காவணத்தில் ஸ்ரீ ருத்ர மாஹேஸ்வரர் உட்பட பதினெண் விஷயத்தார் நிறைவற நிறைந்து குறைவறக் கூடியிருந்து விவாதிக்கின்றனர்.

**திருஞான சம்பந்தர் மடம்:**

பாண்டி மண்டலத்து அண்ட நாட்டு திருமாடவனூரில் திருஞான சம்பந்தர் தளம் இருந்துள்ளது. முள்ளி நாட்டு கல்லிடைக்குறிச்சி நாலாயிர ஈஸ்வரமுடைய மாஹேஸ்வரரும் நிலையுடைய பாண்டீஸ்வரமுடைய மாஹேஸ்வரரும் முரண்பட்டனர். ஏன் எனில் இரு கோயில்களைச் சேர்ந்த மாஹேஸ்வரரும் ஸ்ரீருத்ரரும், திருஞான சம்பந்த தளம் (மடம்? ) தொடர்பாக முரண்பட்டனர்.

**வைராவிக்குளம்:**

'திராவினைத்தீர்த்தான்' என்பவன் இது தொடர்பாக வாதிட்டுள்ளான். கல்வெட்டு முழுமை பெறாததால் நாலாயிர ஈஸ்வரமுடைய நாயனார் கோயிலைச் சேர்ந்தவருக்கு உரிமை ஆயிற்றா? நிலை உடைய பாண்டீஸ்வரமுடைய நாயனார் கோயிலைச் சேர்ந்தவருக்கு உரிமையாயிற்றா? என்று அறிய இயலவில்லை. இரு கோயில் திருமடை விளாகத்தைச் சுற்றி ஸ்ரீருத்ரரும் மாஹேஸ்வரரும் வாழ்ந்துள்ளனர். திருஞான சம்பந்தர் திருமடத்தின் கிளை இங்கிருந்திருக்க வேண்டும். வைராவிக் குளத்தையொட்டி உள்ள திருமலை நாயக்கர் கல்வெட்டிலும் (1638) திருஞானசம்பந்தர் மடம் இடம் பெற்றுள்ளது.

**சாணாயிரமுடையார் கோயில்:**

இக்கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு இதை 14 ஆம் நூற்றாண்டாகக் கருதலாம். நாலாயிர விண்ணகர் எம் பெருமான் கோயில் பெயர் போல், நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயில் பெயர் இங்கு இருந்துள்ளது. சாணாயிரமுடையார், முழமாயிரமுடையார், ஓராயிரஈஸ்வரமுடையார் கோயில்கள் தருமபுரி நகரில் இருந்தன. கல்லிடைக்குறிச்சியிலும் நாலாயிரம் என்ற பெயருடன் சிவன் மற்றும் விஷ்ணு கோயில்கள் இருந்துள்ளன. இன்று இவ்விரண்டு கோயில்களும் இல்லை.

**ஒரே பெயரில் சைவ வைணவக் கோயில்கள்:**

திவ்விய பிரபந்தம் 4000 பாடல்களைக் கொண்டது. எனவே இப்பெயரில் நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில் தோன்றியது இயல்பாகும். எண்ணாயிரம், மூவாயிரம் என்ற எண்களில் பிராமணர் குடிகள் உள்ளன. அதே போல் நாலாயிரம் என்ற குடியின் பெயரில் இச்சிவன் கோயில் தோன்றியதா? அன்றி வைணவக் கோயில் பெயரையொட்டிச் சிவன் கோயில் பெயர் ஏற்பட்டதா? தெரியவில்லை. நாகேஸ்வரமுடையார் கோயில் முன் மண்டபத்தின் கிழக்குச் சுவரில் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் (1237) வெட்டப் பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது.

**சனி எண்ணெய்க்காப்பு:**

நிலை உடைய பாண்டீஸ்வர முடையாருக்கு ஒவ்வொரு சனிக்கிழமையன்று சனி எண்ணெய்க் காப்புக்கு ஏற்பாடு செய்த விவரம் ஒரு கல்வெட்டில் காண்கிறோம். மலைமண்டலத்து குறமத்தூர், குறமத்தூர் காமன் திருவரங்கனான நாவல்லறை நாயர் என்பவர் சனிக்கிழமை தோறும் எண்ணெய் அபிடேகம், செய்ய மாதத்திற்கு 5 உழக்கு கணக்கிட்டு அதற்காக அன்றாடு நல்லானை அச்சு ஒன்றினை எண்ணெய் வாணியர் மூவரிடம் அளித்துள்ளார்.

**ஆனை அச்சு:**

ஆனை அச்சு என்பது யானைச் சின்னம் பொறிக்கப்பட்ட காசுபோலும். இக்காசு அப்போது வழக்கில் (செலாவணியில்) இருந்த காசு எனலாம்.

**ற்குறி:**

1) சிவன் சங்கரம்பாடியாரி விளரி திருவனான நகர மாயிலாட்டி,

2) பத்மநாப உடையான் மயிரிபாலன்,

3) செயங்கொண்டான் அந்தரியானை திருஞான சம்பந்தன்,

இம்மூன்று வாணியரும் தற்குறி (எழுதப் படிக்க தெரியாதவர்) என்பதால் கண்ணன் அரியகனான ஆலால சுந்தர தச்சன் என்பவன், இவர்கள் வாயால் சொல்லக் கல்வெட்டினை வெட்டி வைக்கிறான்.

**நாயர்:**

தானம் செய்தவன் கேரளாவைச் சேர்ந்தவன் என்பதுடன் நாயர் என்று அழைக்கப்பட்டுள்ளதையும் கவனிக்க வேண்டும். கல்வெட்டில் இடம் பெறும் சுந்தர பாண்டியன் 1216 முதல் 1244 வரை நாடாண்ட மன்னன் ஆவான். அம்பா சமுத்திரம் வட்டத்தில் உள்ள பாண்டியர் கல்வெட்டுகள் பல, சேர நாட்டைச் சேர்ந்தவர்கள் தானம் தந்துள்ளமையைக் குறிப்பிடு கின்றன. கல்லிடைக் குறிச்சியிலும் அப்போக்கு உள்ளது எனலாம். பதிமூன்றாம் நூற்றாண்டிலேயே நாயர் வழக்கு இருந்துள்ளதை இக்கல்வெட்டு மூலம் அறிகிறோம்.

**கோவிந்த புத்தூர்:**

தமிழர், சனி தோறும் பன்னெடுங் காலமாக எண்ணெய்த் தேய்த்துத் தலை மூழ்குவர். 'சனி நீராடு' என்பது தலைக்கு எண்ணெய்த் தேய்த்து மூழ்குவதையே குறிக்கும். ஒரு சிலர் அருவியில் நீராடுவதைக் கூறுவர். இது ஏற்புடையதன்று. திருச்சி மாவட்டம் கோவிந்த புத்தூரில் உள்ள ஒரு கல்வெட்டு பிராமணர்களும் சிவயோகிகளும் 52 வாரம் கொண்ட ஓராண்டில் 52 சனிக்கிழமையும் எண்ணெய்த் தேய்த்துக் குளிக்க நிபந்தம் பெற்றதைக் கூறுகிறது. தானம் தந்தவன் தன்னைப் போலவே எண்ணி சனிதோறும் இறைவனுக்கு எண்ணெய்க் காப்புக்கு ஏற்பாடு செய்துள்ளான்.

**களக்குடி:**

'பூவின் கிழத்தி' என்று தொடங்கும் குலசேகரதேவனுடைய 18 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி.1203) நாகேஸ்வர முடையார் கோயிலில் அம்மன் சன்னிதியில் இருந்து மத்திய அரசு கல்வெட்டுத்துறை படியெடுத்து பதிப்பித்துள்ளது. அம்மன் சன்னிதி என்பது பழைய சிவன் கோயில் என்று முன்பே குறிக்கப்பிடுள்ளேன். குலசேகர தேவர், ஆட்சியாண்டு

ஒன்பதாம் நாள் 1430 இல் களக்குடிக்கு முகாம் வந்திருந்தார். அப்போது பிறப்பித்த ஆணையே இக்கல்வெட்டாகும்.

**நிபந்தங்கள்:**

முள்ளி நாட்டு ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து தென் பிடாகை கல்லிடைக் குறிச்சி நாலாயிர ஈச்சுரமுடையாற்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் படிகளுக்கு (நிபந்தங்களுக்கு) அந்தராயம் உள்பட தேவதான இறையிலியாக இவ்வூர்ச் சபையிடமிருந்து இறைவன் பெயரில் பல்வேறு இடங்களில் மொத்தம் நாலே அரை மா நிலம் விலைக்கு வாங்கப்படுகிறது.

**இறையிலிநிலம்:**

இறையிலியாக நிலங்கள் வழங்க மன்னன் ஆணையிட்டான். கல்லிலும் செம்பிலும் ஆணையை எழுதிக் கொள்ளவும் மன்னன் திருவாய் மொழிந்தருளினான். இவ்வாணையில் நந்திபன்மன் என்ற அதிகாரி கையெழுத்திட்டு அனுப்பி வைத்துள்ளார்.

**எல்லைகள்:**

தென் பிடாகை எலிவாரத்து கொண்ட நிலம் எல்லை வருமாறு. கிழக்கில் பரஞ்சோதி பெரும்பிலாறு, மேற்கு இரண்டாம் கண்ணாறு, தென்னெல்லை ஒருப்பிளிப்பாறைக் குளம், மேல் எல்லை திரு நீற்றுச் சோழச் சிலைசெட்டி வாரத்து உழுது வருகிற வயல்கள். வடவெல்லை சாத்தனூர் கால்வாய் ஆகும்.

**அதிகாரிகள்:**

கேள்வியும் வரியிலியார் எழுதிட்ட உள்வரியும் தரச் சொன்னோம் என்று ஆணை உள்ளது. தானத்தை ஏற்று ஒப்பமிட்டவர் பெயர்கள் இறுதியில் உள்ளன.

1) கேரள சிங்க வளநாட்டு வெளியாற்றூருடையான் ஸ்ரீ வல்லபன் ஸ்ரீ கயிலாய முடையானான தியாகபரண மூவேந்த வேளான்,

2) மதுரோதைய வளநாட்டு கானநாட்டிருக்கை உழக்குடி அரையன் அமுதன் நம்பியான பழநாட்டரையன்,

3) அண்ட நாட்டு பெருமணலூர் பகவதி ஆதித் தேவனான பல்லவராயன்.

மன்னனின் ஒன்பதாவது ஆட்சியாண்டு நாள் 1438இல் அதாவது மன்னன் உத்தரவிட்டு 8 நாள்கள் கழித்து மூவேந்த வேளான் ஆணையை நிறைவேற்றினான். மன்னனைத் தேவ தானமாக வரி நீக்கி வழங்குமாறு முதலில் வேண்டிக் கொண்டவன், ஐய்யன் காலிங்கராயன் ஆவான்.

**பரஞ்சோதி பெரும்பிலாறு:**

நாகேஸ்வரம் உடையார் கோயில் அம்மன் சன்னிதியில் கூடிய மற்றோர் கல்வெட்டினைக் கல்வெட்டுத்துறை படியெடுத் துள்ளது. கி.பி.1229 இல் அதாவது மாறவர்மன் விக்கிர பாண்டியனுடைய 11ஆவது ஆட்சியாண்டில் வெட்டப் பட்டது. 'திருமகள் ஜெயமகள்' என்றமெய்க்கீர்த்தியுடன் கூடிய இக்கல்வெட்டு, ராஜராஜ சதுர்வேதி மங்கலத்து மகாசபை கல்லிடைக்குறிச்சி நாலாயிர ஈஸ்வரமுடைய நாயனாற்கு நிலத்தை விற்றுத் தந்ததைக் குறிப்பிடுகிறது. நிலத்தின் அளவு 6½ மா. பின் எல்லைகள் குறிக்கப்படுகின்றன. தான நிலத் திற்குக் குலசேகர பாண்டியன் காலத்தில் வரிவிலக்குப் பெறப் பட்டதை 97/1907 கல்வெட்டில் காணலாம். இதே போல் 90/1907 இல் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு 6½ மா நிலத் தினைக் குறிப்பிட்டதை ஏற்கனவே கண்டோம்.

**உமையாண்டார்:**

நாகேஸ்வரமுடையார் கோயிலில் உள்ள அம்மன் சன்னிதியில் கூடிய மாறவர்மன் குலசேகர தேவனுடைய 32 ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டின் சாரம் வருமாறு: கல்லிடைக் குறிச்சியில் உடையார் நாலாயிர ஈஸ்வரமுடைய நாயனாற்குச் சொக்கன் வித்தகன் என்பவன் திருவீதி நாச்சியார் உமையாண்டாரை (ஐம்பொன் சிலை) உகந்தருளப் பண்ணுவித்தான். காலம் கி.பி. 1299–1300. க்ஷத்திரிய சிகாமணிபுரத்து கம்மாளர் அனைவரும் ஒன்று கூடி

மேற்படி நாச்சியார்க்குச் சித்திரைத் திருநாளுக்குத் திருநாள் படிக்கு ஆண்டொன்றுக்குப் பத்துக் கலனே தூணி பதக்கு அறுநாழி நெல் அளக்க விழைகின்றனர்.

**திருவீதி நாச்சியார்:**

இவ்வாறு வழங்க கம்மாளர் தலறும் பட்சத்தில் மண்கலம் தகத்து வெண்கலம் பறித்துக் கொள்ளலாம் என முடிவாகிறது. ஒரோரங் காலங்களில் திருநாள் நடைபெறாவிடில் மேற்படி நெல்லைக் கொண்டு அமுதுபடி, சாத்து படியாக தினமும் செலவழிக்கலாம். நெல் அளக்குமிடத்து கொல்லர்க்கு, தச்சர்க்கு, தட்டார்க்குத் திருமுன்னொடுக்காக மூலற்கு ஆறு நாழி நெல் அளக்க உடன்பாடாகிறது. கம்மாளர் சார்பாக நாலாயிரக் கொல்லனும் செம்பியதரைய தச்சனும் உடன் படுகின்றனர். இவர்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் என்பதால் முறையே காலிங்கராயனும் நகரத்தட்டானும் இவர்கள் சார்பாக ஒப்பமிட்டுள்ளார்கள்.

அம்மன் செப்புச் சிலை செய்த விபரமும் அம்மனுக்கு ஆண்டுதோறும் கம்மாளர் சித்திரை விழா எடுத்த விபரமும் அபூர்வமாக ஆண்டு விழா நின்று போகும் போக்கும் இக் கல்வெட்டில் காண்கிறோம். விழா நடைபெறாவிடில் விழாவுக்கென ஒதுக்கிய நெல் கோயிலில் வழங்கி விட வேண்டும். சித்திரை மாதச் செலவாக இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது ஏற்பாடாகும்.

**சொக்கன் வித்தகன்:**

கல்வெட்டில் இடம்பெறும் முதலாம் மாறவர்மன் என்பவன் 1268 முதல் 1318 வரை நாடாண்டவன். தானம் வழங்கிய ஆண்டு கி.பி.1299 அல்லது 1300 ஆகும். இவனுடைய திருமால் உகந்தான் கோட்டைக் கல்வெட்டு தேவரடியாரீ களுக்கு வழங்கிய உரிமைகளைக் கூறுகிறது. ஐம்பொன் சிலையைச் சொக்கன் வித்தகன் வழங்கினான். வீதி உலாவரும் ஐம்பொன் சிலையின் பெயர் வீதி நாச்சியார் உமையாண்டார் என்று காண்கிறோம்.

**திருவோத்தூர்:**

திருவோத்தூர்க் கல்வெட்டு ஒன்று, திருவீதி ஆண்டார் என வீதி உலாவரும் உற்சவ மூர்த்தியைக் குறிப்பிடுகிறது.

**கம்மாளர்:**

கம்மாளர், பஞ்ச கம்மாளர் என வழங்கப்படுவர். இவர்களுடைய கல்வெட்டுகள் பல ஊர்களில் உள்ளன. சில கல்வெட்டுகளின் மூலம், உரிமைக்காக இவர்கள் போராடியதைக் காண்கிறோம். தொழிலாளர் வர்க்கத்தைச் சேர்ந்த கம்மாளரில் மூன்று பிரிவினர் இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளனர். கல்வெட்டில் வரும் கொல்லனும் தச்சனும் தற்குறி என்றும் அறிந்தோம். சதுர்வேதி மங்கலங்களிலும் கம்மாளர்க்குத் தனியாகத் தெருக்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. இதனை எசாலம் செப்பேட்டிலும் காணலாம்.

**சேத்திரபாலர்:**

குலசேகரனுடைய ஆட்சியின் போது கி.பி.1214–15 வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று சேத்திரபாலர் திருமேனி எடுத்த விபரத்தைத் தெரிவிக்கிறது. 'பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப' என்ற மெய்க்கீர்த்தியுடன் கூடிய முதலாம் சடையர்மன் குலசேகர தேவனின் 25 ஆவது ஆட்சியாண்டில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டது.

**பிரம்மாதிராஜன்:**

முள்ளி நாட்டு ராஜராஜ சதுர்வேதி மங்கலத்துத் தென்பிடாகை கல்லிடைக் குறிச்சியில் உடையார் நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயிலில் திருநறையூர் காக்கு நாயகன் சீவல்லபனான உத்தம சோழ பாண்டிய பிரம்மாதிராஜன் என்பவன் 'க்ஷேத்ரபாலர் திருநிலை அழகிய பிள்ளையாரை' எழுந்தருளிவித்துள்ளான்.

**விக்கிரமன்:**

மலை மண்டலத்து மயிலைக்காட்டு ஆச்சன் திருவிக்கிரமன் அமுது படிக்காக 16 அச்சு (காசு) முதலீடாக வைத்துள்ளான். நாள் ஒன்றுக்கு நானாழி அரிசி வீதம் கணக்கிடப்பட்டு மேற்படி காசு பெறப்படுகிறது. 16 அச்சிலிருந்து வரும் வட்டியைக்

கொண்டு (1) கறியமுது (2) உப்பமுது (3) மிளகமுது (4) நெய்யமுது (5) தயிரமுது (6) அடைக்காயமுது 7) இலையமுது ஆகியவை வழங்க வேண்டும். சிறுகாலைச் சந்தி, இரவுச் சந்தி இரண்டுக்கும் நானாழி அரிசி செலுத்த, சிவப்பிராமணர் உடன்படுகின்றனர். இக்கொடை கல்லிலும் செம்பிலும் வெட்டப்படுகிறது. ஸ்ரீ மாகேஸ்வரக் கண்காணி யோடு கீழ்க்கண்ட பட்டர்கள் அரிசி வழங்க சம்மதிக் கின்றனர்.

**கோயில் பட்டர்கள்:**

1) காசிப கோத்திரத்து சட்டன் மானதீஸ்வரமுடை யானான வீராபரணபட்டன்,

2) மேற்படி கோத்திரத்து சட்டன் பெருமானான கிராம ராச பட்டன்,

3) காசிப கோத்திரத்து உமையாள்வான் ஆவின் கன்ற னான நியாய பரிபால பட்டன்,

4) கவிசிய கோத்திரத்து பொன்னம்பி வெள்ளம் தாங்கி னான் ஆன திருச்சிற்றம்பலபட்டன்,

5) பொன்னம்பி உமையாழ்வானான ஆயிரத்தளி பட்டன்,

6) பொன்னம்பி ஸ்ரீ கயிலாயமுடையான்,

7) காசிவ கோத்திரத்து எச்சவராகன் ஆண்டமாலான கோதுகுல பட்டன்,

8) எச்சவராகன் ஆவின் கன்றான பன்மாயேஸ்பர பட்டன்,

9) எச்சவராகன் மகாதேவ பட்டன்.

**சோழ நாட்டவர்:**

சேத்திரபாலர் என்ற ஐம்பொன் சிலையைச் செய்தளித்த காக்கு நாயகன், திருநறையூர் என்ற ஊரைச் சேர்ந்தவன். திருநறையூர் சோழ நாட்டில் கும்பகோணம் அருகே காவிரி

பாயும் பகுதியில் உள்ள ஊராகும். இவன் ஸ்ரீவல்லபனான உத்தம பாண்டியன் என்ற பட்டப்பெயருடன் இருந்துள்ளான். பாண்டிய மன்னர்களிடம் திறமை மிக்கச் சோழ நாட்டவர் பலர் உயர் அதிகாரிகளாக இருந்துள்ளனர். பிரம்மாதிராஜன் என காக்கு நாயகன் அழைக்கப்படுவதால் படைத் தலைவரா கவோ அமைச்சராகவோ இருந்திருக்க வேண்டும்.

**ஆச்சான் விக்கிரமன்:**

இத்திருமேனியின் அமுதுபடிக்குக் கேரள நாட்டைச் சேர்ந்த ஆச்சான் விக்கிரமன் தானம் தந்துள்ளான். 16 அச்சினை முதலீடாக வைக்கிறான். இதிலிருந்து வரும் வட்டி கொண்டு இருவேளை திருவமுது காட்ட வேண்டும். சிவப்பிராமணரும் மாஹேஸ்வரக் கண்காணிகளும் இதற்கு உடன்படுகின்றனர்.

**மானேந்தியப்பர்:**

சிவப் பிராமணர்களில் ஒருவன் பெயர் மானதீஸ்வரமுடையான் என்று பார்க்கிறோம். இப்பெயர் மானேந்தியப்பர் என்ற இவ்வூர் இறைவன் பெயரை நினைவூட்டுகிறது. எனவே மானேந்தியப்பர் கோயில் கி.பி.1214க்கு முன்பே இருந்திருக்க வேண்டும் எனலாம்.

**முருகர் திருமேனி:**

நாகேஸ்வரமுடையார் கோயில் அம்மன் சன்னிதி மேற்குச் சுவரில் உள்ள சுந்தர பாண்டியன் கல்வெட்டு, தேவரடியார் ஒருத்தி இளைய பெருமாள் என்ற முருகனின் செப்புச் சிலை வழங்கிய தானத்தைக் குறிப்பிடுகிறது.

**சோறாழ்வி;**

கல்லிடைக் குறிச்சி உடையார் நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயிலில், கோயில் தேவரடியாரான 'சோறாழ்வி அழகிய நாச்சியாள் குன்றம் எறிந்த பெருமாள் அம்மை' என்பவள், பெருமாள் சிலையினை எழுந்தருளிவித்துள்ளாள். இச் சிலையை எழுந்தருளிவித்ததுடன் வழிபாட்டுக்காக ஏழு அச்சும் இவள் முதலீடாக அளித்துள்ளாள். இதில் இருந்து வரும் வட்டி கொண்டு திருவமுது படைக்க வேண்டும் என்று

ஏற்பாடாகிறது. பெருமாள் சிலை என்பது சிவனின் இளைய பிள்ளையான முருகனைக் குறிக்க வேண்டும். சிலை செய்து வைத்த தேவரடியார் பெயரில் 'குன்றம் எறிந்த பெருமாள்' என்ற பட்டப் பெயர் இருப்பதால் முருகன் மீது இவளுக்கிருந்த பக்தியினைக் காண்கிறோம். இத்தேவரடியார் அழகிய வடிவமுடையவர் என்பதுஇவள் பெயர் கொண்டே அறியலாம். தமிழ் நாடெங்கிலும் உள்ள பல கோயில்களில் தேவரடியார்கள் தானங்களைக் காண்கிறோம்.

**செய்யாண்டை:**

குறிப்பாகத் திருவோத்தூர் உடையார் கோயிலில் கி.பி.1285இல், செய்யாண்டை ஆன சம்புவராய நாச்சி என்ற தேவரடியார் சுப்பிரமணிய பிள்ளையாரை எழுந்தருளி வித்துள்ளார். கல்லிடைக்குறிச்சியில் சோறாழ்வி அழகிய நாச்சி என்பவள் முருகனை எழுந்தருளி வித்ததுடன் வழிபாட்டுக்கும் வழி செய்தது பாராட்டுக்குரியது. திருவமுது தினம் படைக்கக் கீழ்க்கண்ட நபர்கள் சம்மதிக்கின்றனர்.

**திருவுண்ணாழிகை சபையார்:**

1) சட்டன் மானதீசுர முடையானான வீராபரண பட்டன்,
2) சட்டன் பெருமாளான கிராமராச பட்டன்,
3) பொன்னம்பி வெள்ளம் தாங்கினான் திருச்சிற்றம்பல பட்டன்,
4) பொன்னம்பி உமையாழ்வானான ஆயிரத்தளி பட்டன்,
5) கூபகராய பட்டன்,
6) கண்ணாளன் பட்டனான ஐந்நூற்றுவ பட்டன்,
7) கோதுகுல பட்டன்,
8) சிறியான் சேவகர் தேவனான நாற்பத்தெண்ணாயிர பட்டன்.

ஆகியோர் அமுது படைக்கவும் விளக்கு வைக்கவும் உடன் படுகின்றனர்.

**ஏழு அச்சு:**

மேற்கண்ட எண்மரில் முதலாவதாக வந்துள்ள மூவர் கல்வெட்டித் தந்ததுடன் கையொப்பமும் இட்டுள்ளார்கள். தினம் அமுது படிக்காக அரிசி இரு நாழி வழங்கப்பட வேண்டும். அமுதுபடியுடன் கறியமுது, மிளகமுது, நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது, இலையமுது, ஆகியவை வழங்க வேண்டும். இதற்கு 7 அச்சு முதலீடாக வைக்கப் படுகிறது. முருகனாகிய சுப்பிரமண்ய பிள்ளையார் உருவான காலம் கி.பி.1220–21 ஆகும். அதாவது சோணாடு கொண்ட சுந்தர பாண்டிய தேவனுடைய 5 ஆம் ஆட்சியாண்டில் இச் சிலை செய்விக்கப்பட்டது. சோணாடு கொண்ட சுந்தர பாண்டியன் கி.பி.1216 முதல் 1244 வரை பாண்டிய நாட்டை ஆண்ட மாமன்னன் என்பதை நாமறிவோம்.

**நந்தவனம்:**

நாகேஸ்வரமுடையார் கோயிலில் உள்ள அம்மன் சன்னிதி கருவறை வடக்குச் சுவரில் கூடிய குலசேகரப் பாண்டியனுடைய கல்வெட்டு நந்தவனம் ஒன்று அமைத்ததைக் குறிப்பிடுகிறது.

**குலசேகரன்:**

மாறவர்மன் குலசேகர தேவற்கு யாண்டு 20 ஆவது (கி.பி.1288) ஆட்சிக்காலத்தில் நாலாயிர ஈஸ்வரமுடையார்க் கும் நிலையஉடைய பாண்டீஸ்வரமுடையார்க்கும் பூக்கள் வேண்டி, அதிகைமானார் குலசேகரன் என்பவன் திருநந்தவனம் ஏற்படுத்தியுள்ளான். இந்த நந்தவனத்தின் எல்லையைக் கூறும் போது விஷ்ணு கோயிலான நாலாயிர விண்ணகர் எம்பெருமான் திருநந்தவனம் குறிக்கப்படுகிறது. இந்த நந்தவனத்திற்குக் கிழக்கும் எம்பெருமான் திருவிடை யாட்டத்துக்குத் தெற்கும் சூலக்கல் நாட்டப்படுகிறது. வரி நீக்கிய தானம், கல்லிலும் செம்பிலும் வெட்டப்படுகிறது.

சாசனத்தில் ஒப்பமிட்டவர்கள் வருமாறு:

1) திருக்கடவூர் ஆத்தான்,

2) குண்டூர் ஸ்ரீகிருஷ்ணன்,

3) பாடகத்து கோவிந்தசர்மன்,

4) குரோவிச்சதுக்க நாராயணன்,

5) சோமாசி,

6) வங்கிபுத்து கேசவன்,

7) கருநல்லூர் இளநாயகன்.

**திருக்கடவூர் ஆத்தான்:**

மேற்கண்ட எழுவரில் முதலில் வருபவன் திருக்கடவூரைச் சேர்ந்தவன். இவன் பெயர் ஆத்தான் என்றுள்ளது. மயிலாடுதுறைக்கருகில் பாடல் பெற்றத் தலமான திருக்கடவூரே இங்குள்ள ஊர் எனலாம். இங்குள்ள அபிராமி அம்மன் புகழ் பெற்ற அம்மன் ஆவார். அபிராமி பட்டர் என்பவர் மராட்டியர் காலத்தில் இவ்வம்மன் மீது அந்தாதி பாடியுள்ளார். 'ஆத்தாளை எங்கள் அபிராமவல்லியை' என்று தொடங்கும் பாடல் அவ்வந்தாதியில் ஒன்றாகும். 'ஆத்தாள்' என்ற சொல்லின் அடிப்படையில் ஒருவன் ஆத்தான் என்று கி.பி.1288 இல் பெயர் வைத்துள்ளான் என்பதை நோக்க, கி.பி. 13 ஆம் நூற்றாண்டிலேயே பாண்டிய நாட்டிலும் இவ்வம்மன் மகிமை இருந்துள்ளதைக் காண்கிறோம். அத்தன் அல்லது அத்தா என்ற சொல் தந்தை என்ற பொருளில் மட்டுமின்றிச் சிவன் என்ற பொருளிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது. அவ்வாறே ஆத்தாள் என்பது தாய் என்ற பொருளுடன் சக்தியையும் குறிக்கும் எனலாம்.

**அம்மன் கோயில்கள்:**

பொதுவாகப் பாண்டியர் மதுரை மீனாட்சிக்கு மட்டு மின்றிப் பல்வேறு ஊர்களில் அமைந்துள்ள அம்மன் கோயில் களுக்கும் தானம் தந்து வழிபட்டுள்ளமை கல்வெட்டுகளில்

காண்கிறோம். பாண்டியர்களுடைய அதிகாரிகளும் இவ்விதம் நடந்து கொண்டிருந்தால் வியப்பென்ன உள்ளது? திருக்கடவூர் ஆத்தான் நீங்கலாக எஞ்சிய பலருடைய பெயர்களும் வைணவப் பெயர்களாகவே உள்ளன. எனவே நாலாயிர விண்ணகர் பெருமாள் கோயில் நிர்வாகத்திலும் இவர்கள் பெரும் பங்கு பெற்றிருக்கலாம்.

**சீவல்லப தேவி:**

சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவருடைய ஆறாவது ஆட்சியாண்டில் கி.பி.1220-21இல் நாலாயிர ஈச்சுரமுடையார் கோயில் தேவரடியாரில் உய்யக்கொண்டான் சீவல்லப தேவி என்பவள், விளக்கு ஒன்று வைக்க 6½ அச்சு கோயிலிடம் வழங்கியுள்ளார். உய்யக்கொண்டார் என்ற சொல் பெரும்பாலும் நாடாரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ள தால் இங்குவரும் தேவரடியார், நாடார் இனப் பெண்ணாகக் கருத வழியுண்டு. உய்யக்கொண்டார் குலம் என்றே நாடார் இனம் குறிக்கப்பட்டுள்ளது.

**சிவப்பிராமணர்:**

கல்வெட்டின்படி சிவப்பிராமணர் தினமும் விளக்கு எரிக்க சம்மதிக்கின்றனர். சிவப்பிராமணர் சார்பாக எட்டு பேர் ஒப்பமிட்டுள்ளனர். இவர்களே குலசேகர தேவனுடைய ஆட்சியின் போது திருவிக்கிரமன் நிபந்தத்தை ஏற்று அமுது படைக்க ஒப்பமிட்டவர்கள் என்பதை ஈண்டுக் குறிப் பிடலாம்.

**தொன்மை வாய்ந்த கல்வெட்டுகள்:**

நாகேஸ்வரமுடையார் கோயில் கல்வெட்டுகள் மொத்தம் 14 பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவைகளில் சடையவர்மன் குல சேகரன் (1190-1216) என்ற மன்னன் காலத்துக் கல்வெட்டுகள் நான்கு உள்ளன. இவற்றில் கி.பி.1203 ஆம் ஆண்டைச் சேர்ந்த குலசேகரனின் 13 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டும் மிகத் தொன்மை வாய்ந்தவை ஒன்றில் மன்னன் பெயர் இல்லை. (91/1907) இதில் நிலைய உடைய பாண்டீஸ் வரமுடையார் என்ற கோயில் குறிக்கப்படுகிறது. வேறொன்

றில் (97/1907) மன்னன் பெயர் மட்டுமின்றி மெய்க்கீர்த்தியும் உள்ளது. இதில் ஆட்சியாண்டுடன் நாளும் சரியாகக் குறிக்கப்படுகிறது. இக்கல்வெட்டில் நாலாயிர ஈஸ்வரமுடையார் பெயர் குறிக்கப்படுகிறது.

எனவே இரு கோயில்களும் ஏறக்குறைய சமகாலக் கோயில்கள் எனலாம். இவ்விரு கோயில்களுடன் பெரிய பிரான் கோயில் என்ற கொசக்குடிப் பெருமாள் கோயிலும் குலசேகர முடையார் கோயிலும் கூட சடையவர்மன் குலசேகரன் (1190–1216) ஆட்சிக் காலத்தில் சிறப்புடன் இருந்துள்ளான்.

**விக்கிரம பாண்டியன்:**

சடையவர்மன் குலசேகரனுக்குப் பின் மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய (1216-1244) ஐந்து கல்வெட்டுகளை நாகேஸ்வரமுடையார் கோயிலில் காண்கிறோம். சற்றொப்ப இதே காலத்தில் ஆட்சியில் இருந்த மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (1218–1232) காலக் கல்வெட்டுகள் இரண்டு உள்ளன.

**சுந்தர பாண்டியன்:**

சுந்தர பாண்டியனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் வெட்டிய இரு கல்வெட்டுகளில் ஒன்றில் சீவல்லப தேவி என்ற தேவரடியார் சுட்டப்படுகிறார். கி.பி. 1158 முதல் 1185 வரை நாடாண்ட சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் பெயரைத் தாங்கிய இவள் சடையவர்மன் குலசேகரன் (1190-1216 காலத்திலும் மாறவர்மன் விக்கிரமன் 1218–1232 காலத்திலும் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (1216–1244) காலத்திலும் வாழ்ந்தவள் ஆவாள்.

**மாறவர்மன் விக்கிரம பாண்டியன்:**

மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் இரு கல்வெட்டுகளும் 11 ஆம் ஆட்சியாண்டில் (1229) வெட்டப்பட்டவையாகும். ஒன்று பாண்டிய ஈச்சுரமுடையாரையும் வேறொன்று நாலாயிர ஈஸ்வரமுடையாரையும் குறிப்பிடுகின்றன.

**மாறவர்மன் குலசேகரன்:**

மாறவர்மன் குலசேகரன் (1268–1318) காலத்திய இரு கல்வெட்டுகளில் இருபதாவது ஆட்சியாண்டு கல்வெட்டு நாலாயிர ஈஸ்வரமுடையார் மற்றும் நிலைய உடைய பாண்டீஸ்வரமுடையார் என்ற இரு கோயில்களையும் ஒருங்கே குறிப்பிடுகின்றன. முப்பத்து மூன்றாம் ஆட்சியாண்டு கல்வெட்டு நாலாயிர ஈஸ்வரமுடையாரை மட்டும் குறிப்பிடுகின்றது.

**14 ஆம் நூற்றாண்டு:**

மன்னன் பெயர் மற்றும் ஆட்சியாண்டு குறிக்கப்படாத கி.பி. 14 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு மேற்கண்ட இரு கோயில்களையும் ஒரு சேர குறிப்பிடுகின்றது. ஆகவே இரு கோயில்களும் அருகருகே இருந்துள்ளது என்பதும் பாண்டியர்கள் இரண்டையும் போற்றி உள்ளார்கள் என்பதும் தெளிவாகிறது.

**அம்மன் சன்னிதி:**

சிவன் கோயில்களில், அம்மன் சன்னிதிகள் தனியாக இருந்ததாகப் பழைய கல்வெட்டுக் குறிப்புகள் இல்லை. ஆகவே நாகேஸ்வரமுடையார் கோயிலில் உள்ள அம்மன் சன்னிதியில் படியெடுக்கப்பட்டதாகக் கல்வெட்டுத்துறை குறிப்பிடும் சன்னிதி உண்மையில் நாலாயிர ஈஸ்வரமுடையாராக இருந்திருக்க வேண்டும்

**சடையன் குலசேகரன்:**

படியெடுத்த 14 கல்வெட்டுகளிலும் சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டுகளே தொன்மை வாய்ந்தவை என்பதால் கி.பி. 1203 க்கு முன் இவ்விரு கோயில்களும் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம்.

# நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில்

**பொறுப்பின்மை:**

இயற்கையின் சீற்றத்தாலும் மக்களின் பொறுப்பின்மையாலும் பாழ்பட்ட கோயில்கள் பலவாகும். திருப்பணி என்ற பெயரில் கல்வெட்டுகளையும் சிற்பங்களையும் வீணடிக்கும் பெரிய மனிதர்களும் உள்ளனர். சிதம்பரத்தில் நடராசர் கோயிலுக்கும் முந்தைய கல்வெட்டுகளையும் சிற்பங்களையும் கொண்டிருந்த அனந்தீஸ்வரர் கோயில் இன்று புத்தம் புதுக் கோயிலாகக் காட்சியளிக்கிறது. கல்வெட்டுகள் எவையும் இன்றில்லை. ஓரிரண்டு பழைய உதிரிச் சிற்பங்கள் வெளியில் போடப்பட்டுள்ளன. நல்ல வேளையாக மத்திய அரசு கல்வெட்டுத்துறை இங்கிருந்த கல்வெட்டுகளைத் திருப்பணிக்கு முன்பே படியெடுத்துவிட்டது.

**கல்வெட்டுத்துறை:**

கல்லிடைக் குறிச்சியில் கீரி கிருஷ்ணர் கோயில் என மக்கள் அழைத்த ஒரு கோயிலில் மத்திய அரசு கல்வெட்டுத் துறை கி.பி. 1907இல் கல்வெட்டுகளைப் படியெடுத்தது இன்று கல்வெட்டுகள் மட்டுமின்றிக் கோயிலே இல்லை. மக்கள் பொறுப்பின்மைக்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். கோயில் இல்லா விட்டாலும் வரலாற்றுக்குப் பெரிதும் துணை புரியும் கல்வெட்டுகளின் அடிப்படையில் இக்கோயில் வரலாற்றினைக் காண்போம்.

**நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில்:**

மத்திய அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கீரி கிருஷ்ணர் என்ற பெயரில் கூடிய கோயிலில் இருந்து பத்துக் கல்வெட்டுகளைப் (103/1907 முதல் 112/1907 வரை) பதிப்பித்துள்ளது. கல்வெட்டுகள் யாவும் நாலாயிர விண்ணகர் ஆழ்வார் என்ற கோயிலைக் குறிப்பிடுவதால் இதுவே பழைய பெயர் எனலாம்.

**ஸ்ரீவல்லப தேவர்:**

கோயிலின் கருவறை வடக்குச் சுவரில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு 'பூதல மடந்தை' என்ற மெய்க்கீர்த்தியுடன் கூடிய மன்னன் குலசேகரனுடைய இரண்டாம் ஆட்சியாண்டுக்குரியது இதனை *1190* முதல் *1216* வரை நாடாண்ட சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டாகக் கல்வெட்டுத்துறை குறிப்பிடுகிறது. உண்மையில் *1162* முதல் *1177* வரை நாட்டையாண்ட சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டே இது எனலாம். இம் மன்னனுடைய தந்தை மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (*1145-1162*) என்பதை அறிஞர் குறிப்பிடுவர். இக்கல்வெட்டில் பெரிய நாயனார் ஸ்ரீவல்லப தேவர் காலத்தில் வழங்கிய தானம் குறிக்கப்படுகிறது.

**பெரிய நாயனார்:**

பெரிய நாயனார் என்பது குலசேகரனின் தந்தை என்பதைச் சொல்லாமல் சொல்கிறது இக்கல்வெட்டு. இக் கோயிலில் உள்ள எல்லாக் கல்வெட்டுகளிலும் இதுவே தொன்மை வாய்ந்தது என்பதாலும் இக்கல்வெட்டில் ஸ்ரீவல்லபதேவர் (*1145-1162*) தானம் குறிக்கப்படுவதாலும் கோயில் கி.பி. *1145* முதல் *1162*-க்குள் எழுப்பப்பட்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரலாம்.

**கொள்ளி விளாகம்:**

சடையவர்மன் குலசேகரனுடைய இரண்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. *1164*) முள்ளிநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுர்வேதி மங்கலத்து தென்பிடாகை கல்லிடைக்குறிச்சி நாலாயிர விண்ணகர் எம்பெருமானுக்கு அமுதுபடி வேண்டி ஸ்ரீவல்லப மன்னர் காலத்தில் கடமையுட்பட தர்மதானம் பண்ணி, திருப்படியில் நீர் அட்டிக்குடுத்த நிலம் புனாலில் 'எழுவக் கொள்ளி விளாகம்'. என்ற பெயருடைய நிலம் ஆகும். சத்திரிய சிகாமணிபுரத்து நகரத்தாரால் வரிநீக்கி இது உறுதி செய்யப்படுகிறது. நில எல்லை வரையறை செய்து கல்வெட்டாக நகரத்தார் வெட்டி வைக்கின்றனர். கீழ் எல்லை கோட்டங்கால் பாறை. மேற்கிட்டு வடக்கு நோக்கிப் போன காலுக்கு மேற்கும் தென் எல்லைப் பாறைக்கு

வடக்கு குடவாயேறட்டி காலுக்கும் வடவெல்லை கிழக்கு நோக்கிப் போன காலுக்குத் தெற்கு ஆகும்.

**பூதலமடந்தை:**

வேறொரு கல்வெட்டும், கருவறை வடபுறச் சுவரில் இருந்து படியெடுத்தது; இதே மன்னனுடையதாகும். காலம் கி.பி. 1173 ஆகும். இக்கல்வெட்டும் பூதல மடந்தை என்ற மெய்க்கீர்த்தியைக் கொண்டுள்ளது. காலம் மன்னன் 11 ஆம் ஆட்சியாண்டாகும்.

**இருக்கை:**

'மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக் கோயில் உள்ளாலை பள்ளிப் பீடமுனையதரையன்' என்ற இருக்கையில் அரசன் அமர்ந்து இருந்த போது கோவிந்த பாடியில் (கல்லிடைக் குறிச்சியில்) உள்ள நாலாயிர விண்ண கரில் நின்றருளிய ஆழ்வார் கோயிலில் பணியாற்றும் ஸ்ரீவைஷ்ணவர்களும் நம்பு செய்வானும் கோயிலுக்கு நிபந் தங்கள் வேண்டும் என்று வேண்டினர். உடனே மன்னன் 5 மா நிலம் வழங்க ஆணையிடுகிறான். ஆணையிடுமுன் குன்றப்பிடாரரும் திருவரங்கச் செல்வரும் நிலம் வழங்க மன்னனிடம் பரிந்துரை செய்துள்ளனர். எனவே மன்னன் ஒன்பதாவதின் எதிராமாண்டின் எதிராமாண்டில் தானம் வழங்குகிறான். அந்தராயம் உட்பட, தேவதான இறையிலியாக இட்டு வரியிலார் எழுத்திட்டு உள்வரி தரச் சொன்னோம் என்று கல்வெட்டுக் கூறுகிறது. 'உள்வரிப்படி கைக்கொண்டு திருப்படி மாற்று நிபந்தங்கள் செலுத்துக' என்று மன்னன் திருவாய் மொழிந்தருளினார். கார் பசானம் விளையும் நிலத்தில் இறைப்படி ஐந்து மா நிலம் வழங்கப்படுகிறது.

**கோவிந்தபாடி:**

பாண்டிய மன்னனின் அரண்மனை இக்கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. கல்லிடைக்குறிச்சி என்ற ஊர் கோவிந்த பாடி என்று வழங்கப்பட்டதை இக்கல்வெட்டு மூலம் அறிகிறோம். இவ்விரண்டு கல்வெட்டுகளையும் கி.பி. 1162 முதல் 1177 வரை ஆண்ட சடையவர்மன் குலசேகரன் கல்

வெட்டுகளாக முதன் முதலில் வரையறை செய்தவர் குடந்தை என். சேதுராமன் ஆவார். கி.பி. 1145 முதல் 1162 வரை நாட்டையாண்ட குலசேகரன் காலத்தில் கல்லிடைக் குறிச்சி என்ற பெயர் கோவிந்தபாடி என வழங்கப்பட்டது. எனினும் பின்னரி பழைய பெயரே தொடர்ந்துள்ளது.

**நம்பு செய்வான்:**

ஸ்ரீ கிருஷ்ணர் கோயில் கருவறை வடக்குச் சுவரில் இருந்த வேறொரு கல்வெட்டு சடையவர்மன் குலசேகரனுடைய பத்தாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்டது ஆகும். 111/1907 என்ற எண்ணில் கல்வெட்டுத்துறை பதிப்பித்துள்ளது. இக், கல்வெட்டும் 112/1907 கல்வெட்டு போன்ற அமைப்பில் உள்ளது. கோயில் வைஷ்ணவர்களும் நம்பு செய்வானும் மன்னனிடம் கோயிலுக்கு வரி விலக்கு வேண்டி முறையிடுகின்றனர். இறையிலியாக நிலம் இடப் பெற வேணுமென்று மானாபர மங்கலத்து நம்பி, மன்னனுக்குச் சொல்ல மன்னனும் உடன்பட்டு ஆணை வழங்குகிறான்.

**காளையார் பள்ளம்:**

ஊற்றுக்குழி விளாகத்துக் காளையார் பள்ளம் நிலம், நான்கு மாவும் கடமையும் வரியும் தருவதான அச்சும் காரிய வாராய்ச்சியும் வெட்டி பாட்டமும் பஞ்சிபீலி சந்திவிக்கரகப் பெறும் பொன் மற்றும் எப்பேர்ப்பட்டனவும் உட்பட தேவ தான இறையிலியாக இட்டு வரியிலாளர் எழுத்திட்ட உள் வரியும் கேள்வியும் தர மன்னர் ஆணையிட்டுள்ளார். இதைக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளவும் அனுமதி அளித்துள்ளார். இவ்வாணையில் அதிகாரிகள் ஒப்பமிட்டுள்ளார்கள்.

**மானாபரண மங்கலம்:**

செவ்விருக்கை நாட்டுக் களத்தாலூர் திருவிராமீசுர முடையான் ஆட்கொண்ட வில்லியான கச்சிராயன், ஆணையில் ஒப்பமிட்டுள்ளான். இப்பெயரை நோக்கும் போது இவன் ஓர் அதிகாரியாகத் தோன்றுகிறான். மதுரோதைய வளநாட்டு காளை இருக்கை உழக்குடிமுத்தன் ஆட்கொண்ட

வில்லியான பல்லவராஜன் என்பவன் அதிகாரியாவான். இவன் மன்னனுடைய ஆட்சியாண்டு மூன்றாவது, நாள் 2594இல் ஒப்பமிட்டுள்ளான். மன்னனுக்கு வரி நீக்கி நிலம் வழங்க பரிந்துரை செய்த அதிகாரி நம்பி என்பவன், மானாபரண மங்கலத்தைச் சேர்ந்தவன். இப்பெயர் மானாபரணன் என்ற பாண்டிய மன்னர் பெயரில் ஏற்பட்ட ஊராகும். சுந்தர பாண்டியனான மானாபரணன் கி.பி. 1104 – 1131 வரை நாட்டை ஆண்டவன். கல்லிடைக் குறிச்சி என்ற ஊர் இக்கல் வெட்டில் சத்திரிய சிகாமணிபுரம் என வழங்கப்பட்டுள்ளது.

**விளக்கு வைத்த நங்கை:**

குலசேகர தேவனுடைய (1190-1218) 14 ஆவது ஆட்சி யாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு விளக்கு தானத்தைக் கூறுகிறது. முள்ளிநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராஜராஜ சதுர் வேதி மங்கலத்துத் தென் பிடாகை கல்லிடைக்குறிச்சி நாலாயிர விண்ணகர் எம்பெருமானுக்கு 'தூப்பில் வேலேற்ற பெருமாள் தாஸர்' என்பவரின் மனைவி, சந்தியா தீபத்துக்கு அச்சு (காசு) ஒன்றினை முதலீடு செய்துள்ளாள். அதில் இருந்து வரும் வட்டியைக் கொண்டு விளக்கெரிக்க வேண்டும். தானம் செய்த பிராமணியின் பெயர் நங்கை. காலம் கி.பி. 1204 ஆகும்.

**வைணவக் கோயிலில் கார்த்திகை திருவிழா:**

வேறொரு கல்வெட்டு சடையவர்மன் குலசேகரனுடைய 12 ஆம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டது. அருகில் விளக்குத் தூணும் இருந்துள்ளது. கி.பி. 1202 இல் நாலாயிர விண்ணகர் எம்பெருமானுக்கு காடி நாராயணன் சீகையிலாயமுடை யானான விசையராயர் என்பவர், கார்த்திகை மாதத்து கார்த்திகை நட்சத்திரத்தன்று இறைவன் அமுது செய்தருள ஓர் அச்சு மூலதனமாக வழங்கியுள்ளார். இதில் இருந்து வரும் வட்டி ஒரு கலம் அரிசியைக் கொண்டு பெருந்திருப்போனகம் நெய்யமுது நாழிஉரி, தயிர் அமுது, கறியமுது, மற்றும் வெஞ் சனாதி உட்பட பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சிவன் கோயில்களில் கார்த்திகை மாதத்து கார்த்திகை விழா விசேடம். முருகன் உறையும் அறுபடை வீடுகளிலும் இவ்விழா விசேஷ

மாக நடைபெறும். ஆயின், பெருமாள் கோயில் ஒன்றில் கார்த்திகை விழா விசேடமாக நடைபெறுவது புதுமையாகும். சைவத்தையும் வைணவத்தையும் போற்றிய சடையவர்மன் குலசேகரன் (1190–1218) செயலுக்கு இது புதுமையன்று.

**பங்குனி அமாவாசை:**

சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகம் பண்ணியருளிய ஸ்ரீசுந்தர பாண்டியனுடைய 22 ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டு கி.பி. 1238 இல், பங்குனி அமாவாசை சிறப்பு வழிபாட்டுக்குச் செய்த தானத்தைக் குறிப்பிடுகிறது.

**ஆண்ட நங்கை:**

திருவழுதி நாட்டு பிரம்மதேயம் ஸ்ரீவைகுந்தமான ராஜேந்திர சோழ சதுர்வேதி மங்கலத்து தலைச்செங்காட்டு ஸ்ரீ கிருஷ்ணன் என்பவன் மனைவி ஆண்ட நங்கை என்பவள் அச்சு ஒன்று நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயில் தானத்தாரிடம் முதலீடாக வைக்கிறாள். இதன் வட்டியைக் கொண்டு இறைவனுக்குத் திருமஞ்சனமும் திருவாராதனமும் திருப்போனகமும் நிகழ்த்த வேண்டும். திருப்போனகத்துடன் நெய்யமுது நாழி, தயிரமுது, கறி அமுது, வெற்றிலை (சுருள்) ஐம்பதும் பூசைக்கு வழங்க வேண்டும்.

**கருமாணிக்க ஆழ்வான்:**

சுந்தர பாண்டியனுடைய மற்றொரு கல்வெட்டும் கி.பி. 1238 இல் வெட்டப் பட்டது. அமாவாசைக்குத் தானம் தந்த விபரத்தையே இதுவும் குறிப்பிடுகிறது. நாலாஞ்சேரி இராசி புரத்து கருமாணிக்க ஆள்வான், ஆடி அமாவாசை விழாவுக்காக அச்சு ஒன்றே கால் வழங்கியுள்ளான். இக்காசில் இருந்து வரும் வட்டியைக் கொண்டு நாலாயிர விண்ணகர் எம்பெருமான் வீதி உலா வருமுன் திருமஞ்சனம் செய்யவும் திருவாரி கொண்டருளவும் ஆறு நாழி காலால் கொண்ட படியில் கலனே குறுணி அரிசி வழங்க வேண்டும். நெய், தயிர், கறி இவையும் வழங்க வேண்டும் என்று ஏற்பாடாகிறது.

**ஒரே பெயரில்பலர்.**

கிரி கிருஷ்ணர் கோயில் கருவறை வடக்குச் சுவரில் இருந்து மத்திய அரசு கல்வெட்டுத்துறை படியெடுத்த கல்வெட்டு 109/1907 கோனேரின்மை கொண்டான் என்று தொடங்குகிறது. நடுவில் குலசேகர தேவனுடைய பெயரும் ஆட்சியாண்டும் குறிக்கப்படுகின்றன. எந்தக் குலசேகரன் என்று அறிவது சிரமமாகும். எனினும் கல்வெட்டுகளில் வரும் சொற்களின் அடிப்படையில் இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் (1237-1266) கல்வெட்டு என்று கருதுகிறேன்.

சடையவர்மன் குலசேகரன் என்ற பெயரில் (1162-1177) இருந்த கல்வெட்டுகள் இதே கோயிலில் உள்ளதை ஏற்கனவே ஆய்வு செய்துள்ளோம். 1190 முதல் 1218 வரை இருந்த சடையவர்மன் குலசேகரன் கல்வெட்டுகள் இக் கோயிலில் மட்டுமின்றி வேறு கோயில்களில் இருந்ததையும் ஏற்கனவே ஆய்வு செய்துள்ளோம். மாறவர்மன் குலசேகரன் (1268-1318) கல்வெட்டினையும் ஆய்வு செய்துள்ளோம். இம் மூவரையும் சாராத கல்வெட்டாகவே இது உள்ளது.

**சொக்கையன்:**

இக்கல்வெட்டில் இருவேறு தானங்கள் குறிக்கப் படுகின்றன. தற்போது சுந்தர பாண்டிய மலையராயன் திருவிடையாட்டமாக விடும் தானத்திற்கு முன், சொக்கையன் கொடுத்தருளின தானம் இடம் பெற்றுள்ளது. சொக்கையன் என்ற பெயர் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுக்கு இருந்திருக்க வேண்டும். (1216-1244) இவனுடைய கல்வெட்டு கள் இக்கோயிலில் இருப்பதை ஏற்கனவே கண்டோம். மதுரை சொக்க நாதனையும் சிதம்பரம் நடராசரையும் இவன் போற்றியவன். ஞான சமுத்திரம் என்ற பெயரையும் உடையவன். இவன் காலத்தில் குரு குலத்தரையன் என்பவன் திருத்தங்கல் நாராயணப் பெருமாள் கோயிலில் திருப்பணி புரிந்ததுடன் சுந்தர பாண்டியன் சந்தியும் ஏற்படுத்தி உள்ளான். எனவே இங்கும் சொக்கையன் என்ற பெயரிலும் தானம் செய்துள்ளான் எனலாம். இம்மன்னன் ஆறாவது ஆட்சியாண்டில், பங்குனி அமாவாசை விழாவுக்கும் ஆடி

அமாவாசை விழாவுக்கும் இருவர் முதலீடு செய்துள்ளதைக் கண்டோம். இவ்விரண்டும் இல்லாத தானமே சொக்கையன் தானம் போலும். சடையவர்மன் குலசேகரனின் மூன்றாவதின் எதிராமாண்டின் எதிராமாண்டு கி.பி. 1242 இல் பிறப்பிக்கப் பட்ட உத்தரவே இக்கல்வெட்டாகும்.

**செழியதரையன்:**

சடையவர்மன் குலசேகரனின் ஆணைப்படி, உடனடியாகக் கல்லிடைக் குறிச்சி நாலாயிர விண்ணகர் ஆழ்வார் கோயில் நம்பு செய்வானுக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் ஓலை அனுப்பி வைக்கப்படுகிறது. ஆழ்வார் காராண்மைத் திருவிடையாட்டமான இளங்கறவை, பாப்பாங்குன்றத்து திருவாழிக் கல்லுக்குட்பட்ட நிலத்தை, முன்பு சொக்கையன் என்பவன் சுந்தர பாண்டிய மலையராயனுக்கு வழங்கி இருந்தார். தற்போது கடமையும் உழுதான் குடியுமாக இவனைத் தவிர்த்து விட்டு வழங்கப்படுகிறது. நிலம் மலையராயனிடமிருந்து கோவிலுக்கு மாற்றப்படுகிறது. தானம் கல்விலும் செம்பிலும் வெட்டவும் ஏற்பாடாகிறது. உத்தரவில் மதுரோதைய பாண்டியதரையன், செழியதரையன் ஆகியோர் மன்னன் மூன்றாவது ஆட்சியாண்டு நாள் 1072 இல் கையொப்பம் இடுகின்றனர். பாப்பாங்குளத்தில் நாலு திருவாழிக்கல் உள்பட நிலத்தை மன்னன் வரிநீக்கி பிரசாதம் (தானம்) செய்துள்ளான். அதாவது மலையராயனிடமிருந்து கோயிலுக்காக நிலம் மாற்றப்பட்ட போது முன்போலின்றிக் கடமையும் உழுதான்குடியும் காராண்மையுமாக மாற்றப் படுகிறது. சபையின் சார்பாகக் கீழ்க்கண்ட நபர்கள் ஒப்பம் இட்டுள்ளார்கள்.

1) திருப்பத்தூர் சதுரக்நி,
2) வலவர் சர்வகிரது எக்ஞமூத்தி,
3) ஸ்ரீகதை ஆள்வான்,
4) வங்கிபுரத்து திருமாலிருஞ்சோலை நாராயணன்.

**அவனி வேந்தராமன்:**

மன்னன் பெயர் தொடக்கமின்றிக் 'கோனேரின்மை கொண்டான்' என்று தொடங்கும் இரு கல்வெட்டுகள் கீரி

கிருஷ்ணர் கோயில் கருவறைத் தென்புறத்தில் இருந்து படியெடுக்கப்பட்டுள்ளன. அவ்விரண்டில் ஒன்றில் அவனி வேந்தராமன் என்ற பெயர் உள்ளது. இப்பெயரில் கூடிய மன்னன் நான்காம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் என்று குடந்தை திரு.என். சேதுராமன் குறிப்பிட்டுள்ளார். அவனி வேந்தராமன் என்ற பெயர் உள்ள இக்கல்வெட்டினை வெட்டிய ஆசாரியின் பெயர் காலிங்கராயன் என்பதாகும். இதே காலிங்கராயன் கி.பி. 1301 இல் வெட்டப்பட்ட மாறவர்மன் குலசேகரப் பாண்டியனுடைய ஒரு கல்வெட்டிலும் இடம் பெற்றுள்ளான். இக்கல்வெட்டு இதே ஊரில் உள்ள நாகேஸ்வரமுடையார் கோயிலில் இன்றும் உள்ளது.

**அவனி வேந்தன் சந்தி:**

நாலாயிர விண்ணகர் எம்பெருமானுக்கு முதலடங்க இறையிலியாக நிலம் வழங்க மன்னன் சடையவர்மன் சுந்தர பாண்டியன் ஆணையிட்டுள்ளான். மன்னன் உத்தரவிற்கிணங்க திருவிடையாட்டமாக அவனிவேந்தன் சந்தி என்ற விழாவும் நடத்த வேண்டி 'கருமாணிக்காழ்வானான வேணாவுடையான்' என்பவன் கோயில் தானத்தாரிடம் நிலம் வழங்குகிறான். மன்னனின் ஆறாம் ஆட்சியாண்டு நாள் 147 இல் இத்தானம் வழங்கப்படுகிறது.

**வேணாவுடையான்:**

கொடுமளூர் உடையான், அண்டக்குடியுடையான் என்ற இருவரும் கையொப்பம் இட்டுள்ளனர். இக்கல்வெட்டில் வரும் கருமாணிக்காழ்வானான வேணாவுடையான் என்பவன் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்தில் பட்டம் சூடிய சுந்தர பாண்டியனுடைய 22ஆம் ஆட்சியாண்டில் கி.பி. 1238 இல் இடம் பெற்ற கருமாணிக்க ஆழ்வானின் மகனாகவோ பேரனாகவோ இருக்கலாம். கல்வெட்டில் மன்னன் பிறந்த நாளான உத்திரட்டாதி விழாவாக நடத்தவும் ஏற்கனவே தந்த முன் தானத்துடன் இதற்கும் சேர்த்து வரி நீக்கி நிலம் வழங்கப்படுகிறது.

**திருவிடையாட்டம்:**

வேறொரு கல்வெட்டில் (இதுவும் மன்னன் ஆறாவது ஆட்சியாண்டு நாள் 147 இல் கூடியது) கருமாணிக்காழ் வானான வேணாவுடையான் விட்ட திருவிடையாட்டமும் மற்றுமுள்ள திருவிடையாட்டங்களையும் சபை கேட்ட போது முன்பு போல கடமை கொள்ளாது இறையிலியாக வழங்க மன்னன் ஆணையிட வேணாவுடையான் ஒப்பமிட்டுள்ளான். சென்ற கல்வெட்டில் இடம் பெற்ற அதிகாரிகளே இதிலும் இடம் பெற்றுள்ளனர். எனவே இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1309 ஆகும். கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லை யெனினும் நான்காம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் என்ற அவனி வேந்தராமனே (1303–1325) இக்கல்வெட்டை யும் வெட்ட உத்தரவிட்டிருக்க வேண்டும் என யூகிக்கலாம்.

**நான்கு கோயில்கள்:**

கீரி கிருஷ்ணன் கோயில் என்ற முற்றிலும் மறைந்து விட்ட நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயிலில் இருந்த கல் வெட்டுகள் யாவும் பாண்டியர் கல்வெட்டுகளே ஆகும். கல்லிடைக் குறிச்சியில் நாலாயிரம் ஈஸ்வரமுடையார் கோயிலுக்கு முற்பட்டக் கோயில் இதுவெனலாம். கல்வெட்டு களின் அடிப்படையில் கல்லிடைக் குறிச்சியில் மட்டும் தொன்மை வாய்ந்த விஷ்ணு கோயில்கள் நான்கு இருந் துள்ளன. இன்று பெரிய பிரான் கோயிலும் ஞானபிரான் கோயிலும் உள்ளன. எஞ்சிய இரு கோயில்கள் மறைந்து விட்டன. கேரள அரசர் கல்வெட்டுகள் கல்லிடைக்குறிச்சியில் பல்வேறு கோயில்களில் இருந்தாலும் இக்கோயிலில் மட்டும் காணப்படவில்லை. கோயிலே தற்போது இல்லை எனும் போது கல்வெட்டில்லாதது குறித்து ஆய்வு வேண்டியதில்லை. இல்லாத கோயிலுக்கு இனிய வரலாறு எழுதியதின் நோக்கம், எஞ்சிய கோயில்களையாவது பாதுகாக்க வேண்டும் என்ற சிந்தனையேயாகும்.

# தளிகை மடம்

**நுழைவாயில்:**

கல்லிடைக் குறிச்சி மானேந்தியப்பர் கோயிலுக்கருகே (தெற்கே) திருவாவடுதுறையின் கிளை மடமான தளிகை மடம் அமைந்துள்ளது. வடக்குப் பார்த்த வாயிலையுடைய இம்மடம், தொன்மையின் சின்னமாக மட்டுமின்றி இயற்கை எழில் கொஞ்சும் இடமாகவும் விளங்குகிறது. தளிச்சேரி என்பதற்கு வெவ்வேறு காரணங்களை முன்பே கண்டோம். தளிச்சேரி மடம் என்பதே சுருக்கமாகத் தளிகை மடம் என்றாயிற்று. மானேந்தியப்பர் கோயிலுடன் திருவாவடுதுறை ஆதினத்திற்கு நெருங்கிய தொடர்பு நீண்ட நாளாக இருந்து வருகிறது. எனவே கோயிலுடன் தொடர்பு கொண்ட மடம் என்பதற்கேற்பத் திருவாவடுதுறையின் கட்டளை கோயிலில் உள்ளது. இதே ஊரில் வேறு சில மடங்களும் இருந்துள்ளன இன்றும் சில கிளை மடங்கள் உள்ளன. தளிகை மடத்தின் அமைப்பையும் வரலாற்றையும் காண்போம்.

**நினைத்ததை முடிக்கும் விநாயகர் கோயில்:**

கல்லிடைக் குறிச்சி கன்னடியன் கால்வாயைக் கடந்து வடக்கில் வந்தால் நினைத்ததை முடிக்கும் விநாயகர் கோயிலைக் காணலாம். இக்கோயில் அமைந்துள்ள தெருவில் தளிகை மடம் அமைந்துள்ளது. நினைத்தது முடிக்கும் விநாயகர் கோயில்; அண்மையில் திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில் புதுப்பிக்கப்பட்டு, கும்பாபிஷேகமும் நடந்துள்ளதை அங்குள்ள கல்வெட்டு மூலம் அறிகிறோம். இக்கோயில் மடத்தின் கோயிலாகும்.

**தூண்கள்:**

தளிகை மடம் வடக்கு நோக்கிய திருவாயிலைக் கொண்டது. வாயிலின் இருபுறமும் தூண்களுடன் கூடிய திண்ணைகள் உள்ளன. சிவலிங்கம், பூக்கள், அன்னம், மயில் போன்ற சிற்பங்கள் கிழக்கில் உள்ள தூண்களில் காண்கிறோம். மேற்குத் திசையில் கூடிய தூண்களில் துறசை ஆதீனத்தின்

நம்பிரான்கள் சிலர் வணங்கும் நிலையில் காட்டப் பட்டுள்ளனர். தூண்களில் உள்ள குரு முதல்வர்கள் கண்டங் களில், உருத்திராட்ச மாலைகள் உள்ளன. தலைகளிலும் அம்மாலைகள் உள்ளன. இங்கே தலைப் பாகையுடன் வணங்கும் ஆடவர் சிற்பமும் உள்ளது. பிளிறும் நிலையில் கூடிய யானையின் சிற்பமும் தொங்கும் நிலையில் கூடிய இரு வாழைப் பூக்களின சிற்பங்களும் சிம்மங்களின் உருவங்களும் கலைச் செல்வங்கள் எனலாம். விதானத்தின் மீது இராசிகள் செதுக்கப்பட்டுள்ளன. இருபுறமும் சேடியர் நின்று கொண்டிருக்க கஜலட்சுமியின் உருவம் ஒன்றும் இங்குள்ளது. இச்சிற்பத்திற்கருகில் ஒரு பெண் நிற்கிறாள். கணபதி சிற்பமும் இங்கே உள்ளது.

**ளிகை மடத்தின் அலுவலகம்:**

நுழைவு வாயிலுக்கு உட்புறமுள்ள கிழக்குத் திண்ணையில் இரு தூண்கள் உள்ளன. மேற்குத் திண்ணையிலும் இவ்வாறே உள்ளன. ஒருதூணில் காமதேனு சிவலிங்கத்திற்குப் பால் பொழிகின்றது. வாயில் இருபுறமும் கருங்கல் தூண்கள் தலா நான்கு உள்ளன. பின் நீண்ட தாழ்வாரம் உள்ளது. கிழக்குத் திண்ணையில், மடத்தின் காரியாலயம் உள்ளது. நுழைவாயில் கதவும் வேலைப்பாடுடன் உள்ளது. அதில் கல்வெட்டும் உள்ளது. மடத்தின் மாடிக்குச் செல்ல படிக்கட்டுகள் மேற்கில் உள்ளது. மடத்தின் கிழக்கே தானியங்கள் கொட்டும் சேர் உள்ளது.

**கல்வெட்டுத்தூண்:**

தாழ்வாரத்திற்கு மேற்கில் நான்கு வரிசைகளில் தூண்கள் உள்ளன. முதல் வரிசையில் மூன்று தூண்களும் இரண்டாம் வரிசையில் ஐந்து தூண்களும் மூன்றாம் வரிசையில் ஐந்து தூண்களும் நான்காம் வரிசையில் மூன்று தூண்களும் உள்ளன. தூண்களில் பல சிற்பங்கள் உள்ளன. இரண்டாம் வரிசை யிலும் மூன்றாம் வரிசையிலும் அரசர் போன்ற உருவங்கள் சிற்பங்களாக உள்ளன. இரண்டாம் வரிசையில் கல்வெட்டு ஒன்றும் உள்ளது. இது 11 வரிகளைக் கொண்டது. மூன்றாவது தூணின் இருபுறமும் பண்டாரச் சந்நிதிகளின் சிற்பங்கள்

உள்ளன. சந்நிதியின் இருபுறமும் முனிவர்கள் வணங்கும் காட்சியும், வாயிலின் மேல் கஜலட்சுமியும் பூக்களும் அடியார் போன்றுள்ள உருவமும் காண்கிறோம். இங்குள்ள அடியார் போன்ற உருவத்தின் கழுத்தில், உருத்திராட்சமாலை, உள்ளது. வணங்கும் நிலையில் கைகள் உள்ளன. நீண்ட காதுகளையும் பாதம் வரை ஆடையையும் இச்சிற்பத்தில் காண்கிறோம். இம்மண்டபத்திற்கு மேற்கில் ஆதீன குரு முதல்வர் தங்கும் ஒடுக்கம் உள்ளது.

**ஐம்பொன் சிலைகள்:**

மடத்தின் இரண்டாவது நுழைவாயிலின் கிழக்கில் கூடம் போன்ற அமைப்பு உள்ளது. மேலே கூரை. இது சேர் களஞ்சியம் எனப்படும். முன்பு உக்கிராணமாக இருந்துள்ளது. பூஜை மடம் இதற்கு மேற்கில் உள்ளது. சுவாமி மற்றும் பிள்ளையார் கற்சிலை இங்குள்ளன. பெரிய நடராசர், சிறிய நடராசர், நமச்சிவாய மூர்த்தி, ஆறுமுக நாயனார், பழனியாண்டவர், சிவகாமி ஆகிய செப்புச் சிலைகளைப் பித்தளையில் கூடிய அழகிய பேழையில் வைத்துள்ளார்கள். பேழை, தேர் போன்ற அமைப்பில் உள்ளது. இதில் துவார பாலகியர் உருவங்கள் உள்ளன. இதன் மேலே யாளி உள்ளது. கோபுரம் போல் கதவமைப்பைக் கொண்டுள்ளது. சிங்க உருவமும் இதில் உள்ளது. துவார பாலகியர் நான்கு கரங்களைக் கொண்டவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர். நாற்கரங்களும் பூக்களை ஏந்தியபடி உள்ளன. யானை, பாம்பு, போன்ற உருவங்களும் உள்ளன. நடுவில் யானை மீது அமர்ந்த ஓர் உருவம், உள்ளது. பக்திச் சூழலுடன் இவ்விடம் அமைந்துள்ளது.

**கிடங்கறை:**

பூஜை மடத்திற்கு மேற்கில் தோட்டச் சாமான்கள் உள்ள அறை உள்ளது. கிழக்கில் பூசை செய்வதற்கு வேண்டிய பொருட்கள் வைக்கும் அறை உள்ளது. கிடங்கறை என்று இதைக் குறிப்பிடலாம். அன்னதானம் வழங்குமிடம் தனியாக உள்ளது.

**ஆசி வழங்குமிடம்:**

பூஜைமண்டபத்திற்கு மேற்புறம் சதுரமான அமைப்பு உள்ளது. நடுவில் 4 தூண்களை நிறுத்தி மேலே ஓடு வேய்ந்துள்ளனர். வெளிச்சம் வரவும் காற்றோட்டம் வரவும் வகை செய்யப்பட்டுள்ளன. இவ்விடம் திருவாவடுதுறை ஆதீனங்கள் அன்பர்களுக்குத் தரிசனம் தந்து அருளுரை வழங்குமிடமாகும். இதற்கும் வடக்கில் சந்நிதானம் ஓய்வு எடுக்கும் மண்டபம் உள்ளது. கூரை ஓலையாக உள்ளது. இதன் பின்புறம் ஒரு கட்டிடம் உள்ளது. இக்கட்டிடத்தின் மேற்கில் ஒரு நெற்களஞ்சியம் இருந்தது. தற்போது இது பழுதடைந்துள்ளது.

மடத்தில் மாடிக்குச் செல்வதற்குப் படிகள் இங்கும் உள்ளன. கொலு மண்டபத்திற்கு நேர் வழியாக வடக்கில் இருந்து ஒரு வழி உள்ளது. ஒடுக்கத்திற்கு இவ்வழியாக வரலாம்.

ஒடுக்கத்திற்குக் கிழக்கில் சிறிய அறை உள்ளது. இது பணிவிடை தங்கும் அறையாகும். தொன்மை மாறாத் தோற்றத்துடன் தளிகை மடம் அமைந்துள்ளது.

**கட்டளை:**

குரு மகான் அமர்ந்து அன்பர்களுக்கு ஆசி வழங்கும் இடத்திற்கு வடக்கில் குருமகானின் பொருட்கள் வைக்கும் அறை உள்ளது. தென்புறத்தில் மானேந்தியப்பர் கோயில் அறக்கட்டளைக்குரிய ஆபரணங்களும், பாபநாசம் பிச்சக் கட்டளைக்குரிய ஆபரணங்களும் வைக்கும் அறை உள்ளது. ஒடுக்கத்தில் இருந்து கொலு மண்டபத்திற்கு வெளியில் நந்தவனத்திற்குச் செல்ல வழியுண்டு.

**உணவுச்சாலை:**

தளிகை மடத்தின் கிழக்கில் மடத்திற்கு வருபவர் உணவு உண்ணும் சாலை உள்ளது. இது செவ்வக வடிவில் உள்ளது. ஏழு தூண்கள் வீதம் இரு வரிசையிலும் தூண்கள் உள்ளன. ஓரிடத்தில் மட்டும் வெளிச்சத்திற்காகக் கூரையில் ஓடு வேயப் பட்டுள்ளது. பிற பகுதி கல் கட்டிடமாகும். பந்தி கட்டுக்குக்

கீழ்ப்புறம் உக்கராணம் உள்ளது. தற்போது இங்கே பாத்திரங்கள் உள்ளன. மேலும் கி.பி. 1893 இல் செய்யப்பட்ட கட்டில் ஒன்று உள்ளது.

**பந்திக்கட்டு:**

பந்திக்கட்டு அறைக்குத் தெற்கில் மடைப்பள்ளி உள்ளது. இது வரிசைக்கு ஐந்து தூண்கள் வீதம் இரு வரிசை தூண்களைக் கொண்டுள்ளது. இங்கு வெளிச்சம் வேண்டி மேற்பகுதி கம்பியில் மூடி உள்ளனர்.

**நீண்ட தாழ்வாரம்:**

பந்திக் கட்டுக்கு மேற்கிலும் கொலு மண்டபத்திற்குக் கிழக்கிலும் ஒரு மண்டபம் உள்ளது. 19 தூண்கள் கொண்ட ஒரு வரிசையும் 9 தூண்கள் கொண்ட மற்றொரு வரிசையும் கட்டிடத்தைத் தாங்குகின்றன. இதையடுத்து திண்ணை போன்ற அமைப்பில் தலா இரு தூண்கள் இதைத் தாங்குகின்றன. தூண்களில் சிற்பங்கள் பல உள்ளன. கோலம் ஏந்திய பெண், நாட்டியப் பெண், துவார பாலகியர், ஆடவர்கள், தட்சிணாமூர்த்தி, சந்திரசேகர், நந்தி, மயிலேறும் பிள்ளை, எலி வாகனத்தில் அமர்ந்த விநாயகர் போன்ற சிற்பங்கள் குறிப்பிடத் தக்கவையாகும். இம்மண்டபம் நீண்ட தாழ்வாரம் போல் அமைந்துள்ளது.

**கொலு மண்டபம்:**

கொலு மண்டபம் சதுரமான அறையாகும். நான்கு தூண்கள் வீதம் நாற்புறமும் அமைய, வடக்கில் படிக்கட்டுகள் உள்ளன. இதன் மூலம் மாடிக்குச் செல்லலாம். மாடியில் சுற்றித் தாழ்வாரம் போன்ற அமைப்பு உள்ளது. இங்கே பலகணிகள் உள்ளன. இங்கும் வரிசைக்கு நான்கு தூண்கள் வீதம் சதுரமான அமைப்பு உள்ளது. கொடுங்கை, சுதை செங்கல்லால் ஆனது. மேலே ஒவ்வொரு தூணிற்கும் நேராக யாளி சிற்பங்கள் உள்ளன. கூரையில் கொல்லம் ஓடுகளும் மரச்சட்டங்களும் காண்கிறோம். மரச்சட்டங்களில் ஒவ்வொரு கட்டையிலும் யாளிகள், வாழைப் பூக்கள் ஆகிய சிற்பங்கள்

உள்ளன. இவ்விடம் சின்னப் பட்டத்தில் வருபவர் அருளாட்சி செய்யுமிடமாக முன்பு இருந்துள்ளது. சுற்றி நாற்புறமும் நீள் செல்வகக்கற்கள். இடையில் சுதை சேர்ப்பு காண்கிறோம். வாயில், இருமரக் கதவுகளைக் கொண்டது. தலா 6'×3' என்ற அளவில் எட்டு மரச் சட்டங்களுக்கிடையே மரச்சிற்பங்கள் உள்ளன. வாயில் இடப்புறக்கதவில் உள்ள சிற்பங்கள் வருமாறு.

**விநாயகர் :**

வழக்கமான முத்திரைகளுடன் அமர்ந்த நிலையில் விநாயகர் சிற்பம் உள்ளது.

**சண்முகப் பெருமான்:**

ஆறுமுகமும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டவராகச் சண்முகப்பெருமான் உள்ளார்.

**ஏகபாத மூர்த்தி:**

ஒற்றைக் காலில் கூடிய சிவ வடிவம், ஏகபாத மூர்த்தி என வழங்கப்படும். மும்மூர்த்தியுடன் தொடர்புடைய சிற்பம் இதுவாகும். வலப்புறம் விஷ்ணுவும் இடப்புறம் நான்முகனும் உள்ளனர். நெல்லை மாவட்டத்தில் பல இடங்களில் இச்சிற்பத்தைக் காண முடியும்.

**கால சம்ஹார மூர்த்தம்:**

சிவ லிங்கத்தைத் தழுவிய நிலையில் மார்க்கண்டேயன் இலிங்கத்தில் இருந்து வெளிப்படும் சிவன், எதிரில் உள்ள காலனைச் சூலத்தால் குத்துகிறார். அருகில் இருகரங்களுடன் வியப்புடன் அம்மை பார்த்துக் கொண்டிருக்கிறார். சிவனுடைய முன்னிரு கரங்கள் சூலத்தை ஏந்த, பின்னிரு கைகள் மான், மழு ஏந்தியுள்ளன. இலிங்கத்தில் இருகண்கள் காட்டப்பட்டுள்ளன. புராதனக் கோயில்களின் கற்சிலைகளில் இம்மூர்த்தம் இடம் பெறும்.

**உமா மகேஸ்வரர்:**

இடப்புறம் சிவனும் வலப்புறம் அம்மனும் உள்ள உமா மகேஸ்வரர் சிற்பம் அடுத்து உள்ளது.

**அணைந்தெழுந்த நாயகர்:**

இறைவன் அம்மனுடன் ஆலிங்கன நிலையில் கூடிய சிற்பம் அடுத்து உள்ளது. இறைவனுக்கு மான், மழு, அணைதல், அபயம் என்ற முத்திரைகள் உள்ளன. இறைவிக்குத் தொண்டை மீது ஒரு கையும் பூ ஏந்திய படி மற்றொரு கையும் உள்ளன. அணைந்தெழுந்த நாயகர் எனவும் இவர் வழங்கப்படுவார்.

**திரிபுராந்தகர்:**

திரிபுராந்தகருக்கு நான்குகரங்கள்; சூலம், வில், மான், மழு என்ற ஆயுதங்கள் நான்கும் கைகளில் உள்ளன. கழுத்தில் உருத்திராட்ச மாலை உள்ளது. இருபுறமும் தலைக்கு மேல் கை வைத்துக் கும்பிடும் முனிவர் சிற்பங்கள் அருகே உள்ளன.

**பாசுபத தேவர்:**

வில், சூலம், மான், மழு என்ற நான்கையும் ஏந்திய நாற்கரங்களுடன் சிவன் காட்சி தருகிறார். அருகில் தண்டத்துடன் முகத்தில் மீசையுடன் கூடிய அர்ச்சுனன் வடிவம் உள்ளது. அருச்சுனருக்கு அருள்புரிந்த பாசுபத மூர்த்தம் சிவ கோயில்களில் காணலாம். இங்கும் காண்கிறோம்.

**உமையொரு பாகன்:**

சிவனும் அம்மையும் கூடிய உமையொரு பாகன் உருவம் அழகாக உள்ளது. ரிஷபம், சிங்கம் இரு வாகனங்கள் காட்டப் பட்டுள்ளன. இடப்பாகம் அம்மன் உள்ளார். ஜடா மகுடமும் கரண்ட மகுடமும் கூடிய தலை; மார்பில் கழுத்தணி, கால் வரை ஆடை இடப்புறம் மட்டும் காட்டப்பட்டுள்ளது. 'தோடுடைய செவியன் விடையேறி' என்ற ஞானசம்பந்தரின் பாடல் இச்சிற்பத்தைக் கண்டால் நினைவுக்கு வரும். ஏகனாக மட்டுமின்றி உலகை உய்விக்க அம்மை அப்பனாகவும் சிவன் காட்சி தருவார் என்பது அருளாளர் வாக்காகும்.

**காளியம்மன்:**

இவ்வம்மன் நின்ற நிலையில் கத்தி, கேடயம், கபாலம், சூலத்துடன் உள்ளார். பல ஊர்களில் நாட்டுப் புறத் தெய்வமாகக் காளி வழிபடப்படுகிறார்.

**அகோரவீரபத்திரர்:**

இவருக்கு எட்டு கரங்கள் உள்ளன. வில், கேடயம், கபாலம், சக்கரம், சூலம், சங்கு, கத்தி, தண்டம் என்ற எட்டினை எட்டுக் கைகளில் காண்கிறோம். முகத்தில் மீசை. சினத்துடன் இருப்பது போல் இச்சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது.

**தட்சணாயினி:**

பத்ர பீடத்தின் மீதுள்ள பத்ம பீடத்தில் நான்கு கரங் களுடன் இவர் உள்ளார். வழிபடும் நிலையில் உள்ள ஆடவனைப் பிடித்தபடி ஒரு கரமும் சூலத்தை ஏந்திய படி மற்றொரு கரமும் உள்ளன. இவை பின் கரங்கள் ஆகும். முன்னிரு கரங்கள் அபயம் வரதமாக உள்ளன. அம்மனுக்குக் கரண்ட மகுடம். ஆடவன் தட்சன் ஆவான். இவன் வணங்கிய படி பயத்துடன் உள்ளான். சிற்பம் தத்ரூபமாக உள்ளது.

**மாரியம்மன் :**

செவ்வகமான பீடத்தின் மீதுள்ள தாமரைப் பீடத்தில் அமர்ந்த நிலையில் நாற்கரங்களுடன் மாரி அம்மன் உள்ளார் இவரும் நாட்டுபுற மக்களால் போற்றப்படுபவர் ஆவார்.

**பிராம்மி:**

கமண்டலம், சக்தி, சூலம், தண்டம் பிராம்மியின் நாற் கரங்களில் உள்ளன. சுகாசன நிலை. ஒரே தலை காட்டப் பட்டுள்ளது.

**பைரவி:**

அம்மன் இடக்கையில் கிளி. இடது முன் கை கபாலம், வலது முன்கரம் சூலம். வலது பின் கை சக்தி. நின்ற தோற்றத் தில் பைரவி உள்ளார்.

**அம்பாள்:**

பிரபையுடன் கூடிய அம்பாள் கரண்ட மகுடத்துடன் உள்ளார். அபயம், வரதம், மலர்கள், கைகளில் உள்ளன. அம்பாள் என்ற பெயரில் சமணம், பௌத்தம், வைணவ மதங்களிலும் பெண் தெய்வம் காண்கிறோம்.

**திரிபுராந்தகர்:**

திரிபுராந்தகரின் இரு கரங்களில் வில், பெரிய அம்பு உள்ளன. தஞ்சைப் பெரிய கோயில் விமானத்திலும் கருவறை ஓவியத்திலும் திரிபுராந்தகர் இருப்பதை யாவரும் அறிவர். ஈண்டு நினைவிற்கு வருகின்றது.

**மன்மதன்:**

அன்னத்தின் மீது மன்மதன் சிற்பம் உள்ளது. தேர்களில் ரதி மன்மதன் சிற்பம் இருப்பதை நாம் அறிவோம். வாயிலின் வடக்கில் உள்ள மரச்சிற்பங்கள் வருமாறு:

**சந்திரசேகர்:**

மான், மழு, அபயம், வரதம் என் நாற்கரங்களுடன் கூடிய சந்திரசேகரர் சிற்பம் முதலில் உள்ளது. அடுத்து சிம்ம முகப்புடைய பறவை. சரப மூர்த்தி வலப்புறம் அடியார் சிற்பமும் எதிரில் அம்பாள் சிற்பமும் உள்ளன. அம்மனுக்குக் கரண்ட மகுடம். கைகளில் ஒன்று பூ ஏந்த, மற்றொன்று லோல ஹஸ்தமாகும்.

**தட்சிணாமூர்த்தி:**

சுகாசனத்திற்குப் பதில் கால் மேல் கால் போட்டபடி அமர்ந்த கோலம். புறநானூறு பாடல் ஒன்றில் (199) கடவுள் ஆலத்து என்ற தொடர் வருகிறது. ஆல மரத்தில் உறையும் தட்சிணா மூர்த்தியையே இது சுட்டும். கல்லில், ஐம்பொன்னில், மரத்தில், சுதையில், கூடிய ஆலமர் செல்வன் சிற்பங்கள் இம் மாவட்டத்தில் பல உள்ளன. மான் ஏந்திய கையில் அட்சமாலை உள்ளது. மற்றொரு கை சின்முத்திரை காட்டுகிறது. இருபுறமும் இரு முனிவர் தாடியுடன் உள்ளனர். பிரபையும் உள்ளது. அறிவின் சொருபமாக இவரை ஆன்றோர் காண்பர்.

**சுப்பிரமணியர்:**

நாற்கரங்களுடன் கூடிய சுப்பிரமணியர் சிலை அழகாக உள்ளது. பின்புறம் மயில் உள்ளது. இருபுறமும் வள்ளி, தெய்வயானை உள்ளனர். சுப்பிரமணியர், சக்தி, வஜ்ஜிரம், அபயம், வரதம், உடையவராய் உள்ளார். தேவியர் மலர் மற்றும் லோல ஹஸ்தத்தில் உள்ளனர். இருவருக்கும் மார்பில் கச்சில்லை. வழக்கமான அணிகலன்கள் உள்ளன. மயில் அழகாகக் காட்டப்பட்டுள்ளது. பாம்பு காட்டப்படவில்லை,

**கல்யாணைக்குக் கரும்பு தந்த ஈசன்:**

சிவனுக்கு நான்கு கரங்கள் உள்ளன. முன்னிரு கரங்கள் கரும்பை வழங்க பின்னிரு கரங்களில் மான், மழு உள்ளன, மார்பில் பதக்க மாலை. யானையின் மீது துணி போடப் பட்டுள்ளது. இறைவனுடைய 64 திருவிளையாடல்களில் இதுவும் ஒன்றாகும்.

**ரிஷபாருடர்:**

இடபத்தின் மீது மான், மழு, அபயம், வரத முத்திரையுடன் அமர்ந்தபடி சிவன் உள்ளார். இடபத்தின் வாயில் மூக்கணாங்கயிறு உள்ளது. இடபத்தின் மீது, படுக்கை விரிப்பு உள்ளது. கழுத்தில் பட்டை ஒன்றும் உள்ளது.

**ரிஷபாருடனி:**

வலக்கால் தொங்க இடக்கால் குத்திட்டபடி அதில் கை வைததவாறு இடபத்தின் மீது அம்மை அமர்ந்துள்ளார். வலக்கை மலர் பற்றி உள்ளது. ரிஷபத்திற்குப் பெரிய கொம்பு கள் உள்ளன. எதிரில் தீபாராதனை செய்யும் அடியார் ஒருவரின் சிற்பம் உள்ளது. இவர் தலையில் உருத்திராட்சமாலை உள்ளது. கழுத்திலும் இதே மாலை. இவ்வடியார் இங்கு தங்கியிருந்த சின்னப்பட்டம் அல்லது தம்பிரான் எனலாம்.

**சந்திரசேகரர்:**

மான், மழு, அபயம், ஊருஹஸ்தத்துடன் இருபுறமும் இரு சைவ அடியார் வணங்கும் நிலையில் இவர் உள்ளார். சின்னப் பட்டம், பெரியபட்டமாக அடியார்கள் இருக்கலாம்.

**பிட்சாடனர்:**

பிஷாடனர்க்கு எண் கரங்கள் உள்ளன. பின்னிரு கரங்கள் கங்காளம் ஏந்த அடுத்துள்ள கரங்கள் உடுக்கை அடிக்க, ஐந்தாவது மானுக்குத் தளிர் தர, ஆறாவது கை குள்ளப் பூதத்தின் தலையில் வைக்கிறது. வேறொரு ஜோடி கைகள் உடைந்துள்ளன. இடை வரை ஆடை. பூணுலும் பதக்கமாலையும் கைகளில் கடகங்களும் நன்றாக உள்ளன. பிச்சை ஏற்கும் பெருமான் சிலைகள் மரத்தில் மட்டுமின்றிக் கல்லிலும் செம்பிலும் இவ்வூரில் உள்ளன.

**நடராசர்:**

வழக்கமாக முயலகன் மீது நடராசர் கால் படிந்திருக்கும். இங்குப் பாம்பின் மீது இடக்கால் உள்ளது. வழக்கமான கரங்கள் உள்ளன. சிவனுக்கு வலப்புறம் ஒருவர் (பதஞ்சலி?) உள்ளார். இடப்புறம் இரு கரங்களுடன் திரிபங்க நிலையில் சிவகாமி உள்ளார். அம்மனுக்கு மார்பில் கச்சில்லை.

**திரிமூர்த்திகள்:**

பத்ர பீடத்தின் மீது சுகாசன நிலையில் சிவன் நாற்கரங்களுடன் அமர்ந்துள்ளார். மான், மழு, அபயம், வரதம் கரங்களில் உள்ளன. வலப்புறம் திருமால் சங்கு, சக்கரம், வணங்கும் நிலையில் கைகள் என்றுள்ளார். பிரம்மா இடப்புறம் நாற்கரங்களுடன் உள்ளார். பின் கைகள் கெண்டி, அட்சமாலை முன் கைகள் வணங்கும் நிலையில் உள்ளன. திரிமூர்த்திகள் சிற்பம் அபூர்வமானது. கல்லில் கூடிய திரிமூர்த்தி திருவாமாத்தூரில் உள்ளது. பல்லவர்கள் முதலில் திரிமூர்த்திகளுக்கே கோயில் எடுப்பித்தனர் என்பது வரலாறாகும்.

**ஏகபாத மூர்த்தம்:**

ஒரே காலுடன், நாற்கரங்களுடன் ஏகபாதர் பிரபையுடன் உள்ளார். கால்வரை ஆடை, இருபுறமும் வழிபடும் முனிவர் தாடியுடன் உள்ளனர். சிவனுக்கு மார்பில் கழுத்தணி, தோளின் மீதுள்ள வஸ்திரம் இருபுறமும் பறக்கும்படி உள்ளது. செவ்வகமான கட்டையில் மூவரும் தனித்தனியாக நின்றபடி உள்ளனர். மரத்தில் மட்டுமன்றிக் கல்லிலும் ஏகபாதர் சிற்பம் இவ்வூரில் உள்ளது.

**விசுவநாதர் விசாலாட்சி:**

சிவலிங்கம், மேலே அழகிய மாலை. சந்திரக்கல் அருகில் இரு கரங்களுடன் அம்மன் உள்ளார். விசுவநாதர், விசாலாட்சி என்று இதனை வழங்குகின்றனர்.

**பிரம்மன்:**

நாற்கரங்களுடன் பிரம்மன் உள்ளார். புடைப்புச் சிற்பமாக உள்ளதால் மூன்று முகமும் ஒரே திசையில் உள்ளன. மற்றொரு முகம் மறைந்துள்ளதாகக் கருத வேண்டும். அன்னத்தின் மீது சுகாசன நிலையில் இவர் அமர்ந்துள்ளார். கல்லாக இருந்தால் சுற்றி மூன்று தலைகளைக் காட்டுவர். இது மரச்சிற்பமன்றோ?

**விஷ்ணு சிவனை வழிபடும் காட்சி:**

நாற்கரங்களுடன் விஷ்ணு உள்ளார். பின் சிவலிங்கம் உள்ளது. எதிரில் இரு கரங்களுடன் அம்மன் உள்ளார். சிவலிங்கத்தில் இரு கண்கள் காட்டப்பட்டுள்ளதால் இது முக லிங்கம் போல் உள்ளது. விஷ்ணுவுக்கு அருள் தந்த மூர்த்தம் இது எனலாம்.

**கால பைரவர்:**

அனல் பிழம்பான சடை, பிரபையில் சிங்கத்திற்குப் பதில் நெருப்பு, உடுக்கை, சூலம், நெருப்பு, பாம்பு கைகளில் உள்ளன. வாலைத் தூக்கியபடி சினத்துடன் நாய் உள்ளது. பைரவரும் கோபப் பார்வையுடன் உள்ளார்.

**சோமாஸ்கந்தர்:**

இறைவன், அம்மை எப்போதும் போல் அமர்ந்த நிலையில் உள்ளனர். முருகன் நின்றபடி இல்லாமல் சுகாசன நிலையில் தந்தை போல் அமர்ந்திருக்கிறார். முருகர் கரங்கள், மலர்கள் ஏந்துவதற்குப் பதில் அபயம், வரதமாக உள்ளன. அம்மனின் ஒரு கை மலர் ஏந்தியும் வேறொரு கை இடுப்பில் வைத்த படியும் உள்ளன. வித்தியாசமான மரச்சிற்பம் இதுவென லாம்.

**வீரபத்திரர்:**

நான்கு கரங்கள். கத்தி, கேடயம் இரு கைகளில் உள்ளன சூலமும் ஏந்தியுள்ளார். ஜடா மகுடத்துடன் இவர் உள்ளார்.

**அம்பிகை:**

நான்கு கரங்களில் பின்னிரு கரங்கள் மலர்கள் ஏந்தியும் முன்னிரு கரங்களில் அபயம், வரதமாகவும் உள்ளன.

**தமிழ் எண்கள்:**

இங்கு இரு கதவுகளிலும் எண்ணிடப்பட்டு தலா 18 வீதம் 36 சிற்பங்கள் உள்ளன. தமிழ் எண்கள் உள்ளன. கீழும் மேலும் மூன்று வீதம் இரண்டிலும் மொத்தம் பன்னிரண்டு பித்தளை குண்டுகள் உள்ளன. குறுக்கில் ஐந்து வீதம் இரண்டிலும் பதது உள்ளன. இங்குள்ள ஒவ்வொரு சிற்பத்திலும் பிரபை காட்டப்பட்டுள்ளது. ஒரு சில நீங்கலாகப் பெரும்பாலும் சிம்மமுக பிரபையே காண்கிறோம். செவ்வக மாகக் கதவினைத் தேர்ந்தெடுத்து வரிசைக்கு மூன்று சதுரமாக அமைத்து சிற்பங்கள் செதுக்கியுள்ளனர். நீளத்தில் நாலு கட்டைகள் குறுக்கில் 7 கட்டைகள் உள்ளன. ஒவ்வொரு கதவிலும் சிற்பங்களுக்கு 18 பலகைகள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இந்தக் கொலு மண்டபம் சதுரமானது. அறை யில் நான்கு தூண்களை நிறுத்தித் தூண்களில் பல்வேறு சிற்பங்கள், பூ வேலைப்பாடுகள் செதுக்கியுள்ளனர். கும்பம் சிவலிங்கம், யாளி, வழிபடும் நிலையில் சின்னப் பட்டம், பாம்பு, சங்கு போன்ற சிற்பங்கள் தூண்களில் செதுக்கப் பட்டுள்ளன.

**மரச்சிற்பங்கள்:**

கல்லிடைக் குறிச்சியில் மட்டுமின்றி நெல்லை மாவட்டத் தின் பல கோயில்களிலும் வாயில் கதவுகளிலும் தேர்களிலும் மரச் சிற்பங்களைக் காணலாம். குறிப்பாக நெல்லை, பிரம்ம தேசம், சங்கரங்கோயில் போன்ற ஊர்களில் இறை உருவங்கள் உள்ளன. நாட்டிய மகளிர் சிற்பங்கள், முனிவர் உருவங்கள் போன்றவையும் மரச்சிற்பங்களில் காணலாம். ஆடவர் உருவங்கள், மீசை முண்டாசுடன் உள்ளன. மானேந்தியப்பர்

கோயிலில் உள்ள பொறிப்பின் மூலம் செல்வ குரு அம்பலம் 1725 இல் கோவில் கதவினைச் செய்தளித்தார் என்பதை முன்பே கண்டோம். நெல்லை, மன்னார் கோயில், சங்கரன் கோயில் போன்ற ஊர்களில் கதவுகளைச் செய்தவர்களின் உருவங் களையும் காண்கிறோம்.

**நீராழி மண்டபம்:**

மடத்தின் பின்புறம் நீராடும் மண்டபம் இரு தடுப்புக் கொண்டதாக உள்ளது. கன்னடியன் கால்வாயில் இருந்து மடத்தின் வழியாக ஒரு சிறு கால்வாய் செல்கிறது. ஆண்டு முழுவதும் நீர் இருப்பதுடன் சில சமயம் நீராவிக் குளமாக எழிலுடன் இம்மண்டபம் காட்சி அளிக்கிறது. மண்டபத்தின் வடக்கில் மேடை போன்ற அமைப்பில் சிவலிங்கம் (காசிவிசுவநாதர்) விநாயகர் ஆகிய சிற்பங்கள் உள்ளன. நாள்தோறும் இங்கும் பூஜை நடைபெறுகிறது. நீர் சூழ்ந்த பகுதியில் தூண்கள் நிறுவி மண்டபமாக அமைத்துள்ளனர். தூண்களில் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன, சின்னப் பட்டத்தில் இருப்பவரும் தம்பிரான்களும் நீராடுவதற்காக நீராழிக்குளம் ஏற்பட்டது எனலாம். இம்மடம் தொடங்கிய சிறிது காலத்திலேயே குளமும் உருவாக்கியிருக்க வேண்டும். மடைப்பள்ளி வழியாகவும் வழக்கமான வழியாகவும் இந்நீர் நிலைக்கு வரலாம். நீர் தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்கிறது. இந்நீர், வெண் பளிங்கு போன்ற தூய நீர் ஆகும். குளத்தில் இறங்குவதற்குப் படிகள் உள்ளன. மிகவும் ஆழமாக இல்லாததால் ஆபத்து இல்லை. நீச்சல் தெரிந்தவனும் தெரியாதவனும் குளிப்பதற்கேற்ற நீர் நிலை இதுவாகும்.

**சமாதி:**

இந்நீர் நிலைக்குப் பின்புறம், தம்பிரான்களின் சமாதிகளைக் காணலாம். சீர்வளர் சீர் சிவப்பிரகாச சுவாமிகளாகிய 23 ஆவது குருமகா சந்நிதானம் மடத்தின் பின்புறம் நந்தவனம் அமைத்துத் தந்துள்ளார்கள். மடத்தின் எதிரில் பூஞ்சோலையுடன் ஒரு தோப்பும் உள்ளது. பழ மரங்களும் பயன்படு மரங்களும் இங்குள்ளன. சுற்றிலும் பல ஊர்களில் மடத்திற்குரிய நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டு

செம்மையாகவே நிருவகிக்கப்படுகிறது. இனி, மடத்தில் உள்ள கல்வெட்டுகளைக் காண்போம்.

**கல்வெட்டு:**

மடத்தின் நுழைவாயிலின் கதவில் 48 வரிகள் பொறிக்கப் பட்ட கல்வெட்டு, மடத்தின் தொன்மையைப் பறை சாற்றுகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 908 | 20 | தே | 38 | பூமு |
| 2 | பரி | 21 | சிக | 39 | கப் |
| 3 | தா | 22 | ன்க | 40 | புநீ |
| 4 | விஞு | | | 41 | டூழி |
| 5 | தை | | | 42 | வா |
| 6 | மீஷ | 23 | ல் | 43 | ழ்க |
| 7 | பிர | 24 | லி | 44 | கு |
| 8 | திட் | 25 | டை | 45 | ருபா |
| 9 | டை | 26 | க்கு | 46 | தந் |
| 10 | பண் | 27 | றுச் | 47 | து |
| 11 | ணின | 28 | சித் | 48 | லே. |
| 12 | திரு | 29 | தளி | | |
| 13 | வா | 30 | கை | | |
| 14 | வடு | 31 | மா | | |
| 15 | துை | 32 | நக | | |
| 16 | றப | 33 | ரத் | | |
| 17 | ஞ்ச | 34 | தும | | |
| 18 | ரட் | 35 | டா | | |
| 19 | சர | 36 | லை | | |
| | | 37 | யப் | | |

கொல்லம் 908-இல் அதாவது கி.பி. 1733-ஆம் ஆண்டு பரிதாபி வருடத்தில் தை மாதம் திருவாவடுதுறை பஞ்சாட்சர தேசிகராய் குருமகா சந்நிதானமாக இருநதவர், கல்லிடைக் குறிச்சியில் உள்ள தளிகை மாநகரத்து மடாலயத்தில் பூமுகப் பினை (கதவினை) செய்தளித்துள்ளார். அவர் புகழ் வாழ்க.

அவர் அருள் நமக்குக் கிடைக்க வேண்டும் என்ற பொருளில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. கி.பி.1733ஆம் ஆண்டில் திருவாவடுதுறை ஆதினத்தின் குருமூர்த்திகளாக இருந்தவர் 12ஆவது பட்டம் திருச்சிற்றம்பல தேசிகர் ஆவார். மடம் இருந்த பகுதி தளிகை மாநகரம் என்று பொறிப்பில் காண்கிறோம்.

**அம்பலவாணர்:**

12ஆவதுபட்டத்தில் இருந்த தேசிகர் கடையநல்லூரில் பிறந்த அம்பலவாண தேசிகரைச் சின்னப்பட்டத்தில் அமர்த்தினார்கள். சுசீந்திரத்தில் இவர்கள் சிலகாலம் இருந்தார்கள். கல்லிடைக்குறிச்சியில் இருந்த அன்பர்கள் வேண்டுகோளின்படி திருத்தளிச்சேரிக்கு (கல்லிடைக்குறிச்சி மடத்திற்கு) எழுந்தருளிச் சீடர்களுக்கு உபதேசம் செய்து வந்தார்கள். இவர்கள் காலத்தில்தான் சுசீந்திரத்தில் இருந்த சின்னப்பட்டம் கல்லிடைக்குறிச்சித் திருத்தளிச்சேரிக்கு மாற்றப் பட்டது என்பது திருமடத்தின் வரலாறாகும்.

**சன்னிதிமடம்:**

தளிகை மடத்தின் நடராசர் சன்னிதிக்கு முன்புறம் தூண்களுடன் கூடிய மண்டபம் உள்ளது. தூண்களில் அடியார் உருவங்கள் உள்ளன. சன்னிதியின் எதிரில் கிழக்குப் புறமுள்ள தூணில் மேற்குப் பார்த்த திசையில், அடியார் ஒருவரின் தலைக்கு மேல் கல்வெட்டு ஒன்றுள்ளது.

1) 1000ஸ்ரீ ஆவணி மீ 6உ பகழி

2) க்கூத்தன் சன்னதி மடம்

3) கல்லிடைக்குறிச்சி மா

4) காண நாட்டுக் கணக்

5) குடிையூர் கோயிலு

6) ண்டான சீபண்

7) டாரக் கணக்கு

8) வகை மாலைசதா

9) சேர்வை திசைவி

10) ளங்கும் பெருமான்

11) சதா சேர்வை.

**பகழிக்கூத்தர் கோயில்:**

கல்வெட்டின் காலம் கி.பி. 1825 ஆகும். 'பகழிக் கூத்தன் சன்னிதி மடம்' கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. தளிகை மடத்திற்கருகில் 'பகழிக் கூத்தர் கோயில்' என்ற கோயில் இன்றும் உள்ளது. இக்கோயில் வரலாறு முன்பே கண்டோம். இப்பெயரால் தளிகை மடம் அழைக்கப்பட்டுள்ளது.

**திசைவிளங்கும் பெருமாள்:**

நாட்டுக் கணக்கு, கோயிலுண்டான சிபண்டாரக் கணக்கு என்ற இரண்டு கணக்குகளில் சிபண்டாரக் கணக்கு மடத்துடன் தொடர்புடையது. 'திசை விளங்கு பெருமாள்' என்பவரின் உருவமும் உள்ளது. மண்டபம் எடுத்தவர் இவரே ஆவார்.

**14ஆவதுபட்டம்:**

பதினான்காவது குரு மூர்த்திகளாக இருந்த வேளூர் சுப்பிரமணிய தேசிகர் 1790-1845வரை அருளாட்சி செய்தவர்கள். இவர்கள் காலத்தில் திருமாகறல் கனகசபாபதி என்பவர் சின்னப்பட்டத்தில் இருந்தார்கள். இவர்கள் கல்லிடைக்குறிச்சித் திருத்தளிச்சேரியில் ஸ்ரீமடத்தின் பொறுப்புகளைக் கவனித்து வந்தபோது அங்கேயே ஒரு தை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் பரிபூரணம் அடைந்தார்கள் என்பது வரலாறு. மடத்தின் பின்புறம் தோப்பில் இவர்களுடைய சமாதி உள்ளது.

**இராசவல்லிபுரம்:**

இவருக்குப் பின் இராச வல்லிபுரத்தைச் சேர்ந்த சுப்பிரமணிய தேசிகரைச் சின்னப் பட்டத்தில் குருமகா சந்நிதானம் அவர்கள் நியமித்தார்கள். இவர்களும் சிலகாலம் இங்கிருந்து பின் திருவாவடுதுறை சென்று மாசி மாதம்

ஒன்றில் பரிபூரணம் அடைந்தார்கள். இவர்கள் இருவரில் ஒருவர் காலத்தில் இக்கல்வெட்டு வெட்டுவிக்கப்பட்டது எனலாம்.

**நமச்சிவாயர் சமாதி:**

மடத்தின் தோப்பில் சின்னப் பட்டத்தில் இருந்த நமச்சிவாய தேசிகரின் சமாதிக் கோயிலில் கீழ் வரும் கல்வெட்டு உள்ளது.

1. 1058 ௵ தை
2. ஸ்ரீ சிவநமசிவ
3. ாய தேசிக சுவா
4. மிகள் பரிபூறண
5. மான தினம்.

சமாதிக் கோயிலின் முன்புற மண்டபத்தின் விதானத்தில் இக்கல்வெட்டு உள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி. 1883 ஆகும். கல்வெட்டின் அருகில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கும் தம்பிரான் சுவாமி உருவம் கல்வெட்டுடன் உள்ளது.

''காறுபாறு நமசிவாய
தம்பிரான்'' என்பது கல்வெட்டாகும்.

நமச்சிவாயர், பதினாறாவது பட்டத்தில் இருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் காலத்தில் சின்னப் பட்டத்தில் அமர்த்தப் பட்டு கல்லிடைக் குறிச்சித் தனிகை மடத்தில் இருந்து உபதேசம் செய்து வந்தவர்கள். இங்கேயே 1883இல் சிவபரிபூரணம் அடைந்துள்ளார்கள்.

**தம்பிரான்கள்:**

திருவாவடுதுறை 16 ஆவது குருமூர்த்திகள், தாண்டவரா யத்தம்பிரான், ஆறுமுகத் தம்பிரான், காறுபாறு வேணுவனலிங் கத்தம்பிரான், முத்துக்குமாரத் தம்பிரான் முதலியோர்களைத் தம்பிரான்களாக நியமித்துள்ளார்கள். ஈண்டுக் குறிக்கப்படும்

காறுபாறு நமசிவாய தம்பிரான் சமாதிக் கோயில் கட்டியவர் போலும். சுவாமிகள் சிரசிலும் கையிலும் கழுத்திலும் உருத்திராட்ச மாலைகள் உள்ளன.

**மரக்கட்டில்:**

கல்லிடைக்குறிச்சித் தளிகை மடத்தின் சேமிப்புக் கிடங்கில் கொல்லம் 1068 இல் செய்யப்பட்ட மரக்கட்டில் உள்ளது. கட்டிலில் 'மகாதேவர் துணை' என்று வெட்டப் பட்டுள்ளது. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1893 ஆகும்.

கல்லிடைக்குறிச்சி மானேந்தியப்பர் கோயில் மரக்கதவு ஒன்றில் கல்வெட்டு உள்ளது. இங்குக் கொல்லம் 900 இல் செல்வகுரு அம்பலம் என்பவர் (சின்னப்பட்டத்தில் இருந்த அம்பலவாண தேசிகர்) கதவினை அளித்துள்ளார். அவருடைய உருவமும் கோயிலில் உள்ளது கதவு முழுவதும் புடைப்புச் சிற்பங்கள் உள்ளன. மடத்தின் கொலுமண்டபத்தில் புடைப்புச் சிற்பங்களுடன் கூடிய கதவுகள் இருப்பதை ஏற்கனவே கண்டோம். ஆனால் எழுத்துகள் இல்லை.

**தளிகை மடத்தின் காலம்:**

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர்கள் பலரும் கல்லிடைக் குறிச்சிக்கு எழுந்தருளியுள்ளார்கள். பன்னிரண்டாவது குரு மகான் திருசிற்றம்பல தேசிகர் காலத்தில் அம்பலவாண தேசிகர் இளைய பட்டத்தில் இருந்துள்ளார். பின் இவர் பதிமூன்றாவது தேசிகராக விளங்கினார்கள். இவர் காலத்தில் மடம் விரிவு படுத்தப் பட்டது.

**கல்கட்டிடம்:**

16 ஆவது பட்டத்தில் சுப்பிரமணிய தேசிகர் இருந்த போது துவிதிய ஆசிரியர் நமசிவாய தேசிகர், அத்தாணி மண்டபம் கட்டியிருக்க வேண்டும். இதே காலத்தில் மேல் தளமும் மாடிக்குச் செல்ல இரு இடங்களில் படிக்கட்டுகளும் அமைக்கப் பட்டிருக்க வேண்டும். தற்போது விருந்தினர் வந்தால் மாடியில் உள்ள அறைகளில் தங்கலாம். கல்கட்டிட மாக இருக்கும் தளம் சுண்ணாம்புக் காரை கொண்டு முழு மையாக பூசப்பட்டுள்ளதால் மழை பெய்தாலும் கீழே

ஒழுகாது. இங்கே வெண்கலத்தில் கூடிய மணி ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. பழங்காலத்தில் கல் கட்டிடங்கள் எப்படி இருந்திருக்கும் என்பதற்குத் தளிகை மடம் சிறந்த எடுத்துக் காட்டு. இதன் தொன்மையைச் சிதைக்காதவாறு சீர்வளர் சீர் சிவப்பிரகாச சுவாமிகள் பாதுகாக்க நடவடிக்கை மேற் கொண்டு வருகிறார். இனி இம்மடத்திற்கு வந்து அருளுரை வழங்கிய துறசை குருமகான்கள் குறித்து ஒரு சில செய்திகள் காண்போம்.

**ஈசானிய மடங்கள்:**

தென் பாண்டி நாட்டில் பாபநாசம், திருப்புடை மருதூர் செல்வல், திருநெல்வேலி, முரப்பநாடு, வள்ளியூர், கன்னியா குமரி, சுசீந்திரம் என்ற எட்டுத் தலங்களில் ஈசானத் தம்பிரான் என்பவர் உருத்திரகோடி தேசிகர் அருளாட்சியின்போது மடங்களை நிறுவித் திருவாவடுதுறையின் கிளை மடங்களாக விளங்கச் செய்தார். இம்மடங்களுக்கு முத்து வீரப்ப நாயக்கர் பொன்னும் பொருளும் மிகுதியாக வழங்கினார் என்று குரு பரம்பரை வரலாறு கூறுகிறது.

**செவந்திபுர மடம்:**

செவந்திபுரம் என்ற ஊரில் வேணுவலிங்கத் தம்பிரான் என்பவர், பதினாறாவது குருமகனாக இருந்த மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் திருமேனியை எழுந்தருளிவித்ததுடன் செவந்திபுரத்தின் மடத்தைப் புதுப்பித்து, பாடல் வடிவில் கல்வெட்டும் பொறித்து வைத்துள்ளார். இக்கல்வெட்டின் காலம் கி.பி.1877 ஆகும். இச்செவந்திபுரம் விக்கிரம சிங்க புரத்திற்கும் அம்பா சமுத்திரத்திற்கும் இடையில் உள்ளது. இம்மடமும் உருத்திர கோடி தேசிகர் காலத்தில் ஏற்பட்டதே யாகும்.

**கல்லிடைக்குறிச்சி மடம்:**

திருவாவடுதுறை ஆதீனத்தின் 12ஆவது பட்டத்தில் இருந்த திருச்சிற்றம்பல தேசிகர் காலத்தில் கி.பி.1733 இல் கூடியமரக்கதவில் உள்ள கல்வெட்டே மடத்தில் தொன்மை வாய்ந்தது என்பதால் கி.பி.1733க்கு முன் தளிகை மடம் கட்டப்

பட்டிருக்க வேண்டும். மானேந்தியப்பர் கோயிலில் 1725 ஆம் ஆண்டு கல்வெட்டு மரக்கதவில் உள்ளது. மேலும் அம்பலத்தாடி மடம் என்ற மடம் 1596 ஆம் ஆண்டுக் கல்வெட்டில் உள்ளது. எனவே உருத்திர கோடி தேசிகர் காலத்தில் சிறிய அளவில் கல்லிடைக் குறிச்சி மடம் இருந்து பின் விரிவு படுத்தப் பட்டது எனலாம். ஆகவே செவந்திபுரம் மடத்திற்கும் முற்பட்ட மடமாகத் தளிகை மடத்தைக் குறிப்பிடலாம். பிற்காலத்தில் பகழிக் கூத்தன மடம் என இது வழங்கப் பட்டுள்ளது.

**தளிச்சேரி மடம்:**

குருபரம்பரை விளக்கம் என்ற நூலும் திருச்சிற்றம்பல தேசிகர் சரித்திரத்தில்தான், முதன் முதலில் கல்லிடைக்குறிச்சி என்ற ஊரைக் குறிப்பிடுகிறது. அம்பலவாண தேசிகர் அப்போது இளையபட்டத்தில் இருந்தார். இவர் பாபநாசம் ஈசான மடத்தில் தங்கியிருந்த காலத்தில் கல்லிடைக்குறிச்சியில் உள்ள சில பிரபுக்கள் தம்முடைய ஊருக்கு எழுந்தருளுமாறு வேண்டினார்கள். சுவாமிகள் அதற்கிசைந்து கல்லிடைக் குறிச்சிக்குச் சென்று திருத்தளிச்சேரியில் உள்ள மானேந்தியப் பரை வழிபட்டு ஏற்கனவே கட்டி முடிக்கப்பட்டிருந்த திருமடத்திற்கு எழுந்தருளினார். இம்மடம் தளிச்சேரி மடமாகும்.

**கும்பாபிஷேகம்:**

கல்லிடைக்குறிச்சியில் உள்ள அன்பர்கள் தமது ஞானாசிரிய சுவாமிகளுக்குப் பூசை, மாஹேஸ்வர பூசை சிறப்புறச் செய்வித்து அன்றிரவு ஆசாரியரைப் பவனி கொண்டருளச் செய்வித்தும் குரு தரிசன காட்சி பெற்று பேசற்கரிய பேரானந்தமுற்றனர். சுவாமிகள் சுசீந்திரத்தில் தங்கியிருந்து ஞானோபதேசம் செய்தது போல் தம்மூரில் தங்கி உபதேசம் செய்யுமாறு வேண்டினர். தங்களால் முடிந்த அளவு விளைநிலங்களும் வழங்கினர். துவிதீய ஆசிரியர் இங்கே தங்கியிருந்து கண்ணுவ முனிவர் பூசித்த மானேந்தியப்பர் கோயிலுக்குத் திருப்பணி செய்து கும்பாபிஷேகமும் செய்தருளினார். மானேந்தியப்பர் கோயில்

நுழைவாயில் மரக்கதவில் அம்பலவாணர் காலத்தைச்சேர்ந்த 6 வரி கல்வெட்டும் உள்ளதை ஏற்கனவே கண்டோம். கல்வெட்டு சிதைந்திருந்தாலும் கல்வெட்டின் வருடம் சிதையவில்லை. கொல்லம் 900 (கி.பி. 1725) ஆகும். கல்வெட்டில் பெயரும் உள்ளது. ஏறக்குறைய இதே காலத்தில் திருத்தளிகை மடத்திலும் சில பகுதி கட்டியிருக்க வேண்டும் என்று நாம் அனுமானிக்கலாம். நுழைவாயில் கதவு கி.பி. 1733இல் கட்டப்பட்டதை முன்பே கண்டோம்.

**பதினான்காவது குருமகான்:**

பதிமூன்றாவது குருமகானாக அம்பலவாண தேசிகர் செங்கோலோச்சும் காலத்தில் ஒருமுறை துவிதீய ஆசிரியர் சுப்பிரமணிய தேசிகர் மற்றும் தம்பிரான்களுடன் தென் பாண்டி நாடு வந்த போது கல்லிடைக்குறிச்சிக்கும் வந்தார். மானேந்தியப்பரை வழிபட்டு தளிகை மடத்தில் சில காலம் தங்கியிருந்து துவிதீய ஆசிரியராகிய சுப்பிரமணிய தேசிகரை அங்கிருந்து சீடர்களுக்கு தீக்கையாதிகள் செய்து வருமாறு ஞானதேசிகர் அருளாணையிட்டார்கள். அவரும் அவ்வாறே தளிகை மடத்தில் இருந்து உபதேசித்து வந்தார். அம்பலவாண தேசிகர் சிவபரிபூரணமுற்ற செய்தியை அடியார்களில் சிலர் தளிகை மடம் வந்து சுப்பிரமணிய தேசிகரிடம் கூறினர் தேசிகர் துயரம் அடைந்தாலும் கடமையை நிறைவேற்ற திருவாவடுதுறை போந்து ஆதீன கர்த்தரானார்.

**கனகசபாபதி:**

தொண்டை நாட்டைச் சேர்ந்த திருமாகறல் கனகசபாபதி தம்பிரானை ஒரு நல்ல நாளில் ஞானதேசிகர் துவிதீய ஆசாரியராக நியமித்தார். ஞானதேசிகரும் கனகசபாபதியும் தம்பிரான்களும் தென் பாண்டி நாட்டில் பல தலங்களைத் தரிசித்த பின், கல்லிடைக் குறிச்சியில் உள்ள தளிகை மடத்திற்கு வருகை புரிந்தார்கள்.

**சிவபரிபூரணம்:**

மடத்தில் தங்கியிருந்து சீடர்களுக்கு, தீக்கையாதிகளும் சித்தாந்த சாத்திரக் கருத்துகளும் செய்து வருமாறு துவிதீய

ஆசிரியருக்கு உத்தரவு வழங்கி விட்டு, ஞானாசிரியர் திருவாவடுதுறை திரும்பினார். துவிதீய ஆசிரியராகிய கனகசபாபதி தேசிகர், சீடர்களுக்கு உபதேசம் செய்து வீற்றிருக்கும் நாட்களில் ஓர் தை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தில் சிவபரிபூரணம் அடைந்தார்.

**இராசவல்லிபுரத்து சுப்பிரமணிய தேசிகர்:**

கனகசபாபதி பரிபூரணமடைந்த செய்தி அறிந்து ஞானதேசிகர் இராசவல்லிபுரத்து சுப்பிரமணிய தம்பிரானை துவிதீய ஆசிரியராக நியமித்தார். ஞானதேசிகர், துவிதீய ஆசிரியர் மற்றும் தம்பிரான்களுடன் தென்பாண்டி நாட்டில் பல இடங்களில் தரிசனம் புரிந்து கல்லிடைக் குறிச்சிக்கு வந்தார். அங்கிருந்து சிவனடியார்களுக்கு உபதேசம் புரியுமாறு ஆசிரியருக்கு ஆணையிட்டுவிட்டு ஞானதேசிகர் திருவாவடு துறை திரும்பினார்.

**சிவனடி சேர்தல்:**

நெடுங்காலம் கல்லிடைக் குறிச்சித் தளிகை மடத்தில் இருந்து உபதேசம் செய்து வந்த துவிதீய ஆசிரியர், தம்முடைய ஞானாசிரியரைக் காண திருவாலடுதுறை வந்தார் சில காலம் கழித்து மாசி மாதம் அவிட்ட நட்சத்திரத்தில் இவர் சிவபதம் எய்தினார்.

**பதினாறாவது குருமகான்:**

பதினைந்தாவது குருமகா சந்நிதானம், செங்கோலோச்சும் காலத்தில் ஒருமுறை சீடர்களுடன் தென்னாடு சென்ற போது கல்லிடைக் குறிச்சிக்கும் சென்றார். இங்குள்ள மானேந்தியப் பரையும் வடிவாம்பிகையையும் வழிபட்டு, தமது திருமடத்திற் கெழுந்தருளி துவிதீய ஆசிரியராகிய கனகசபாபதி தேசிகர் குருமூர்த்தம் தரிசனம் செய்து, சிலகாலம் அங்கு வீற்றிருந்தார். அவ்வாறு தளிகை மடத்தில் இருந்த காலத்தில்தான், குற்றாலலிங்கமென்னும் பிள்ளைத் திருநாமமுடைய வரை இளைய பட்டத்தில் நியமித்தார். அவருக்குச் சுப்பிரமணிய தேசிகர் என்ற திருப்பெயரையும் ஞானதேசிகர் சூட்டி மகிழ்ந்தார்.

**சென்னையைச் சேர்ந்த அடியார்கள்:**

துவிதீய ஆசிரியர் சுப்பிரமணிய தேசிகர், குருவின் அருளாணைக் கிணங்க, கல்விடைக் குறிச்சித் தளிகை மடத்தில் இருந்து அடியார்களுக்கு அறிவுரைகள் வழங்கி வந்தார்கள். அப்போது விசாகப் பெருமாளையர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார், திருவண்ணாமலை வீரபத்திர ஐயர், சிதம்பரம் தளவரிசை சுப்பிரமணிய பண்டிதர், திருநீர்மலை கோபால கிருஷ்ண கவிராயர், யாழ்ப்பாணம், அளவையம்பதி கனகசபாபதி பிள்ளை, சந்திரசேகர கவிராஜ பண்டிதர் ஆகியோர் ஆதீன மகாவித்துவானாகிய தாண்டவராய தம்பிரான் சுவாமிகளுடன் கல்விடைக் குறிச்சி அடைந்து திருத்தளிகை மடத்தில் நமச்சிவாய மூர்த்திகள் மகரத்தலை நாள் குருபூஜை மகோத்சவ சுபதினத்தில் பங்கு கொண்டனர். மேற்கண்ட பண்டிதர்கள் பலரும் சென்னையில் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். துவிதீய ஆசிரியரைப் புகழ்ந்து கவிகள் பாடிச் சில நாள் தங்கியிருந்து பின் சென்னை நகருக்குச் சென்றுள்ளார்கள். துவிதீய ஆசிரியர் தளிகை மடத்தில சில காலம் தங்கியிருந்து பின் திருவாவடுதுறைக்குச் சென்றார். மீண்டும் ஞானாசிரியர் எண்ணத்திற்கேற்ப திருத்தளிகை மடத்திற்குப் புறப்பட்டார். வழியில் பல இடங்களில் அன்பர்களுக்கு உபதேசம் செய்து வரும் நாளில் ஞானதேசிகர் கடிதத்திற்கிணங்க திருவாவடு துறை திரும்பினார். இளைய பட்டம் வருவதற்குள் ஞான தேசிகர் சிவபரிபூரணம் அடைந்தார்.

**இளைய பட்டம்:**

சுப்பிரமணிய தேசிகர் 16 ஆவது பட்டத்தில் அமர்ந்து அருளாட்சி செய்ய முற்பட்டார்கள். நமசிவாய தேசிகர் என்பவரை இளைய பட்டத்தில் பதினாறாவது ஞான தேசிகர் நியமித்தார்.

**வேணுவலிங்கத் தம்பிரான்:**

ஞான ஆசிரியர் தமது துவிதீய ஆசிரியர் மற்றும் தம்பிரான்களுடன் நெல்லை மாவட்டம் பாபநாசம் சென்று சில நாள் ஈசான மடத்தில் தங்கினார். பின் செவந்தி புரத்தில் வேணுவலிங்கத்தம்பிரான் விருப்பப்படி அங்குள்ள மடத்தில்

தங்கியிருந்து பின் கல்லிடைக் குறிச்சித் தளிகை மடத்திற்கு வருகை புரிந்தார். இங்குள்ள மானேந்தியப்பரையும் வடிவாம்பிகையையும் மடத்தில் உள்ள கனகசபாபதி மூர்த்தத்தையும் வழிபட்டார். சிலநாள் தங்கியிருந்த பின் துவிதீய ஆசிரியரை அங்கிருந்து உபதேசம் செய்யுமாறு கூறிவிட்டு ஞானதேசிகர் நெல்லைக்குப் புறப்பட்டார்.

**ஆயில்ய மகாராஜா:**

சிறிது நாளில் குருமகான் சுசீந்திரத்தை அடைந்தார். திருவனந்தபுரம் ஆயில்ய மகாராஜா வேண்டுதலின்படி துவிதீய ஆசிரியருடன் தாமும் திருவனந்தபுரம் சென்றார். அரசர் சிவிகை, பொற்குடை முதலாகிய வரிசைகள் இருவருக்கும் செய்தார்கள். மீண்டும் சுசீந்திரம் அடைந்து அங்கிருந்து கல்லிடைக் குறிச்சிக்கு ஆசாரியர்கள் வந்தார்கள்.

**நமச்சிவாயர் சிவகதிஅடைதல்:**

நமச்சிவாயர், கல்லிடைக்குறிச்சியிலேயே இருந்து அன்பர்களுக்கு உபதேசம் செய்யுமாறு கூறிவிட்டு ஞானதேசிகர் திருவாவடுதுறை அடைந்தார். சில காலம் சென்ற பின் ஞானதேசிகர் மதுரை வந்திருந்த போது துவிதீய ஆசிரியர் கல்லிடைக்குறிச்சியினின்று நீங்கி மதுரை அடைந்து குருமகானைப் பணிந்து அளாவளாவினார். பின் இருவரும் நெல்லைக்குச் சென்று ஈசான மடாலயத்தில் தங்கினர். பின் இருவரும் கல்லிடைக் குறிச்சிக்குச் சென்றனர். ஆசாரியர் அன்றிரவு பவனி வந்து, துவிதீய ஆசிரியர் நமசிவாய தேசிகர் அதிவிசித்திரமாகச் செய்தருளிய அத்தாணி மண்டபத்தில் வீற்றிருந்து குருதரிசனக் காட்சி தந்தார். ஏற்கனவே நாம் விரிவாகக் கண்ட கொலு மண்டபமே அத்தாணி மண்டபம் எனலாம். சிலநாள் இங்கிருந்தபின், துறசை ஞானதேசிகர் செவந்திபுரம் மடத்திற்குப் புறப்பட்டுச் சென்றார்கள். குருமகான் கட்டளைக்கிணங்க இளைய பட்டத்தில் இருந்த நமசிவாய தேசிகர் கல்லிடைக் குறிச்சிக்குச் சென்று சில நாட்கள் அங்கேயே தங்கியிருந்து சீடர்களுக்கு அறிவுரை வழங்கிவரும் நாளில் சித்திரபானு வருடம் தை மாதம்

கார்த்திகை நட்சத்திரத்தில் மேலான சிவகதி அடைந்தார். மடத்தின் பின்புறம் தோட்டத்தில் இவருடைய சமாதி இன்றுமுள்ளது. பதினாறாவது சன்னிதானத்திற்குப் பின்னரும் குரு மகான்களும் துவிதிய ஆசிரியர்களும் தம்பிரான்களும் கல்லிடைக்குறிச்சிக்கு அவ்வப்போது வந்து சென்றுள்ளார்கள்.

**சீர்வளர் சீர் சிவப்பிரகாசர்:**

மானேந்தியப்பர் கோயிலுக்கும் குலசேகரமுடையார் கோயிலுக்கும் பூசைகள் செவ்வனே நடைபெற அவ்வப்போது தற்போதுள்ள குருமகான் உதவி வருகிறார்கள். தவிர இதர கோவில்களுக்கும் உதவி புரிவதோடு குமரன் கோவில் தெரு வடக்குரத வீதியில் உள்ள 156A, என்ற எண்ணுள்ள பழைய கட்டிடத்தை விலைக்கு வாங்கி புதுப்பித்து மானேந்தியப்பர் விளாபூசை கட்டளைக்கும் ஏழைப் பெண்கள் இலவசமாகத் தையல் கற்றுக் கொள்ளும் பயிற்சி நிலையத்திற்கும் வழங்கியுள்ளார்கள். தையல் பயிற்சி நிலையம், வடிவாம்பாள் இலவச மகளிர் பயிற்சி நிலையம் என்று அழைக்கப்படுகிறது. விளாபூசை கட்டளை அலுவலகமும் நெற்களஞ்சியமும் இங்குள்ளன. கட்டிடத்திற்கு எதிரில் பாதாள அறை ஒன்றும் உள்ளது.

தென்பாண்டி நாட்டில் உள்ள துறைசை ஆதினக்கிளை மடங்களில் கல்லிடைக் குறிச்சியில் உள்ள தளிகை மடம் இயற்கை எழில் மிக்க சூழலில் அமைந்துள்ளது. துறவியர் தங்குவதற்கேற்ற மடம் இதுவெனலாம். சீர்வளர் சீர் சிவப்பிரகாச தேசிகர் தென்பாண்டிப் பகுதிக்கு முகாம் மேற்கொள்ளும் போது, பிறகிளை மடங்களில் தங்குவதைக் காட்டிலும் இங்குதான் அதிகமாகத் தங்குகிறார்கள்.

நான் கல்லிடைக்குறிச்சியில் உள்ள கோயில்கள் ஆய்வு செய்ய சென்றபோது இம்மடத்தில்தான் தங்கினேன். மடத்தின் ஆய்வர் திரு. ஆவுடைநாயகமும் பணியாளர்களும் என் ஆய்விற்குப் பெரிதும் உதவி புரிந்துள்ளார்கள். தவிர இவ்வூரில் உள்ள கோயில்களை ஆய்வு செய்ய அடியேனுக்கு ஆசி வழங்கிய சீர்வளர் சீர் சிவப்பிரகாச சுவாமிகளை வணங்குகிறேன்.

# திருஞானசம்பந்தர் மடம்

சைவ நாயன்மார் பெயர்களில், பல்வேறு ஊர்களில் பல்வேறு காலங்களில் மடங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. திருஞான சம்பந்தர் பெயரில் மதுரையில் கி.பி. 1638-ல் ஒரு மடம் இருந்துள்ளது. இம்மடத்திற்குக் கல்லிடைக்குறிச்சியின் மேற்பால் வயிராவிக் குளத்தையொட்டி நிலம் தானமாக வழங்கப்பட்டுள்ளது. மடம் மதுரையில் இருந்ததாகக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. கல்லிடைக்குறிச்சியில் மானேந்தியப்பர் கோயில் அருகே திருவாவடுதுறை ஆதீனத்தின் கிளைமடமான தளிகை மடம் இருப்பதை நாம் அறிவோம். இம்மடத்தின் பொறுப்பில் மிகுதியான நிலங்கள் இருப்பதையும் அறிவோம். அதேபோல் மதுரை திருஞானசம்பந்த மடத்திற்கும் இவ்வூரில் மதுரை திருமலை நாயக்க மன்னர் காலத்தில் நிலங்கள் வழங்கப்பட்டுள்ளன. இச்செய்தியைக் குறிப்பிடும் கல்வெட்டு கல்லிடைக்குறிச்சி அருகேயுள்ள விஜயாவிகுளம் (வயிராவிக் குளம் என்க) என்ற இடத்தில் உள்ளது. மத்திய அரசு கல்வெட்டுத்துறை 1916ஆம் ஆண்டில் படியெடுத்து அதன் சுருக்கத்தை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளது. அக்கல்வெட்டின் முழுவாசகம் வருமாறு:

1. சகாத்தம் 1569 இன்
2. மேல் செல்லா நின்ற கொல்லம்
3. 824 ஷு சர்வதாரி ஷு ஆவ
4. ணி மீ 3 உ குருவாரமும் ரோகிணி
5. நட்செத்திரமும் தெசமியும் அமு
6. ர்தயோகமும் பெற்ற நாள்
7. ஸ்ரீமது விசுவநாத நாயக்கர் திரும
8. லை னாயக்கரய்யன் புண்ணிய
9. மாகவும் எம்பெருமான் பி
10. ள்ளை அவர்கள் புண்ணிய

11. மாகவும் மதுரை திருஞ
12. ான சம்பந்த பண்டாரம
13. டத்துக்கு கட்டளையிட்டது முள்ளி
14. வளநாட்டு கல்லடைக்குறிச்சி
15. மேல்பால் வயிராவி குளம் உ
16. ரோது புரவு நான்கெல்லைக்குள்
17. பட மேல்நோக்கிய மரமும் கீ
18. ள் நோக்கிய கிணறும் ஏறுங்
19. குளமும் எல்கையும் வழிகடை
20. முதமுதலாக சறுவமானியமாக
21. கட்டளையிட்ட படியினாலே சந்தி
22. ராதித்தர் சந்ததிப் பிரவேசவ
23. ரையும் ஆண்டு அனுபவித்து
24. க் கொள்ளுவதாகவும் இ
25. த்தன்மத்துக்கு யாதாமொரு
26. த்தர் அகுதம் பண்ணினவன்
27. கெங்கைக்
28. கரையில் கா
29 ராம் பசுவை
30. க் கொன்ற தோ
31. ஷத்தில் பே
32. ாவார்களாகவும் இ
33. ந்த தன்மத்
34. தை பரிபால
35. னம் பண்ணி
36. னவன் அசுவ

விசுவநாதநாயக்கர், திருமலைநாயக்கர் மதுரைநாயக்க வரலாற்றில் காண்கிறோம். திருமலை நாயக்கரை அடுத்துள்ள எம்பெருமான்பிள்ளை அதிகாரி போலும். விக்கிரமசிங்கபுரம், பாபநாசம் போன்ற ஊர்களில் திருமலை நாயக்கருடன் வடமலையப்பபிள்ளை இடம் பெறுவதால் இங்குக் குறிக்கப் படும் எம்பெருமான்பிள்ளை வடமலையப்ப பிள்ளையின் உறவினராக இருக்கவேண்டும். காரணம் கல்லிடைக் குறிச்சியில் உள்ள இலக்குமி நரசிம்ம பெருமாள்கோவில் மீது வடமலையப்பர் வருக்கக்கோவை ஒன்றைப்பாடியுள்ளதால் கல்வெட்டில் இடம் பெறும் பிள்ளை, வடமலையப்பர் உறவின ராக இருக்கலாம். மதுரையில் இன்றும் திருஞானசம்பந்தமடம் செம்மையாகச் செயல்பட்டு வருவதை நாமறிவோம். கல்லிடைக் குறிச்சிக் கல்வெட்டொன்றிலும் திருஞானசம்பந்த தளம் தொடர்பாக ஏற்கனவேகண்டோம். தற்போது மதுரை திருஞானசம்பந்த மடத்திற்கு வயிராவிக் குளத்திலோ கல்லிடைக் குறிச்சியிலோ நிலம் இருப்பதாகத் தெரியவில்லை.

கி.பி. 1239 இல் வெட்டப்பட்ட இரண்டாம் சடையவர் மன் குலசேரனுடைய தென்கரைக் கல்வெட்டு மதுரை திருஞானசம்பந்தர் மடத்தைக் குறிப்பிடுகிறது. செல்வத் திருவாரூர் தஷிணகோளகி மடத்து ஆசாரிய சிஷ்யரில் தத்புருஷ சிவர் என்பவர் அப்போது மடத்தின் தலைவராக இருந்துள்ளார். எனவே மதுரை திருஞானசம்பந்தர் மடம் பாண்டியர் காலம் தொடங்கி இருந்து வருகிறது.

# கல்லிடைக்குறிச்சி கல்வெட்டில் நாடார்கள் ஓர் ஆய்வு

**சான்றோர்:**

சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தரும் குறுநில மன்னர்களும் நாடாண்ட சங்க காலத்தில் போர் வீரரும் சான்றோர் என வழங்கப்பட்டனர். பண்புகளால் சிறந்தவரைச் சான்றோராகப் பிற்காலத்தில் வழங்கத் தலைப்பட்டனர், பொன்முடியார் வீரனாக்குவது (சான்றோனாக்குதல்) தந்தைக்குக் கடமை என்கிறார்.

**சாணாடு:**

சாணாடு அல்லது சாணார் நாடு பிற்காலத்தில் காண்கிறோம். சான்றார் அல்லது சான்றோரே சாணார் எனப் பிற்காலத்தில் மாற்றப்பட்டனர். 'சாணாடு கிழவன் சாஸ்மின்' என்பதால் சாணார் நாட்டின் தலைவன் சாணாடு கிழவன் என்று அறிகிறோம். சேரன்மாதேவி அம்மை நாதர் கோயில் கல்வெட்டில் சாணாடு என்ற பெயர் உள்ளது.

**எல்லீஸ்துரை:**

தொண்டை நாடு சான்றோருடைத்து என்பர். போர் வீரர் மிகுந்து இருப்பர் என்றும் பொருள் கொள்ளலாம். சான்றோர் புராணம் என்ற நூல் 'மொய்தர தொண்டை நாட்டு முதுகுடி பிறந்த சான்றோர்' என்று கூறுகிறது. எல்லீஸ் துரையும் தொண்டை நாட்டைச் சாணார் நாடு என்கிறார். 'சான்றவரே மிக உடைய தண்டக தேசம்' என்று தக்கை இராமாயணம் என்ற நூல் கூறுகிறது.

**நாடாள்வார்:**

சாணார் பாளையம், சான்றோர் குப்பம், சான்றான் செட்டிவிளை, சாணூர், சாணூரன்பட்டி, திருச்சாணூர் போன்றவை சான்றோருடன் தொடர்புடைய ஊர்கள் எனலாம். போர்வீரர்களாகவும் பனைத் தொழில் செய்பவர்களாகவும் விளங்கியிருந்த சான்றார் பிற்காலத்தில் சாணார்

என்று அழைக்க தலைப்பட்டு, இன்று வரை அவ்வாறே அழைத்து வருவதைக் காண்கிறோம். சான்றார் போலவே நாடாள்வார், நாடான் என வழங்கப்பட்ட இனத்தவர் தற்போது நாடார் என்று வழங்கப்படுகின்றனர். க்ஷத்திரியர் என்றால் அரச மரபினர். இதன் தமிழ் மொழி பெயர்ப்பு நாடாள்வார் அல்லது நாடன் எனலாம். நாட்டையாண்ட க்ஷத்திரியர் பிற்காலத்தில் வன்னியர், நாடார், தேவர், நாயக்கர் என்றெல்லாம் பல்வேறு வகையாகக் காண்கிறோம். சங்க காலத்தில் நாடன், குறும்பொறை நாடன் போன்ற சொற்களில் அரசர்களைக் குறிப்பிட்டுள்ளனர்.

**பிரம்ம க்ஷத்திரியர்:**

பாண்டிய மன்னரை நாடார் இனத்தவராகச் சிலர் கருதுவர். மூவேந்தரையும் நாடார் இனத்தவராகவும் சிலர் குறிப்பிடுவர். பிற்காலத் திருவிதாங்கூர் மன்னரும் நாடார் எனச் சிலர் வாதிடுவர். தக்கயாகபரணி என்ற நூல் சோழரை க்ஷத்திரியர் என்றும் பாண்டியரை பிரம்மக்ஷத்திரியர் என்றும் குறிப்பிடுகிறது.

**மதுரை நாயக்கர்:**

மதுரையைத் தெலுங்கு நாயக்கர் ஆள முற்பட்ட போது பாண்டியர், தென்பாண்டி நாட்டில் பெயரளவில் நாடாண்டனர். அவ்வாட்சியும் பாளையங்கள் அமைந்த பின் வலுவிழந்தன. இப்பாண்டியர்களை நாடார் இனத்தவராகக் குறிப்பிடும் ஆய்வாளர் சிலர், திட்டமிட்டு இவர்களை நாயக்கர் அடக்கியதாகக் குறிப்பிடுவர்.

**கிருஷ்ணாபுரம் கல்வெட்டு:**

திருச்செந்தூர் வட்டம் முத்துக்கிருஷ்ணாபுரம் எல்லையில் கூடிய தூண் கல்வெட்டில் 10 நாடார்களின் பெயர்கள் உள்ளன. திருமலை நாயக்கருக்குத் திறை செலுத்திக் கொண்டு இவர்கள் நாடாண்டனர். காலம் கி.பி. 1639. இக்காலத்திற்கு முன் கி.பி. 14–15 ஆம் நூற்றாண்டில் கல்லிடைக் குறிச்சியில் இவர்கள் துன்பத்திற்கு ஆளாகி உள்ளனர்.

**வெள்ளை நாடன்:**

வேளாண்மைத் தொழில் செய்பவராக இவர்கள் இருந்துள்ளனர். வெள்ளை நாடன் என்போர் ஆளும் பிரிவினர் அடங்கிய ஆட்சிக்குடி எனலாம். திருவாங்கூரிலும் நாடார்கள் ஒடுக்கப்பட்டமை ஒரு கல்வெட்டு மூலம் அறிகிறோம்.

**ஏனாதி:**

ஏனாதி வம்சத்தவர் என்று ஒரு செப்பேடு இவர்களைக் கூறுகிறது. பெரியபுராணத்தில் ஏனாதி நாயனார் புராணம் காண்கிறோம். நாடாள்வார், சான்றார் போலவே உய்யக் கொண்டார் என்ற சொல்லும் பெருமளவில் நாடார் இன மக்களைக் குறித்துள்ளது. இவர்கள் வலங்கை என்ற பிரிவுடன் சேர்த்து வலங்கை உய்யக்கொண்டார் என வழங்கப்பட்டனர்.

**வெள்ளைக்கோவில்:**

கி.பி. 1642இல் வெளியிடப்பட்ட செப்பேட்டில் வலங்கை உய்யக் கொண்டாரிடமிருந்து நிலங்களை 40 பொன்னுக்கு வெள்ளாளர்கள் குடிவிலை முடியாக வாங்கி உள்ளனர். வலங்கை உய்யக் கொண்டாரைக் கூறும் போது வெள்ளைக் கோவிலில் இருக்கும் என்ற தொடரைக் காண்கிறோம். வெள்ளை என்ற சொல் ஆய்வுக் குரியதாகும்.

**முந்நூற்றுவ பட்டர்:**

உய்யக் கொண்டார்களின் குருவாகச் சைவ பிராமணர்கள் விளங்கினர். எழு நூற்றுவபட்டர், முந்நூற்றுவபட்டர் போன்றவர்களைக் கல்வெட்டுகளில் காண்கிறோம். முந்நூற்றுவர், நாலாயிரவர் என்போர் நாடார் என நெல்லை நெடுமாறன் கருதுகிறார். வெள்ளை நாடார் என்பது போல் நிலைமை காரர் என்ற பிரிவும் நாடார் இனத்தில் இருப்ப தாகக் கணேசநாடார் குறிப்பிடுகிறார்.

**உய்யக் கொண்டான்:**

உய்யக் கொண்டான் என்ற பெயரில் தனி நபர்களின் பெயர்கள் உள்ளன. தவிர நிலம், கரை, மலை, மனை, குளம், கால்வாய், உய்யக் கொண்டார் என்ற சொல்லுடன் சேர்ந்தும் வழங்கப்பட்டுள்ளன. உய்யக் கொண்டார் என்ற

சொல்லாட்சி பிற்காலச் சோழர் காலந் தொடங்கி நாம் காண்கிறோம்.

**ஆதித்தன்:**

வலங்கை உய்யக் கொண்டார்கள் இரவிகுல க்ஷத்திரியர் எனவும் வழங்கப் பட்டுள்ளனர். இக்காரணம் பற்றியே ஆதித்தன் என்ற பெயரை நாடார் பலரிடம் காண்கிறோம்.

**நெல்லை நெடுமாறன்:**

வலங்கை வாழ்த்து, வலங்கை மாலை போன்ற நூல்கள் நாடார்களின் பெருமைகளைக் குறிப்பிடுகின்றன. கல்வெட்டுகளின் அடிப்படையில் வலங்கை உய்யக் கொண்டார் என்போர், போர் புரியும் வீரராகவும் நிலக்கிழாராகவும் காண்கிறோம். உய்யக் கொண்டார் குறித்து நெல்லை நெடுமாறன் 26. 5. 96 அன்று மைசூரில் தொல்லியல் துறை கருத்தரங்கில் பேசி உள்ளார்.

**காளி:**

கொடுங்கோளூர் செப்பேட்டின் படி, சத்திரிய குலத்தில் பிறந்த வலங்கை உய்யக் கொண்டார் சான்றார் எனவும் வழங்கப் பட்டுள்ளனர். இச்செப்பேட்டில் கன்னிமார், பத்ரகாளி, வேதவித்தியாதரர் ஆகிய தெய்வங்கள் குறிக்கப் பட்டுள்ளன. உய்யக் கொண்டார்களின் குலதெய்வம் காளி என்று நாடார் இன மக்கள் கருதுகின்றனர்.

**50 நூல்கள்:**

இன்றைக்கு ஒவ்வொரு சாதியும் மாநாடு நடத்தியும் சாதி நூல் எழுதியும் தத்தம் பெருமையைப் பறைச்சாற்றி வருகின்றன. ஆயின், நாடார் வரலாறு கி.பி. 1871இல் தொடங்கி இன்று வரை பல்வேறு அறிஞர்களால் எழுதப்பட்டு வந்துள்ளன. ஏறக்குறைய 50 நூற்களின் பட்டியலை 1994 இல் வெளிவந்த 'தெக்ஷண மாற நாடார் சங்க பொன்விழா' மலரில் காண்கிறோம். இந்த அளவுக்கு வெளிநாட்டவரும் தமிழரும் வேறு சாதியினரை ஆய்ந்து நூல் வெளியிட்டிருக்கவில்லை.

**காசு:**

சாணார் காசு என்ற காசும் முற்காலத்தில் வழக்கத்தில் இருந்துள்ளது. சாணாங்காசு என்பது கொச்சை வழக்காகும். ஆகக் காசுகளிலும் சாணார் என்ற நாடார் இடம் பெற்றுள்ளனர் எனலாம்.

**கருமாபுரம் செப்பேடு:**

திருச்செங்கோடு வட்டம் கருமாபுர செப்பேடும் கோவை திரு முருகன் பூண்டி செப்பேடும் நாடார் அல்லது சான்றார் களின் குடிப்பெருமையினை விளக்குகின்றன. நெல்லை நெடு மாறனும் எஸ். இராமச்சந்திரனும் கண்டறிந்த பூந்துறை செப்பேடு சந்திரகுலச் சான்றோர் என நாடாரரைக் கூறுகிறது.

**திருச்செந்தூர்:**

திருச்செந்தூர் கோயிலுடன் நெருங்கிய தொடர்புடைய வர்களான சிவகாசி நாடார்கள், இக்கோயிலுக்குத் திருவாவடு துறை ஆதீனத்தின் மூலம் விழங்கிய தானம் குறித்த செப்பேடு, திருவாவடுதுறையில் இன்றும் உள்ளது.

**சிவப்பிரகாசர்**

கல்லிடைக் குறிச்சிக் கோட்டைத் தெருவில் உள்ள நாடார் குறித்த கல்வெட்டினையும் விக்கிரம சிங்கபுர நாடார் கல்வெட்டினையும் இந்நூலில் விளக்கியுள்ளேன். துறசை ஆதீனம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிகர், கல்லிடைக்குறிச்சிக் கல்வெட்டினை அடியேன் காட்டிய போது கல்வெட்டுள்ள கல்லை முதலில் காப்பாற்ற வேண்டும் என்று கருத்து தெரிவித்தார்கள்.

**கோட்டைத் தெரு**

கோட்டைத் தெருவில் தேநீர்க் கடை எதிரில் நீள் செவ்வகப் பலகைக்கல் ஒன்று நிறுத்தி வைக்கப் பட்டுள்ளது கல்லின் இருபுறமும் எழுத்துக்கள் வெட்டப்பட்டுள்ளன. கூர்ந்து நோக்கினால்தான் கல்லில் கல்வெட்டு இருப்பதே தெரியவரும். சிறப்புடைய இக்கல்வெட்டை கி.பி. 1916 இல்

மத்திய அரசு கல்வெட்டுத்துறை படியெடுத்துள்ளது. ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்க்கும் அக்கல்வெட்டின் மூலத்தை முதலில் காண்போம்.

1. கொல்லம் 628ஆடு சித்திரை மீ
2. 9 தேதி முன்னாள் நாட்டின கல்லு
3. இரண்டுக்கும் படி எடுப்பு கொ
4. ல்லம் 555 ஆடு கும்பயனாயறு
5. 14 சென்றது. நம்முடைய நாட்
6. டில் வெள்ளாழற்கு பிழைப் பே
7. பார்[1] சிலகாரிய வெள்ளை நாடரி
8. ல் சோதினை[2] உள்ளிருப்பு[3] பாசித்த
9. லை[4] விக்கிறமன் ஆதித்தன் செய்
10. கையா லேயும் நாட்டின கல்லி
11. ல் வாசகமும் 591ஆடு மீன நா
12. யறு 21 சென்றது னாட்டில் வெள்
13. ளாழற்கு பிழைப்போர் சிலகாரி
14. யம் வெள்ளைனாடரில் கணக்கு
15. கோளரி அய்யப்பனும் அய்யப்ப
16. ன் குமரனும் அண்டூர் செழியங்க
17. னும் செய்கையாலேயும் செனமு
18. ம் காரணப்பட்டவர்களும் காரிய
19. ஞ் செய்கிறவர்களும் கணக்கெ
20. ழுது கிறவர்களும் மற்றும் நாட்
21. டில் வெள்ளாழராயுள்யவர்க ளெ

22. ல்லாரும் கூடி இருந்து கற்பித்த
23. காரியம் பிழைத்தவர்கள்[5] மூவரை
24. யும் கொன்று பரிகாரம் செய்யுமா
25. றும் வெள்ளை நாடராயுள்ளவர்கள்
26. நம்மோடு கூடி கூலிச் சேவகம்[6]
27. சேவிக்க இளைப்பி[7] தென்றும் கார
28. ணப்படுகையும்[8] காரியஞ்
29. செய்கையும்[9] கணக்கெழுது கை
30. கயும்[10] தேசங்கையாளுகையும்[11]
31. இளைப்பதென்றும லகைற்பித்ததுகா[12]
32. ட்டின கல்லில் வாசகம் இம்மரிகா
33. தியும்
34. 628 ௵ சித்திரை மீ 12 நாட்
35. டின கல்லில் முன்யில் வாச
36. கத்தோடு[13] கூடி இப்போது க
37. ல் வெட்டுக் கூட்டின வா
38. சகம் வெள்ளை நாடர் தமிழ்
39. ப் பாகத்துப் பெண்கட்ட அரி
40. தென்றும் கையான அரிதென்
41. றும் பிழைத்தவர்களுக்கு பே
42. ர்வழி உதையன்ன சிவங்கான்
43. அய்யன் மார்த்தாண்டன் இரா
44. மன் சந்திர கணக்கு அய்யப்பா

45. ண்டைஇரக்க மாபோகம் கையா

46. ண்ட மாத்தாண்ட மழவராயன்

47. கோசையச்ச பணிக்கன் மாத்தாண்ட

48 மழவராயன் நம்பன் தொண்டை

49. மான் செந்தி மாத்தாண்டப் பணிக்

50. கன் கருவூகாத்தல் குன்றம்பி கோட்டூ

51. ர் முதலியன் பாப்பச்சன் மருமக்கள்

52 இருவரும் மடைக்கல முதலியான

53. மாலம்பிறச் சம்பி கடியபட்டன

54 த்து கல்டைக்கூட்டு அய்யம்பாண்

55. டை மேற்படி வகையில் மாத்தா

56, ண்டன் பிரம்மதேசத்தில் வகை

57. யில் சேவகமுள்ள ஆதித்தவன்ம ப

58, ணிக்கன் பாசித்த வலக்குறிப்பன் க

59. ண்ணம்பி இரவசமச்சன் கயத்து இராம

60. ச்சன் ஆகப்பேர் 23 ம் கண்ட இடத்து செ

61, கால்லுமாறு கல்லு வெட்டி நாட்டுலகையும்

62. நீக்கி உள்ள வெள்ளை நாடரையும் ஜலக்கு ந

63. ம் முடைய நாட்டில் போக ஒண்ணாதென

*மூன்று கல்வெட்டுகளின் தொகுப்பாக இக்கல்வெட்டினைக் குறிப்பிடலாம். மூன்றும் வெவ்வேறு காலத்தவையாகும். உத்தம சோழன் மற்றும் முதலாம் இராசராசன் காலத்தவையாக உள்ள இரு கல்வெட்டுகளின் தொகுப்பாக ஒரே கல்வெட்டாகச் திருச்சி மாவட்டம் கோவிந்தபுத்தூர் சிவன் கோயிலில் ஒரு கல்வெட்டு உள்ளது. அது போன்றதே இக்கல்வெட்டாகும்.*

**விக்கிரம ஆதித்தன்:**

முதல் கல்வெட்டின் படி 'விக்கிரம ஆதித்தன்' என்ற வெள்ளை நாடன் ஒருவன் வேளாளர்களுக்கு எதிராக இருந்துள்ளான். சோதினை, உள்ளிருப்பு, பாசித்தலை முதலான பணிகளும் (இப்பணிகள் நில வருவாய் ஈட்டும் பணிகள் போலும்) கணக்கு எழுதும் பணியும் புரிந்து ஆட்சியாளனாக இவன் இருந்து வந்துள்ளான். அவன் அவ்வாறு செய்வது சட்ட விரோதம் என்று கி.பி. 1380 இல் முடிவு செய்து கல்வெட்டாக வேளாளர்கள் வெட்டி வைத்தனர். நிர்வாகப் பணியில் விக்கிரம ஆதித்தன் வேளாளர்களுக்குத் தவறு இழைத்திருக்க வேண்டும். எனவே அவன் மீது கடுமையாக வேளாளர் நடந்து கொண்டனர். இதற்கு முன்பு வேளாளரும் வெள்ளை நாடரும் விரோதமின்றியே இருந்திருத்கலாம்.

**வெள்ளை நாடர்:**

மீண்டும் கி.பி. 1416இல் மூன்று வெள்ளை நாடார்களுக்கு எதிராக வேளாளர் தீர்மானம் நிறைவேற்றி அதையும் கல்வெட்டாகவும வெட்டி வைத்தனர். வெள்ளை நாடர் என்ற இனத்தவர் வேளாளர்களுடன் கூடிக் கூலிச் சேவகம் செய்தல் கூடாது. காரணப்படுதல், காரியம் செய்தல், கணக்கெழுதுதல், தேசம் கையாளுதல் ஆகியவற்றை செய்தல் கூடாது என்று அறிவித்தனர்.

**மரண தண்டனை:**

கோனரி ஐயப்பன், அய்யப்பன் குமரன், அண்டூர் செழியங்கன் என்ற மூவர் செயல்களால் வேளாளர் சினம் கொண்டு அவர்களுக்கு மரண தண்டனை தருகின்றனர்.

**பத்பநாபபுரம் அரண்மனை:**

மூன்றாவது கல்வெட்டு கி.பி. 1453இல் கூடியது. முன்னிரு கல்வெட்டுகளின் தொடர்ச்சி எனலாம். கல்விடைக் குறிச்சியில் இருப்பது போன்று வேறோர் கல்வெட்டு திருவிதாங்கோட்டில் முன்பு இருந்தது. தற்போது பத்பநாபபுரம் அரண்மனை அருங்காட்சியகத்தில் உள்ளது. இதுவும் காலம் கி.பி. 1453 ஆகும். இக்கல்வெட்டு வட்டெழுத்தில் உள்ளது.

ஆயின் இரண்டின் செய்தியும் ஒன்றேயாகும். மூன்றாவது கல்வெட்டின்படி வெள்ளை நாடர் என்போர் தமிழ் பாகத்துப் பெண்களை மணப்பதோ, வைப்பாட்டியாக வைத்துக் கொள்வதோ கூடாது. இக்கட்டளையை மீறியவர் கள் தண்டனைக்கு ஆளாவார்கள் என்று வேளாளர் முடிவு செய்கின்றனர். இதனைக் கல்வெட்டாகவும் வெட்டி வைக்கின்றனர்.

வேளாளர் கூடி எடுத்த முடிவுக்கு எதிராக இருந்த கீழ்க் கண்ட 23 நபர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. இத்தண்டனை மிகவும் கடுமையானதாகும். தண்டனை பெற்றவர்கள் வருமாறு

1. உதையன்ன சிவங்கான அய்யன்,

2. மாத்தாண்டன் இராமன்,

3. சந்திரக் கணக்கு,

4. அய்யப்பாண்டை,

5. மாத்தாண்ட மழவராயன்,

6, கோசையச்ச பணிக்கன்.

7. மாத்தாண்ட மழவராயன்,

8. நிம்பன்,

9. தொண்டைமான்,

10. சென்தி மாத்தாண்ட பணிக்கன்,

11. கருவுகாத்தல் குன்றம்பி,

12. கோட்டூர் முதலியான்,

13.14. பாப்பச்சன் மருமக்கள் இருவர்,

15. மடைக்கல முதலியான்,

16. மாலம்பிறச்சம்பி,

17. கடியபட்டணத்து அய்யம் பாண்டை,

18. மேற்படிவகையில் மாத்தாண்டான்,

19. பிரம்மதேசவகையில் சேவகமுள்ள ஆதித்தவன்ம பணிக்கன்,

20. பாசித்தலைக் குறிப்பன்,

21. கண்ணம்பி,

22. இரவச மச்சன்,

23. கயத்து இராமச்சன்,

மேற்கண்ட இருபத்து மூன்று பேரையும் கண்ட இடத்திலேயே கொல்லும்படி கல்வெட்டு வாசகம் அமைந்துள்ளது. கி.பி. 14,15 ஆம் நூற்றாண்டுகளில் சமூக அமைப்பு எவ்வாறு இருந்தது என்பதை அறிய இக்கல்வெட்டு துணைபுரிகிறது. தமிழ்ப் பாகத்தில் பெண்களை மணந்து கொள்ளுதல், பெண்களை ஆசை நாயகியாக வைத்துக் கொள்ளுதல், வேளாளர்களோடு கூடி சேவகம் செய்தல், காரணப்படுதல், காரியப்படுதல், பறைதல், கணக்கு எழுதுதல், தேசம் கையாளுதல் போன்ற செயல்களை இக்கல்வெட்டின் காலத்திற்கு முன் வெள்ளை நாடர் செய்து வந்தனர் எனலாம். வெள்ளை நாடர் என்போர் கேரள நாட்டு ஆட்சியாளரான திருப்பாப்பூ மன்னர் மரபில் வந்தவர் போலும். கல்லிடைக் குறிச்சியில் கோட்டைத் தெருவில்தான் இவர்களுடைய அரண்மனை இருந்துள்ளது. திருப்பாப்பூ மன்னர் குறித்து வேறோர் இடத்தில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளேன்.

### சிற்றரசர்

மூவேந்தவர் ஆட்சி முடிவுற்ற காலத்தில் ஆங்காங்கிருந்த வலிமை வாய்ந்த சாதியார் அதிகாரம் செலுத்த முற்பட்டனர். நெல்லை, குமரி போன்ற பகுதிகளில் நாடார்கள் நிர்வாகத்தில் இருந்தார்கள் போலும். இக்குறுகிய காலத்தில் விஜயநகர மன்னர் படை எடுத்து வந்து வென்று நாட்டை முழுமையாக ஆள முற்பட்ட போது நாடார் சிலரின் செயல்களால் வெள்ளாளர்கள் பலரும் ஒன்று கூடி நாடார்களை எதிர்த்துள்ளார்கள்.

குறிப்பாக வெள்ளை நாடார்களுக்கு எதிராகப் பல நடவடிக்கைகளை வேளாளர்கள் மேற்கொண்டுள்ளனர். நெல்லை, குமரி உள்ளிட்ட பகுதிகளில் வேளாளர்களுக்கும் நாடார்களுக்கும் இடையில் அரசுப் பணிகள் தொடர்பாகவும் பகைமை ஏற்பட்டுள்ளது. விஜய நகரப் பேரரசு எழுச்சி பெற்றபின் அவர்களின் உதவியுடன் வேளாளர்கள், நாடார்களை எதிர்த்திருக்கலாம். கி.பி. 14,15ஆம் நூற்றாண்டுகளில் நாடார்களை, வேளாளர்கள் எதிர்த்த போதிலும் கி.பி.17 ஆம் நூற்றாண்டில் அவர்களுக்காக இரக்கம் கொண்டு உதவியும் செய்துள்ளனர். கி.பி. 1662 இல் வெட்டப்பட்ட திருமலை நாயக்கரின் கல்வெட்டொன்று விக்கிரமசிங்கபுரத்தில் உள்ளது. உய்யக் கொண்டாரான வலங்கைப் பிரிவில் கூடிய செவந்திநாடன் என்பவன் நொந்து கெட்டுப் போனதால் அவனுடைய விளை நிலங்களுக்கு வரிகள் குறைக்கப்பட்டன. செவந்தி நாடனும் மற்றுமுண்டான நாடார்களும் வேளாண்மை செய்து வந்தமை இக் கல்வெட்டால் அறிகிறோம்.

கோட்டைத்தெருவில் உள்ள மேற்கண்ட கல்வெட்டிற்குப் பின் வெட்டப்பட்ட கல்லிடைக்குறிச்சிக் கல்வெட்டுகளில் நாடார் குறித்து குறிப்பேதுமில்லை. எனினும் பல்வேறு சாதி மக்களுடன் நாடார் இன மக்களும் பெருமளவில் கல்லிடைக் குறிச்சியில் தற்போது வாழ்ந்து வருகிறார்கள். வேறு ஊர்களில் நாடார் குறித்து ஆதாரங்கள் உள்ளன.

## விக்கிரமசிங்கபுரம் கல்வெட்டு

விக்கிரமசிங்கபுரம் கீழ ரத வீதியில் உள்ள பூதத்தார் கோயில் எதிரில் நடப்பட்டுள்ள தூணில் செவந்திநாடன் கல்வெட்டு உள்ளது.

1. சுபகிறதுஹு 838ஹு புரட்டாசி
2. மாதம் 13 ஆம் தேதி உத்தர நட்செத்திர
3. த்தில் சனி வாரமும் முள்ளிநாட்
4. டில் விக்கிரம சிங்கபுரம் வல
5. ங்கை உய்யகொண்டார்க

6. களில் பெரும்பற்றுச் செவந்தி
7. நாடான் மற்றுண்டான பேர்க
8. ள் நொந்து கெட்டு போனப
9. டியினாலே வடமலை
10. யய்யப் பிள்ளை அய்யனும்
11. இவரது ...... பியகரும்
12. தானப்ப முதலியாரும்
13. இலக்கச்சனான் பிள்ளை
14. களும் பிள்ளை முத்தா பிள்ளை
15. ......ய பிள்ளை விக்கிரசி
16. ங்கபுர ஊர் அவரும் இவர்கள்
17. புண்ணியமாக பகுதிகார் அறுப
18, த்து நாலு பொன்னும் 5 பசா
19. னம் அறுபத்து இரண்டு பொன்னு
20. ம் இந்த படிக்கு சந்திரசூரியன்
21. உள்ளமட்டும் இந்தபடி கட்டளையி
22. ட்டோம் இதுக்குமேல் விலகாம
23. செய்தவன் வேண்டு கொண்டு ந
24. ல்லவன் பிடியாத் துண்டும் இது
25. வேண்டாமென்று கட்டளையிட்டே
26. ாம் இப்பொழுது இருக்கிற குடியல்லா
27. மல் இனிமேல் வருகிற குடிகளும் இங்
28. த பகுதிக்குள்ளாகக் கட்டளை இட்டோ

29. ம் இதுக்கு மேல் ஆராகிலும் அகிதம் ப

30. ண்ணினவர்கள் கெங்கைக் கரையிலே

31. காராம் பசுவைக் கொன்ற தோஷத்தி

32. லே அடைந்து போவாராகவும் இந்தப.

இந்தக் கல்வெட்டை மத்திய அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை 1916இல் படியெடுத்து, ஆண்டறிக்கையில் வெளியிட்டது. நெல்லை நெடுமாறன். ஆண்டறிக்கையின் அடிப்படையில் மைசூர் மத்திய அரசு கல்வெட்டுத்துறைக்குச் சென்று கல்வெட்டின் மூலத்தை நகல் பெற்று நாகர்கோயில் கருத்தரங்கு ஒன்றில் பேசி உள்ளார். கட்டுரையும் வெளியிட்டுள்ளார். உள்ளூர் மக்களுக்கும் இக்கல்வெட்டு இருப்பது தெரியாதது வியப்பேயாகும். எழுத்துகள், தூணின் இரு பக்கங்களில் உள்ளன. ஒரு பகுதி பூமியில் புதையுண்டுள்ளது. கல்வெட்டின் திரண்ட கருத்தினைக் காண்போம்.

**உய்யக் கொண்டார்:**

கி.பி. 1662இல் அதாவது கொல்லம் 838உம் சுபகிறது ஆண்டுமாக உள்ள வருடத்தில் புரட்டாசி மாதம் 13ஆம் தேதி உத்திர நட்சத்திரத்தில் சனிக்கிழமையன்று விக்கிரம சிங்கபுரத்தில் வாழும் வலங்கை உய்யக் கொண்டார்களில் பெரும்பற்றுச் செவந்தி நாடான் மற்றுண்டான பேர்கள் நொந்து கெட்டுப் போனபடியால் வடமலை மற்றுமுண்டான பேர்கள் விக்கிரமசிங்கபுர ஊரவருடன் கூடி வரிகுறைத்து வழங்க முடிவெடுத்துள்ளனர்.

**திருமலை நாயக்கர்:**

வரி குறைப்பு செய்த வடமலையப்பர் காலத்தில் மதுரை நாயக்கராகத் திருமலை நாயக்கர் இருந்துள்ளார். பாபநாசத்தில் உள்ள கல்வெட்டில் திருமலையின் பெயரும் வடமலையப்பர் பெயரும் ஒருங்கே காண்கிறோம்.

**வலங்கை உய்யக்கொண்டார்:**

விக்கிரமசிங்கபுரம் கல்வெட்டில் வந்துள்ள வலங்கை உய்யக்கொண்டார், நாடான் என்ற இரண்டு சொற்களும் நாடார் அல்லது சான்றார்களுடன் தொடர்புடையவை ஆகும். வலங்கை என்ற சொல்லும் இடங்கை என்ற சொல்லும் படைப்பிரிவினரைக் குறிப்பிடும். இருபிரிவிலும் வலங்கைத் தொன்மை வாய்ந்தது. ஸ்ரீராஜராஜ தேவர் வலங்கைப் பழம்படை (தெ.க. தொ. 22 கல் 35) என்ற வரியைக் கல்வெட்டொன்றில் காண்கிறோம். தொடக்கத்தில் மன்னருக்கு உதவியாக இவ்விரு படைகளும் இருந்தன. பிற் காலத்தில் இவ்விரு பிரிவினரும் உரிமைகள் தொடர்பாக ஒருவரையொருவர் எதிர்த்துள்ளனர். வலங்கைப் பிரிவில் நாடார் இனத்தவரும் இருந்துள்ளனர்.

பிற்காலத்தில் வலங்கை வரி, இடங்கை வரி, சாணார்வரி சில செப்பேடுகளில் அடுத்தடுத்து உள்ளன. எனினும் நாடார் அல்லது சான்றார் வலங்கை உய்யாரகொண்டார் என்ற பிரிவில் அடங்குவர். பரிக்ரஹமணி, கிராமணி, சொற் களுடன் உய்யக்கொண்டாரைத் தொடர்புபடுத்தலாம். நாடார் வகுப்பைச் சார்ந்தோர் உய்யக்கொண்டார் எனவும் வழங்கப்பட்டுள்ளனர். பலபொருள் குறித்த ஒரு சொல்லாக உய்யக்கொண்டார் இருந்துள்ளது. உய்யக்கொண்டார் என்பது ஒருவகுப்பின் பெயராகவும் உய்யக்கொண்டான் தனிநபர் ஒருவரின் பெயராகவும் காண்கிறோம். இராசராச னுக்கு 'உய்யக்கொண்டார்' என்ற விருதுப்பெயர் இருந்துள்ளது. இப்பெயரில் வளநாடும் இருந்துள்ளது.

**கடந்தைப் புராணம்:**

பெண்ணாகடம் என வழங்கப்படும் திருக்கடந்தைத்தலம் தொடர்பாக ஓர் புராணம் உள்ளது. உரையுடன் கூடிய இப்புராணத்தில் விநாயகர் காப்புச்செய்யுளுக்கான உரையில், சிவபெருமான் திரிபுரம் எரித்ததைக் குறிப்பிடும்போது விஷ்ணுவின் மாய்கையில் ஏமாறாமல் சிவலிங்கங்களைச் சிரசிலும் ஆபரணத்திலும் புயத்திலும் தரித்திருந்த திரிபுராதிகள் எரிக்கப்பட வில்லை என்று காண்கிறோம்.

மூவரில் ஒருவர், அர்த்த ஜாம அழகராகவும் மற்றொருவர் ஆட்கொண்டாராகவும் மூன்றாமவர் உய்யக்கொண்டா ராகவும் மாறி, சிவனை வழிபட்டு சிவகணம் ஆனார்கள் என்று பார்க்கிறோம். திரிபுராதிகள் குறித்து வேறுவகை யாகவும் சில புராணங்கள் குறிப்பிட்டுள்ளன.

**வைணவமரபில் உய்யக்கொண்டார்**

ஆளவந்தாரின் சீடராக உ ய்யக்கொண்டார் என்பவர் இருந்துள்ளார்.

**செப்புத் திருமேனி:**

திருநாகீஸ்வரம் கோயிலில் முதல் இராசேந்திரன் ஆட்சி யாண்டு 14இல் இருந்த செப்புத் திருமேனிகளுள் ஒன்றின் பெயராக 'உய்யக் கொண்டார்' இருந்துள்ளது. 'ஸ்ரீபலி எழுந்தருளும் உய்யக் கொண்டார்க்குச் சாத்தியருளச் செய்த திருப்பொற்பூ' (தெ. கல், தொ 6 கல் 83) என்று கல் வெட்டுள்ளது. உய்யக் கொண்டாரே கமலாட்சன், மகா காளான் என்றும் குறிப்பிடலாம். இவன் துவார பாலகர்களில் ஒருவன் ஆவான். உய்யக் கொண்டாராகிய சிவ கணத்தின் மரபினராக 'உய்யக் கொண்டார்' என்று நாடாரைக் கருதலாமோ? என்ற ஆசங்கை எழுகிறது.

**பெரும்பற்று:**

பெரும்பற்று என்ற சொல்லும் விக்கிரம சிங்கபுரக் கல்வெட்டில் உள்ளது. இவ்விடத்தில் நிலக்கிழாராகிய நாடாரை இச்சொல் குறிப்பிடுகிறது. சிதம்பரத்திற்குத் தில்லை என்ற பெயருடன் பெரும்பற்றப்புலியூர் என்ற பெயரும் முன்பு இருந்துள்ளது. பெரும்பற்றப்புலியூர், நாடாருடன் தொடர்புடைய ஊராக இருந்திருக்கலாம் என்று காப்பாட் சியர் இராமச்சந்திரன் கருதுகிறார்.

**வரிகுறைப்பு:**

பற்று என்ற சொல்லும் பல பொருள் குறித்த ஒரு சொல்லாக உள்ளது. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு களில் இவ்வின மக்கள் குறிக்கப்பட்டுள்ளனர்.

அடிக்குறிப்பு:

1. வெள்ளாளற்குப் பிழைப்போர் என்க. தமக்குப் பிழை செய்யும் அல்லது தமது நடவடிக்கைகளில் தலையிட்டு அதிகாரம் செய்யும் வெள்ளை நாடர்களையும் அவர் களுக்கு உதவியாகப் பணி செய்த பேர் வழிகளையும் வேளாளர் எதிர்த்து சில முடிவுகளை எடுக்கின்றனர்.
2. சோதினை–Inspection?
3. உள்ளிருப்பு–Search warrant?
4. பாசித்தலை–arrest செய்யும் உரிமை? பாசி என்பது பாசம் பாசச் கயிறு எனப்படும். விலங்கினை அதா வது hand cuff ஐ குறிக்கக் கூடும். விஜய நகர அரசில் தண்ட பாசி எனப்படும் காவல் துறை அதிகாரி இருந்துள்ளார்.
5. கற்பித்த காரியம் பிழைத்தவர்கள் – உத்தரவிற்கு மாறாக நடந்தவர்கள்
6. கூலிச்சேவகம்– ஊதியத்திற்கு உழைத்தல் (அரசுப்பணி)
7. இளைப்பது–கூடாது.
8. காரணப்படுதல்–உத்தரவு போடுதல்?
9. காரியப்படுதல்–ஆணை நிறைவேற்றுதல்?
10. கணக்கெழுதுதல்–கரணத்தின் வேலை.
11. தேசம் கையாளுகை–உள்ளூர் நிர்வாகம் செய்தல்?
12. கைற்பித்து–கற்பித்து
13. முன்பில் வாசகம் – பழைய கல்வெட்டுகள்.

தண்டனைக்காளான 23 பேர்களில் நாடார் மட்டுமின்றி வேறு சாதியினரும் உள்ளனர். பத்பநாபபுர அரண்மனையில் உள்ள வெள்ளை நாடார் கல்வெட்டில் 23 பேர்களில் சில மாற்றமுண்டு. திருவாலீஸ்வரம் கோயிலில் உள்ள சோழ பாண்டியர் கல்வொட்டொன்றில் வெள்ளப்ப நாடாழ்வான் என்ற அதிகாரி இடம் பெற்றுள்ளான். எனவே சோழர் காலத்தொடங்கி வெள்ளை நாடர் என்போர். இருந்திருக்க வேண்டும் எனலாம்.

# கைக்கோளர்களும் கல்வெட்டுகளும்

**கைக்கோளமக்கள்**

கல்லிடைக் குறிச்சிக் கல்வெட்டுகளில் இடம் பெற்ற கைக்கோளர்கள் குறித்தும் கைக்கோளர்களுக்குச் சொந்தமான கோயில்கள் குறித்தும் ஏற்கனவே ஆய்வு செய்துள்ளோம். தென் பாண்டி நாடு மட்டுமின்றித் தமிழ் நாடெங்கும் இவ்வின மக்கள் இன்று வாழ்ந்து வருகின்றனர். ஆய்வாளர்கள் இவ்வின மக்கள் குறித்து ஆய்வு செய்துள்ளனர். எனினும் கல்லிடைக் குறிச்சி மற்றும் அம்பா சமுத்திரம் ஊர்களில் வாழும் இவ்வின மக்கள் தங்களுக்குச் சொந்தமான கோயில்களின் வக்லாற்றினை அறியாதது போலவே தங்கள் இன வரலாற்றையும் வரலாற்று ரீதியில் அறிந்திருக்கவில்லை. அம்மக்களுக்குப் பயன்படும் வகையில் கல்வெட்டுகளின் அடிப்படையில் கைக்கோளர் குறித்து ஒரு சில செய்திகளைக் குறிப்பிடுகிறேன்.

**படைப்பிரிவு:**

சோழர் காலத்தில் கைக்கோளர்கள் போர் வீரர்களாக இருந்துள்ளார்கள். வீரர்களாக மட்டுமின்றி நெசவுத் தொழில் செய்பவராகவும் இருந்துள்ளார்கள். இவ்விரண்டுக்கும் சான்றாகப் பல கல்வெட்டுகள் உள்ளன.

**இராஜராஜன்:**

ஸ்ரீராஜராஜ தேவர் கைக்கோளப்படையில் பிராந்தகந் தெரிஞ்ச கைக்கோளரும் சூத்திரசோழந் தெரிஞ்ச கைக்கோளரும் பாண்டிய குலாசநித் தெரிஞ்ச கைக்கோளரும் இருந்துள்ளனர்.

**கைக்கோளப்படை:**

வலங்கை, இடங்கையுடன் கைக்கோளப் படையும் சேர்ந்து மூன்று கைசேனை அக்காலத்தில் இருந்துள்ளன. வலங்கைப் பிரிவில் கைக்கோளர் இருந்ததாகச் சில கல்வெட்டுகளில் காண்கிறோம் 'இடங்கைச் சமயம் இனிது நடத்துகிற கைக்கோளராகவும்' சில கல்வெட்டுகளில் காண்கிறோம். கைக்கோளர்களுக்கும் புராண வரலாறு உண்டு. கவிச்சக்கரவர்த்தி

ஒட்டக்கூத்தர் இம்மரபில் வந்தவர் ஆவார். சோழர்காலத்தில் செல்வாக்குடன் இருந்த கைக்கோளர் பிற்காலத்தில் குறிப்பாக விஜயநகர அரசர் காலத்தில் உரிமைகளுக்காகப் போராடி உள்ளனர்.

**வியாபார வர்க்கம்:**

விஜயநகர அரசர் காலக் கல்வெட்டுகளின் மூலம் கைக்கோளர்கள் வியாபார வர்க்கத்தைச் சார்ந்த ஒரு பிரிவினராகக் காண்கிறோம். இவர்கள் வாணியர், செட்டிகளுடன் சேர்ந்து கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளனர். குடி, பரதேசி, பல பட்டடை என மூன்று பிரிவினராகக் கைக்கோளர் இருந்துள்ளனர். கொடும்பாளூர் கோயிலுக்குக் கைக்கோளரும் கைக்கோள முதலிகளும் ஐந்து குடிகாடுகளை விற்றுத் தந்துள்ளனர் என்பதை ஒரு கல்வெட்டின் மூலம் அறிகிறோம். ஆகவே குடி என்ற பிரவைச்சாரந்தோர் பயிர்செய்து வந்த கைக்கோளர் எனலாம்.

பரதேசி என்போர் பிற ஊர்களிலிருந்து வந்த கைக்கோளர்கள் எனலாம். வரி கட்டமுடியாமலும் வரி மிகுதிக்கு எதிர்ப்பு தெரிவித்தும் கைக்கோளர்கள் ஊரைவிட்டே சென்றுள்ளதைச் சில கல்வெட்டுகளில் காண்கிறோம். இத்தகையோரே பரதேசி எனலாம்.

பல பட்டடை என்போர், நூல் நூற்பது, தறி அடிப்பது போன்ற செயல்களுடன் தமக்கு வேண்டிய நூல் போன்றவற்றைப் பட்டணம் சென்று வாங்கி வருபவராகக் குறிப்

பிடலாம். திருக்கழுகுன்ற கல்வெட்டொன்று பட்டணம் சென்று தமக்குரிய சரக்குகளைக் கைக்கோளர் வாங்கி வந்ததாகக் குறிப்பிடுகிறது. நெய்த துணியைப் பட்டணத்துக்கு எடுத்துச் சென்றும் இவர்கள் விற்றுள்ளனர். எனவே இவர் களை வியாபார வர்க்கத்தில் சேர்ப்பது பொருத்தமேயாகும்.

**வாழும் இடங்கள்:**

கைக்கோளர்கள் பெரும்பாலும் திருமடை விளாகத்தில் குடியேறினர். கோயிலைச் சார்ந்த திருநாமத்துக் காணி ஊர்களில் வசிக்கத் தொடங்கினர். இவர்கள் குடியேறும் பிற இடங்கள் பேட்டைகள் என வழங்கப் பட்டுள்ளன. திருவோத்தூர் அருகே பேட்டை உள்ளது. நெல்லை, சேலம் போன்ற நகரங்களிலும் பேட்டைகள் உள்ளன. சென்னை மாநகரில் பல பேட்டைகள் இருப்பதை நாமறிவோம்.

**வரி விகிதம்:**

கைக்கோளர் விற்பனைச் செய்யும் துணிகளுக்குக் கட்டுக் குத்தகையாக வருடத்துக்கு ஆறுபணம் நிச்சயிக்கப்பட்டதாகச் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவர்கள் செலுத்தும் வரி, தறிக்கடமை என்றும் இவர்கள் குடியிருக்கும் இடங்களுக்குச் செலுத்தும் வரி, வாசல் பணம் எனவும் வழங்கப்பட்டுள்ளன. பொதுவாக மாதத்திற்கு $\frac{1}{2}$ பணம் விதம் ஆண்டிற்கு 6 பணம் வரி வசூலிக்கப்பட்டாலும் திருவோத்தூர் கல்வெட்டில் $6\frac{1}{4}$ பணம் வசூலிக்கப்பட்டதை அறிகிறோம் வாசல்பணம் இரண்டுடன் சேர்த்து $8\frac{1}{4}$ பணம் வசூலிக்கப் பட்டுள்ளது. சில சமயங்களில் கைக்கோளர்களுக்கு வரி

விகிதம் குறைக்கப்பட்டுள்ளது. மாதத்திற்கு ¼ பணம் வசூலித்ததைச் சில கல்வெட்டுகளில் காண்கிறோம். சில சமயங்களில் வரி அதிகமாக்கப்பட்டுள்ளன. அச்சமயங்களில் கைக்கோளர்கள் வெளியூர்களுக்குச் சென்றுள்ளமையும் சில கல்வெட்டுகளின் மூலம் அறிகிறோம்.

வீரபொக்கன்ன உடையார் காலத்தில் கைக்கோளர் சேனைக் கடையார், வாணியர் ஆகியோருக்கு அபராதமாக 100 பணம் விதிக்கப்பட்டதாக ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.

**தேவரடியார்:**

தேவரடியார்களில் கைக்கோள மரபைச் சேர்ந்த பல பெண்களைக் கல்வெட்டுகளில் காண்கிறோம் பொன்னமராவதி கல்வெட்டில் ஸ்ரீவராககண்டிய தேவன் மற்றும் அவர் குடும்பத்தாரைக் காண்கிறோம். செப்பேடுகளின் மூலமும் கைக்கோள மரபில் வந்த தேவரடியார்களைக் காண்கிறோம். இவர்கள் கோயில்களுக்குத் தானங்கள் அளித்துள்ளார்கள்.

**விருதுகள் :**

கைக்கோளர்களுக்குரிய விருதுகளை இலை வாணியர் புனைந்து கொண்டபோது இதற்கு எதிர்ப்பு தெரிவித்து. வில்லியனூரில் வாழ்ந்த கைக்கோளர் ஊரைவிட்டே வெளியேறினர். மன்னரின் பெருந்தரத்து அதிகாரியான 'விசயராயர்' என்பவர் இது குறித்து விசாரணை செய்தார்.

காஞ்சிபுரத்தில் இருந்த செப்பேட்டின்படி கண்டியதேவன் காலிங்கராயன், பட்டமானங்காத்தான், உலகெலாம் வென்றான் போன்ற விருதுகள் கைக்கோளர்களுக்கே உரியவை என்று கி.பி. 1542 இல் அதிகாரி தீர்ப்பளித்து, கல்வெட்டாகவும் வெட்டி வைத்துள்ளார்.

## மடாபத்தியம்

சிவகங்கை வட்டம் சோழபுரத்தில் உள்ள கல்வெட், டொன்றின் மூலம் 15—11—1573இல் வாசுதேவநல்லூர் சிந்தாமணி நாதன் கோயில் கைக்கோளரில் பட்டர் அழகருக்கு மடாபத்தியமும் மடாபத்தியக் கணக்கு ஆட்சையும் வழங்கப் பட்டுள்ளன. திருவோத்தூரில் உள்ள ஒரு கல்வெட்டின் மூலம் காலாண்டர் தெரு வில் இருந்த கேதாரி நாதர் மடத்திற்குப் பல்லவராச சிவனாகிய காங்கேயர் நிலமும் மனையும் வழங்கியதைக் காண்கிறோம். இவர் கைக்கோளர் ஆவார்.

## பிரிவுகள்:

கைக்கோள முதலிகளில் பல பிரிவுகள் உள்ளன. சோழிய முதலி, ரெட்டுக்கார முதலி, சிறுதாலி, பெருந்தாலி, சீர்பாதம், சேவகவிருத்தி என்ற ஆறு பிரிவு முக்கியம் எனலாம். மேலும் ஒத்தக்கார முதலி, வெள்ளைக்கார முதலி, என்ற பிரிவு களையும் காண்கிறோம். இவர்கள் கொங்குப் பகுதியில் வாழ்கின்றனர்

**காஞ்சி:**

தமிழ் நாடெங்கும் கைக்கோளர் வாழ்ந்தாலும் காஞ்சிபுரமே இவர்களுக்குத் தலைமை இடம் எனலாம். மஹாநாட்டான், பெரிய தனக்காரன், பட்டக்காரன் போன்ற பதவிகள் கைக்கோளர்களிடையே உள்ளன. காஞ்சியில் இன்றும் கைக்கோளார் மிகுதியாக வாழ்வதைப் பார்க்கிறோம். முருக வழிபாட்டில் பெரிதும் ஈடுபாடுடைய கைக்கோளர்கள் பல கோவில்களில் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து வருகின்றனர். செட்டியார்களைப் போலவே பல கோவில் களின் திருப்பணிகளில் இவர்களின் பங்கு குறிப்பிடத் தக்கவை எனலாம்.

**மார்த்தாண்டான்:**

கல்லிடைக்குறிச்சி ஞானபிரான் கோயிலைச் சேர்ந்த மார்த்தாண்டான் என்ற கைக்கோளன், கி.பி. 1523 இல் கார்த்திகை விளக்கு வைக்க தானம் தந்துள்ளான்.

**சடையப்பமுதலி:**

மானேந்தியப்பர் கோயில் திருநாட்செலவுக்கு முதலி தயினாருள் கல்லிடைக்குறிச்சி நாட்டவரும் பலபட்ட டையாரும் தன்மதான பிரமாணம் எழுதித்தந்துள்ளதை

ஒரு கல்வெட்டில் காண்கிறோம். கைக்கோளர் (கைக் கொள்ளுவார் என்று கல்வெட்டில் உள்ளது) பெருமக்களைக் குடியேற்றிவிச்சு கொண்ட தறிக்கடமையும் ஆள்கூலியும் இக்கல்வெட்டில் குறிக்கப்படுகின்றன. ஆள்கூலி என்பது 'பேர்க்கடமை' என்ற வரியாகும். இக்கல்வெட்டில் வரும் சடையப்பமுதலி, மானேந்தியப்ப முதலி ஆகியோர் கைக் கோளமுதலிகள் எனலாம்.

**சுப்பிரமணியர்:**

மானேந்தியப்பர் கோயில்தவிர சுப்பிரமணியர் கோவில் திருப்பணியிலும் இவ்வின மக்களின் பங்கு பெரிதாகும். இவ்விரு கோயில்களை யொட்டி இவ்வின மக்கள் மிகுதியாக வாழ்கின்றனர்.

**சீபண்டாரம்:**

குலசேகரமுடையார் கோயில் சீபண்டாரக்கணக்காக இருந்த கலியுகத்துமெய்யனை நீக்கி விட்டு, உடைய குட்டி என்ற கைக்கோளனை 1526 இல் இராமன் என்ற அதிகாரி நியமித்துள்ளார். இந்த உடையகுட்டி, குலசேகரமுடையார் கோயிலுடன் நாலாயிர ஈஸ்வரமுடையார் கோயில், பெரிய பிரான் கோயில், கரியமாணிக்க ஆழ்வார் கோயில் என்ற வேறு கோயில்களுக்கும் சீபண்டாரக் கணக்காக இருந்துள்ளார்.

**அம்பாசமுத்திரம்:**

கல்விடைக்குறிச்சியில் இருப்பது போன்றே அம்பாசமுத்திரத்திலும் கைக்கோளர்களுக்குச் சொந்தமான அகஸ்தியர் கோயிலில் கல்வெட்டு உள்ளது. வேளாக்குறிச்சி என்ற ஊர்ப்பெயரும் சிவராமநாதர் என்ற தனிநபர் பெயரும் கல்வெட்டில் உள்ளன. இதே ஊரில் உள்ள இலட்சுமி நாராயணர் கோயில் கல்வெட்டுகளின் மூலம் அக்காலத்தில் கைக்கோளர்கள் பெற்றிருந்த உரிமைகளைக் காண்கிறோம்.

அம்பாசமுத்திரம் அகஸ்தியர் கோயிலில் ஆண்டுதோறும் பங்குனிமாதம் அன்னம் சொரிதல் என்ற விழா சிறப்பாக நடை பெறுகிறது. கைக்கோளர்கள் விழாவில் பெருமளவில் கூடுகின்றனர். சப்தரிஷிகளுக்கு உணவு படைக்கப்படுகிறது. அகஸ்திய முனிவரை இவ்வின மக்கள் பெரிதும் போற்றுகின்றனர். முருகரை இவ்வின மக்கள் போற்றுவது நாமறிந்ததேயாகும். கல்லிடைக்குறிச்சியில் உள்ள பகழிக்கூத்தர் கோயில் கல்வெட்டுகளைப் பாதுகாப்பதுடன் இக்கோயிலைப் புதுப்பிக்க இவ்வின மக்கள் முன்வரவேண்டுமென்று வேண்டுகிறேன்.

**அடியேன்விருப்பம்:**

புதிய கோயில்கள் கட்டுவதற்குப் பதிலாகச் சிதைந்த நிலையில் வழிபாடின்றி இருக்கும் கோயில்களைக் கல்லிடைக் குறிச்சி மக்கள் திருப்பணி செய்து வழிபாடு செய்ய வேண்டும் என்பதே என் விருப்பமாகும். இந்து சமய அறநிலையத்துறையும் இப்பணிக்கு உதவவேண்டும்.



# சொல்லடைவு




ச.கிருஷ்ணமூர்த்தி
எம்.ஏ.,பி.எட்.,






# கல்லிடைக் குறிச்சி

அர்த்த நாரி-மரச்சிற்பம் / கனகசபாபதி

தளிகைமடம் / கற்சிற்பம்-சின்னப்பட்டம்